

பிள்ளைலோகாசார்யர் அருளிய

# முமுக்ஷுப்படி

(மாமுனிகளின் வ்யாக்யானத்துடன்)

[முகவுரை ப்ரமாணத்திரட்டுடன் கூடியது]

[இரண்டாம் பதிப்பு]



பதிப்பாசிரியர்:-

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்,

'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.



விலை ரூ. 4-50. தபால் 75பை.

W

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீஸூக்திமாலா — மலர் 19

ஆசார்யாக்ரேஸரரான
# பிள்ளை லோகாசார்யர்
திருவாய்மலர்ந்தருளிய

# முமுக்ஷுப்படி
என்னும் ரஹஸ்ய ரத்நமும்

இதற்கு
மணவாள மாமுனிகள் அருளிச்செய்த
# திருமந்த்ரார்த்தம்
என்னும் வ்யாக்யாநமும்

பரமகாருணிகரான
பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த
# தத்வத்ரயஸங்க்ரஹம்
என்னும் ரஹஸ்யமும் அடங்கியது.

[முகவுரை ப்ரமாணத்திரட்டுடன் கூடியது]
[இரண்டாம் பதிப்பு]

பதிப்பாசிரியர்:—

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,
அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சிராப்பள்ளி-17.

விலை ரூ. 3-00. தபாற்கூலி 55 பைசா.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

M

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# முதல் பதிப்பின் முகவுரை

1. ஸர்வதா4ரி ஆனியில் பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிய பரந்தரஹஸ்யம் முதலான எட்டு ரஹஸ்யக்3ரந்த2ங்கள் அஸ்மத்தாதபாத3ர்களால் வெளியிடப்பட்டன. அப்போது அகப்படாததும், பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையருளியதுமான தத்வத்ரய ஸங்க்3ரஹமென்னும் ரஹஸ்யமும், ஸர்வஜ்ஞஸார்வபௌ4மரான பிள்ளைலோகாசார்யரருளிய முமுக்ஷுப்படியென்னும் ரஹஸ்யரத்நமும், அதற்கு விஶத3வாக்சிகா2மணியென்னும் விருது பெற்ற ஸ்வாமி மணவாளமாமுனிகளருளிய திருமந்த்ரார்த்த2 வ்யாக்2யானமும் ஸ்ரீஸூக்திமாலை பத்தொன்பதாவது மலராக விளம்பி ஆவணி ரோகிணியில் வெளியிடப்பெறுகிறது.

2. ரஹஸ்யத்ரய ஸங்க்3ரஹமென்னும் அதிக3ம்பீ4ர ஸ்ரீஸூக்திகளைக்கொண்ட இந்த கிரந்தத்திலுள்ள சில வாக்கியங்கள் தத்வத்ரய வ்யாக்2யானத்தில் மணவாளமாமுனிகளால் எடுக்கப்பட்டிருக்கின்றன. இதற்குத் தத்வத்ரய விவரணமென்னும் வியாக்கியானமொன்று ஆச்சான்பிள்ளை தம்மாலேயே அருளிச்செய்யப்பட்டுள்ளதென்றும் தத்வத்ரய வியாக்கியானத்திலிருந்தே தெரிகிறது. தத்வத்ரய விவரணத்திலிருந்தும் மாமுனிகள் பல வாக்கியங்களை எடுத்திருக்கிறார். தௌர்பாக்கியவசத்தால் அந்த அத்3பு4தவிவரணக்3ரந்த2ம் எங்கு தேடியும் கிடைக்கவில்லை. 'ரஹஸ்யத்ரய ஸங்க்3ரஹம்' மதருஸ் ஓரியண்டல் மானுஸ்க்ரிப்ட்ஸ் லைப்ரரியிலுள்ள ஒரு ஓலை ஸ்ரீகோஶத்திலுள்ளது. அதைக்கொண்டே இப்போது இது அடியேனால் அச்சிடப்பெற்றுள்ளது. இது பெரியவாச்சான்பிள்ளையருளியதே என்பதை மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு மேலே நிரூபிப்போம்.

3. பெரியவாச்சான்பிள்ளை பல ரஹஸ்யங்கள் அருளியிருந்தபோதிலும் அவற்றில் பெரும்பான்மையானவை ஸங்

க்₃ரஹமானவை. மிகவிரிவான பலரஹஸ்யக்₃ரந்த₂ங்களை முதன்முதலாக அருளிச்செய்தபெருமை பிள்ளைலோகாசார்யர் ஒருவருக்கே உரியதாகும். அவற்றிலும் முமுக்ஷுப்படி என்னும் ரஹஸ்யம், ரஹஸ்யத்ரயத்தின் அரும்பொருள்களனைத்தையும் பேதைபாமரரும் உணரும்படியான எளிய நடையில் அமைந்துள்ளது. இதனாலேயே மாமுனிகள் ப்₃ரஹ்ம ஸூத்ரம்போல் க₃ம்பீ₄ரமான இதற்கு வியாக்கியானமருளிச் செய்தார்; ஸ்ரீவைஷ்ணவவுலகம் முழுவதும் இதைக் கால க்ஷேபக்₃ரந்த₂மாகக்கொண்டு குலாவுகின்றது.

4. இதற்குமாமுனிகள் அருளியுள்ளவியாக்கியானம் அதி க₃ம்பீ₄ரமானதாய், "உக்தார்த்த₂விஶதீ₃காரயுக்தார்த்த₂ாந்தர போ₃த₄நம் | மதம் விவரணம்" என்னும் விவரணலக்ஷணத்திற்கு ஏகலக்ஷ்யமாயிருப்பதாய், பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்தி களின் ஸாரத்தைப் பிழிந்து தருமதாயிருக்கிறது. இந்த வியாக்கியானத்தில் பற்பலவிடங்களில் பெரியவாச்சான் பிள்ளையருளிய பரந்தரஹஸ்யத்தின் பங்க்திகளை, பிள்ளை லோகாசார்யரருளிய அர்த்த₂ங்களுக்கு ஸ்வாத₃ப்ரமாண மாகக் காட்டியருளுகிறார் மாமுனிகள்.

5. ஸுப்ரஸித்₃த₄ மஹாவித்₃வானும், தென்மொழி வட மொழி வேதங்கரைகண்டவரும், ஸ்ரீவைஷ்ணவலோகத்திற்கு அத்யந்தோபகாரகருமான காஞ்சீ ஸ்ரீ உ. வே. ப்ர. ப. அண் ணங்கராசார்யஸ்வாமிகள் பரந்தரஹஸ்யகர்த்ரு விஷயத்தில் கருத்துவேற்றுமை கொண்டுள்ளார்கள். (அஷ்டாத்₄யாயீ முதலானவற்றிலுள்ளபடி) அவர்களுடைய திருவுள்ளம் பின் வருமாறு:-(1) தத்வத்ரயம் அசித்ப்ரகரணம் 27-வது சூர்ணை யின் வ்யாக்₂யானத்தில், "தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான் பிள்ளை ஒருவிதமாக ஆவரணக்ரமத்தை அருளிச்செய்தார். தத்வநிரூபணத்திலே (வாதி₃கேஸரி) ஜீயர் மற்றொருவிதமாக ஆவரணக்ரமத்தை அருளினார். பிள்ளைலோகாசார்யர் சுருக்க மாகச் சொல்லுகிறவராகையாலே, ஆவரணக்ரமத்தை அரு

ளிச்செய்யாமலே விட்டுவிட்டார். பெரியவாச்சான்பிள்ளையும் இப்படியன்றோ அருளிச்செய்தது" என்னும் பொருளுள்ள ஸ்ரீஸூக்திகளை அருளியிருக்கிறார். (2) இதிலிருந்து விவரண கர்த்தாவான ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையிலும் வேறுபட்டவரென்று தெரிகிறது. (3) பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்த சுருக்கமானதொரு தத்வத்ரயக்₃ரந்த₂த் திற்கு அவருடைய குமாரரான (நாயனார்) ஆச்சான்பிள்ளை விரிவான வியாக்கியானமாக தத்வத்ரய விவரணத்தை வெளி யிட்டிருக்கிறாரென்றும் தெரிகிறது. (4) மணவாளமாமுனி கள் ரஹஸ்யவ்யாக்₂யானங்களிலே பரந்தரஹஸ்யம்.மாணிக்க மாலை,ஜிதந்தேவ்யாக்₂யானம்,க₃த்₃யவ்யாக்₂யானம்,தத்வத்ரய விவரணம் ஆகிய கிரந்தங்களின் கர்த்தாவாக எடுக்கும் ஆச் சான்பிள்ளை நாயனாராச்சான்பிள்ளையேயொழிய. பெரியவாச் சான்பிள்ளையல்லர் என்பதும் விளங்குகிறது. இது ஸ்ரீகாஞ்சீ ஸ்வாமியின் திருவுள்ளம்.

6. உப₄யவேதா₃ந்த ரஹஸ்ய கு₃ருபரம்பரா தி₃க்₃ரந்த₂ங் களில் அப்ரதிமமான ஜ்ஞானமுள்ளவரும், ஆராய்ச்சியாளரில் தலைவரும், அநந்தகல்யாணகு₃ணநிதி₄யும், ஸ்ரீவைஷ்ணவ லோகத்திற்கு நிலைநிற்கும் உபகாரங்கள் பல செய்திருப் பவருமான அஸ்மத்தாதபாத₃ர்கள் ஆச்சான்பிள்ளையென்று மாமுனிகளால் ரஹஸ்ய க்₃ரந்த₂ங்களில் எடுக்கப்பட்ட பரந்த ரஹஸ்யாதி₃கர்த்தா பெரியவாச்சான்பிள்ளையே என்று ஷோட₃ஶாத்₄யாயியில் பல கிரந்தங்களைக்காட்டி நிரூபித்தார் கள்.மாமுனிகளுக்கு முன்னும்,அதிஸமீபகாலத்தில் பின்னும் தோன்றிய பரகாலநல்லான்ரஹஸ்யம். ரஹஸ்யவிவேகம்,அஷ் டஶ்லோகீவ்யாக்₂யானம். பெரியதிருமுடியடைவு முதலான பல கிரந்தங்களில் பரந்தரஹஸ்யாதி₃களைப் பெரியவாச்சான் பிள்ளையுடையதாகவே எடுத்திருப்பதை விரிவாகக் காட்டி யருளினார்கள்.இவற்றுக்கு பா₃த₃கமில்லாதபடிமாமுனிகளின் தத்வத்ரயவ்யாக்₂யானஸ்ரீஸூக்திக்கு"ஸ்தி₂தஸ்ய க₃திஶ்சிந்த நீயா" என்கிற ரீதியிலே ஒருவகையாக நிர்வாஹமும் காட்டி

ஞர்கள். தத்வத்ரயஸங்க்3ரமென்னும் (இப்போது அடியேன் அச்சிட்டிருக்கும்) க்3ரந்த2ம் அப்போது கிடைக்காமையாலே அப்படி நிர்வஹிக்கநேரிட்டது. பரந்தரஹஸ்ய விவாத3ம் முடிந்தபிறகு அடியேன் சென்னையிலிருக்கையில்ராஜகீய புஸ்தகாலயத்திலிருந்து தத்வத்ரய ஸங்க்3ரஹத்தைநகலெடுத்துப் பார்த்ததில் பல புதியவிஷயங்கள் வெளியாயின. அவற்றை ஸமய ஸந்தர்ப்பத்தில் ஸ்ரீவைஷ்ணவவுலகிற்கு வெளிப்படுத்தும்படி அப்போதே அடியேனை எந்தையார் நியமித்தருளினர். அந்நியமனத்தைப் பின்பற்றிச் சிறது எழுதுகிறேனடியேன். மஹான்கள் குற்றம் நீக்கிக் குணங்கொள்வாராக.

7. தத்வத்ரயம், அசித்ப்ரகரணம் 27-வது சூர்ணையின் வ்யாக்யானத்தில் "பெரியவாச்சான் பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது" என்று மாமுனிகள் அருளிச்செய்தது—தத்வத்ரயவிவரணத்துக்கு மூலமான (இப்போது அச்சிட்டிருக்கும்) தத்வத்ரயஸங்க்3ரஹம் என்னும் கிரந்தத்தின் 13-முதல் 22 வரையிலுள்ள சூர்ணைகளில் (பிள்ளைலோகாசார்யரைப்போல்) ஆவரணக்ரமத்தை அருளிச்செய்யாமல் அருளியிருக்கும் ஸூக்திகளையே விஷயமாகக்கொண்டதுஎன்பது தத்வத்ரயஸங்க்3ரஹத்தைப் படிப்பார்க்குப் புலப்படும். ஆகையால்,இத்தத்வத்ரய ஸங்க்3ரஹத்தையருளியவர் பெரியவாச்சான்பிள்ளையே என்று ஸித்3தி4த்தது. தத்வத்ரயஸங்க்3ரஹகர்த்தாவான இப்பெரியவாச்சான்பிள்ளையை இதற்கு முன்னும் பின்னும் ஆச்சான்பிள்ளையென்றும் மாமுனிகள் குறிப்பிட்டிருப்பதைக் காட்டுவோம் இனி. தத்வத்ரயம் ஈஶ்வரப்ரகரணம் 47-வது சூர்ணையின் வியாக்கியானத்தில், ''இவ்வண்ட3த்திலே ப3த்3த4தமஸமஷ்டி பூ4தனை ப்3ரஹ்மா பிறக்கும்; இதுக்குக் கீழ் ஸ்வஸங்கல்பத்தாலே எமபெருமான் தானே ஸ்ருஷ்டித்தருளும, இதுக்கு மேல் ப்3ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தருளும்' என்று ஆச்சான் பிள்ளை அருளிச்செய்கையாலும்'' என்று மாமுனிகள் அருளியுள்ளார். இதில ஆச்சான்பிள்ளையுடையவையாக எடுக்கப்

பட்ட ஸ்ரீஸூக்திகள் தத்வத்ரயஸங்க்₃ரஹத்தில் 25 26-வது சூர்ணைகளாக அமைந்திருப்பதைக் காணலாம். ஆகையால் பெரியவாச்சான் பிள்ளையையே மாமுனிகள் ஆச்சான்பிள்ளை யென்று குறிப்பிட்டாரென்று ஸித்₃தி₄க்கது.

8. தத்வத்ரயம் ஈஶ்வரப்ரகரணம் ஆறுவது சூர்ணை வ்யாக்₂யானத்தில் "எம்பெருமானுடையதிவ்யாத்மகு₃ணங்களாவன-ஜ்ஞாநஶக்த்யாதி₃ ஷாட்₃கு₃ணங்களும் அதிலே பிறந்த ஸௌஶீல்யாதி₃களும்" என்ற தத்வத்ரயஸங்க்₃ரஹ(சூர்ணை 45) ஸ்ரீஸூக்தியை எடுத்து "அதிலே பிறக்கையாவது-வஸ்தூத்கர்ஷாபாத₃க ஷாட்₃கு₃ண்யாயத்த கு₃ணபூ₄ர்வமாகை" என்று அதற்கு விவரணத்திலே ஆச்சான்பிள்ளை அர்த்த₂மெழுதினார் என்று மாமுனிகள் அருளியிருக்கிறார். இதிலிருந்து தத்வத்ரயஸங்க்₃ரஹத்துக்கு வ்யாக்₂யானமாகவே தத்வத்ரய விவரணம் அமைந்ததென்று தெளிவாகிறது.

9. தத்வதரயவ்யாக்₂யான அவதாரிகையில் 'நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டர், ஆச்சான்பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரப₃ந்த₄நிர்மாணத்துக்கும் கருத்து இதுவிறே' என்று அருளியுள்ளார் மாமுனிகள். இங்கு குறிக்கப்பட்ட ஆச்சான்பிள்ளையும், மூலமான தத்வத்ரயஸங்க்₃ரஹ கர்த்தாவான பெரியவாச்சான்பிள்ளையாகவே இருக்கமுடியும்.

10. தத்வத்ரயம் சித்ப்ரகரணம் மூன்றுவது சூர்ணை வியாக்கியானத்தில், "நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டரும், ஆச்சான்பிள்ளையும் முதலான ஆசார்யர்கள் தத்வத்ரயமருளிச்செய்கிறவிடத்தில் அசிது₃பக்ரமமாக அருளிச்செய்தார்கள்" என்று அருளினார் மாமுனிகள். தத்வத்ரயஸங்க்₃ரஹம் அசிது₃பக்ரமமாகவே அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. மூலமான அந்த கிரந்தத்தை அருளிய பெரியவாச்சான்பிள்ளையையே ஆச்சான்பிள்ளையென்று மாமுனிகள் இவ்விடத்திலும் குறிப்பிடுகிறார் என்பது தெளிவு. ஆக, பெரியவாச்சான்பிள்ளையென்று நடுவில் குறிப்பிடப்பெற்றவரையே தொடக்கத்தில்

இரண்டிடங்களிலும், கடைசியில் ஓரிடத்திலும் மாமுனிகள் ஆச்சான்பிள்ளையென்றும் குறிப்பிட்டிருக்கிறார் என்பது மறுக்கவொண்ணாதது.

11. இதனால் தத்வத்ரயஸங்க்₃ரஹத்தை அருளியவர் பெரியவாச்சான்பிள்ளையே என்பதும் அவரை மாமுனிகள் ஆச்சான்பிள்ளையென்று குறிப்பிட்டுள்ளார் என்பதும் உறுதியாகிறது. தத்வத்ரய விவரணமருளியவரையும் ஆச்சான்பிள்ளையென்றே குறிப்பிடுவதால் அவரும் பெரியவாச்சான்பிள்ளையேயாகவேண்டும்.

12. இவற்றிலிருந்து மாமுனிகளால் ரஹஸ்ய வ்யாக்₂யானங்களில் பரந்தரஹஸ்யம், மாணிக்கமாலை, ஜிதந்தே வ்யாக்₂யானம், க₃த்₃யவ்யாக்₂யானம் ஆகிய கிரந்தங்களை அருளியவராகக் குறிப்பிடப்பட்ட ஆச்சான்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளையே என்பது தெளிவாகிறது. இது மற்ற பராசீநக்₃ரந்த₂ங்களாலும் பின்வரும் காரணங்களாலும் வலியுறுத்தப்படுகிறது; (1) மாமுனிகளின் திருவடியான பரவஸ்து பட்டர்பிரான்ஜீயர் தாமருளிய அந்திமோபாயநிஷ்டை₂யில் மாணிக்கமாலையைப் பெரியவாச்சான்பிள்ளையருளியதாகக் குறிப்பிட்டிருக்கிறார். (2) மாமுனிகளுக்கு சுமார் நூறுவருஷங்களுக்குள்ளிருந்த ரஹஸ்யவிவேககாரர் பரந்தரஹஸ்யம், க₃த்₃ய வ்யாக்யானம் முதலானவற்றைப் பெரியவாச்சான்பிள்ளையருளியதாகக் குறிப்பிட்டுள்ளார். (3) மாமுனிகளுககு சுமார் நூறு வருஷங்களுக்குள்ளிருந்த அஷ்டஶ்லோகீவ்யாக்₂யாதாவும் நாயனாராச்சான்பிள்ளையிலும் வேறுபட்டவரான ஆச்சான்பிள்ளையே பரந்தரஹஸ்யாதி₃கர்த்தா என்று காட்டுகிறார். அதோடு வடக்குத் திருவீதிப்பிள்ளையருளிய அஷ்டாக்ஷர தீ₃பிகையென்னும் ரஹஸ்யத்திலும் பரந்தரஹஸ்யத்திலும் வெகுநீண்டதான ஒரு பகுதி ஒரே மாதிரியாயிருப்பதைக் காட்டியிருக்கிறார். இதனாலும் வடக்குத்திருவீதிப்பிள்ளையின் ஸப்₃ரஹ்மசாரியான பெரியவாச்சான்பிள்ளையே பரந்த

ரஹஸ்யகர்த்தா என்பது ஸித்3த4ம். (4)திருமுடியடைவுகள் முதலானவையும் பெரியவாச்சான்பிள்ளையே பரந்தரஹஸ்ய கர்த்தாவென்று கோ4ஷிக்கின்றன. (5)வெகுஸமீபகாலத்திலிருந்த கோ3வர்த்த4னம் ஸ்வாமியையும் அயோத்திஜீயர் ஸ்வாமியையும் தவிர ப்ராசீனர் எவருமே இந்த கிரந்தங்களை நாயனாராச்சான் பிள்ளையுடையவைகளாகச் சொல்லியதில்லை. (6) இன்றளவும் எல்லா வித்வான்களாலும் பெரியவாச்சான் பிள்ளையுடையதெனக் காலக்ஷேபகோ3ஷ்டி2களில் குலாவப் பட்டுவரும் க3த்3யவ்யாக்2யானத்தை மாமுனிகள் தத்வத்ரய வ்யாக்2யானத்தில் ஆச்சான்பிள்ளையுடையதென எடுத்திருக்கிறார். இதுவும் பெரியவாச்சான்பிள்ளையே மாமுனிகளெடுக்கும் ஆச்சான் பிள்ளையெனத் தெளிவாக்குகிறது. (7) ஸகல வித்3வான்களாலும் பெரியவாச்சான்பிள்ளையுடையதெனக் குலாவப்படும் ஜிதந்தேவ்யாக்2யானத்தையும் மாமுனிகள் ஆச்சான் பிள்ளையுடையதாக எடுத்திருப்பதும் இதையே வலியுறுத்துகிறது. இக்காரணங்களால் முமுக்ஷுப்படி வ்யாக்2யானத்தில் ஆச்சான்பிள்ளையருளியதாகப் பலகால் எடுக்கப் படும் பரந்தரஹஸ்யத்தை அருளியவர் பெரியவாச்சான் பிள்ளையே என்பது நடுநிலையாளர்க்கு நன்கு விளங்கும். இது அஸ்மத்தாதபாத3ர்களின் திருவுள்ளம்.

13. மாமுனிகளின் ரஹஸ்யவ்யாக்2யாநங்களில் எடுக்கப் படும் ஆச்சான் பிள்ளை யார் என்று கண்ணாடிபோல் காட்டித் தருவதாகையாலே 'தத்வத்ரயஸங்க்3ரஹம்' என்னும் கிரந்தம் முமுக்ஷுப்படி வியாக்கியானத்தோடு சேர்த்து வெளியிடப் படுகிறது. இதுவரை இந்நூல் வேறு எவராலும் வெளி யிடப்பட்டிருப்பதாகத் தெரியவில்லை.

14. தத்வத்ரயவிஷயமாகப் பெரியவாச்சான்பிள்ளையும், ரஹஸ்யத்ரயவிஷயமாகப் பிள்ளைலோகாசார்யரும் மணவாள மாமுனிகளும் அருளியிருப்பவையும், ஸ்ரீவைஷ்ணவலோகத் திற்கு அத்யந்தோபகாரகமானவையுமான ஸ்ரீஸூக்திகளை

ஒரே ஸம்புடமாகப் பெரியவாச்சான்பிள்ளையின் அவதார தி₃னமான ஸ்ரீஜயந்தியன்று வெளியிடுவதன் மூலம் ஜந்ம ஸாப₂ல்யம் பெற்றவனாகிறேன்.

விளம்பி, ஆவணியில் ரோகிணி.

இங்ஙனம், ஸ்ரீவைஷ்ணவ தா₃ஸன்,
**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்.**

# இரண்டாவது பதிப்பின் முகவுரை

மாமுனிகளின் அறுநூறுவது ஆண்டுவிழா நடைபெறும் சாதாரண-ஆ ஐப்பசித் திருமூலத்தில் இந்நூலின் இரண்டாவது பதிப்பு வெளிவருகிறது. மாமுனிகளின் ஸ்ரீவசநபூ₄ஷண வ்யாக்₂யாநம் நாலு அரும்பதவுரைகளுடன் கூடிய பெரிய ஶாஸ்த்ரக்₃ரந்த₂மாகத் தெலுங்கு லிபியில் பல வருடங்களுக்குமுன் அச்சிடப்பெற்றிருந்தது இந்நாள் வரையில் தமிழில வெளிவராமலேயிருந்தது. அதைத் தமிழும் நாகரமும் கலந்த மணிப்ரவாள லிபியில் அச்சிடத் தொடங்கி. ஸ்ரீவசநபூ₄ஷணம் புருஷகாரோபாய வைப₄வ ப்ரகரணம் (வாக்யம் 22) ஈறாகவுள்ள முதல் பா₄க₃ம் பல பரிஷ்காரங்களுடன் இந்நன்னாளிலேயே வெளிவருகிறது. மற்ற பாகங்கள் அடைவே வெளிவரும்.

முமுக்ஷுப்படி வ்யாக்₂யாநத்தின் இரண்டாவது பதிப்பு முதல் பதிப்பைக் காட்டிலும் பல வகைகளில் சிறந்து விளங்குகிறது. பல பிழைகள் திருத்தப்பெற்றுள்ளன. கவர்க்க₃ாதி₃ த்₃விதீயத்ருதீய சதுர்த்த₂ாக்ஷரங்களைக்காட்ட, "₂, ₃, ₄" என்னும் குறிகள் எழுத்துக்களுக்கு அருகில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்விரண்டாவது பதிப்பினா லும் ஸ்ரீ வைஷ்ணவவுலகம் மிகவும் பயனடையும் என்பது உறுதி.

சாதாரண-ஆ ஐப்பசியில் திருமூலம்.

தாஸன்.
**ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
'ஸுதர்சனம்' ஆசிரியர்.

ஸ்ரீ
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை அருளிய

# தத்வத்ரய ஸங்க்₃ரஹம்

ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய நமோ யாமுந ஸூநவே।
யத் கடாக்ஷைக லக்ஷ்யாணாம் ஸுலப₄: ஸ்ரீத₄ரஸ் ஸதா₃॥

## அவதாரிகை

1. இதரத₃ர்ஶநங்களில் பதா₃ர்த்த₂ங்கள் ஆறென்பார், பதினறென்பார், இருபத்தஞ்சென்பார் இப்படி ப₃ஹுப்ர காரங்களிலே விப்ரதிபத்தி பண்ணுவர்கள்.

2. நம் த₃ர்ஶநத்துக்குத் தத்வம் மூன்று.

3. அவையாவன– 'சித்' என்றும், 'அசித்' என்றும், 'ஈச்வரன்' என்றும்.

## அசித்ப்ரகரணம்

4. அசித்தாகிறது– கு₃ணத்ரயாத்மகமாய், நித்யமாய், ஜட₃மாய், விபு₄வாய், எம்பெருமானுக்கு ப்ரகாரதயா ஶேஷமாய், இவனுக்கு லீலோபகரணமாய், மஹதா₃தி₃ ஸர்வ விகாரங்களுக்கும் ப்ரக்ருதியாய், தன்னோடு ஸம்ப₃ந்தி₄த்த சேதனனுக்கு ப₄க₃வத்ஸ்வரூபத்தை மறைத்துத் தன்பக்கலிலே போ₄க்₃யபு₃த்₃தி₄யைப் பிறப்பிக்கும் தன்மையை உடைத்தாய், ஸததபரிணாமியாயிருக்கும்.

5. இதில் ஸூக்ஷ்மபரிணாமம் அவிஶத₃மாயிருக்கும்.

6. ஸ்தூ₂லபரிணாமம் விஶத₃மாயிருக்கும். அதாகிறது மஹதா₃தி₃ விகாரங்கள்.

7. இந்த மூலப்ரக்ருதி மஹதா₃தி₃களாய்ப் பரிணமிக்கும்படி எங்ஙனேயென்னில்:

8. கு₃ணத்ரயங்களினுடைய ஸாம்யாவஸ்தை₂யான மூலப்ரக்ருதியில் நின்றும் மஹான் பிறக்கும்.

9. இதில் நின்றும் அஹங்காரம் பிறக்கும்.

10. இதுதான் ஸாத்விகமாயும், ராஜஸமாயும், தாமஸமாயும் மூன்று படியாயிருக்கும்.

11. இதில் ஸாத்விகாஹங்காரத்தில் நின்றும் ஏகாத3ஶேந்த்3ரியங்கள் பிறக்கும்.

12. இந்த்3ரியங்கள்தான் எவையென்னில்: ஶ்ரோத்ர த்வக் சக்ஷுர் ஜிஹ்வா க்4ராணங்களென்கிற ஜ்ஞாநேந்த்3ரியங்களைந்தும், வாக் பாணிபாத3 பாயூபஸ்த2ங்களென்கிற கர்மேந்த்3ரியங்களைந்தும், இவற்றுக்கு ப்ரதா4நமான மநஸ்ஸுமாக இந்த்3ரியங்கள் பதினொன்று.

13. தாமஸாஹங்காரத்தில் நின்றும் ஶப்3த3தந்மாத்ரை பிறக்கும்.

14. இதில் நின்றும் இதினுடைய ஸ்தூ2லாவஸ்தை2யாய், ஶப்3த3கு3ணகமான ஆகாஶம் பிறக்கும்.

15. இதில் நின்றும் ஸ்பர்ஶதந்மாத்ரை பிறக்கும்.

16. இதில் நின்றும் ஸ்பர்ஶகு3ணகமான வாயு பிறக்கும்.

17. இதில் நின்றும் ரூபதந்மாத்ரை பிறக்கும்.

18. இதில்நின்றும் ரூபகு3ணகமானதேஜஸ்ஸு பிறக்கும்.

19. இதில் நின்றும் ரஸதந்மாத்ரை பிறக்கும்.

20. இதில் நின்றும் ரஸகு3ணகமான ஜலம் பிறக்கும்.

21. இதில் நின்றும் க3ந்த4தந்மாத்ரை பிறக்கும்.

22. இதில் நின்றும் க3ந்த4கு3ணகையான ப்ருதி2வீ பிறக்கும்.

23. ராஜஸாஹங்காரம் இரண்டிற்கும் அநுக்3ராஹகமாயிருக்கும்.

24. ஆக, இந்த மஹதா3தி3 ஸகலபதா3ர்த்த2ங்களுங்கூட அண்ட3மாய்ப் பரிணமிக்கும்.

25. இவ்வண்டத்திலே ப3த்3த4ாத்மஸமஷ்டி பூ4தனை ப்3ரஹ்மா பிறக்கும்.

26. இதுக்குக் கீழ் ஸ்வஸங்கல்பத்தாலே எம்பெருமான் தானே ஸ்ருஷ்டித்தருளும்; இதுக்கு மேல் ப்3ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்று ஸ்ருஷ்டித்தருளும்.

27. இவ்வண்டந்தான் ப3த்3தா3த்மாக்களுக்கு போ4க்3ய போ4கோ3பகரண போ4க3ஸ்தா2நமாய்க்கொண்டு பரிணமிக்கும்.

28. போ₄க்₃யங்களாவன—ஶப்₃தா₃தி₃கள்.

29. போ₄கோ₃பகரணங்களாவன—இந்த்₃ரியங்கள்.

30. போ₄க₃ஸ்தா₂நமாவன-தே₃வதிர்யங்மநுஷ்ய ஸ்தா₂வரரூபமான சதுர்வித₄ஶரீரங்களும். பூ₄மி முதலான மேலெழு லோகங்களும். பாதாளாதி₃ லோகங்கள் ஏழும்.

31. இந்த்₃ரியங்களும் இச்சரீரங்களும் ஐஶ்வர்யாதி₃ புருஷார்த்த₂ங்களுக்கு ஸாத₄கமாயிருக்கும்.

32. இது வ்யக்தாவ்யக்தரூபமான அசித்தத்வம்.

33. காலமாகிறது.— அசித்₃விஶேஷமாய், நித்யமாய். ஏகரூபமாய். கீழ்ச்சொன்ன ப்ரக்ருதி பரிணாமாதி₃களுக்கு ஸஹகாரியாய்க்கொண்டு நிமேஷகாஷ்டா₂தி₃ விகாரங்களையுடைத்தாய், எம்பெருமானுக்கு ப்ரகாரதயா ஶேஷமாய். லீலா பரிகரமாய் இருப்பதொன்று.

அசித்ப்ரகரணம் முற்றிற்று.

## சித்ப்ரகரணம்

34. ஆத்மதத்வம் மூன்று வர்க்க₃மாய். அஸங்க்₂யாதமாயிருக்கும்.

35. இதில். ப₄க₃வச்சே₂ஷதைகரஸரான அநந்தக₃ருட₃ விஷ்வக்ஸேந ப்ரப்₄ருதிகள் நித்யவர்க்க₃ம்.

36, ஸம்ஸாரிகளாய். ஒருநாளிலே ப₄க₃வத்₃ஜ்ஞாநம் பிறந்து, அதனாலே ப₄க₃வத்ப்ராப்தி பண்ணினவர்கள் விமுக்தவர்க்க₃ம்.

37. அநாதி₃யான கர்மப்ரப₄ாவத்தாலே சதுர்வித₄ஶரீரங்களையும் ப்ரவேஶித்து, அதனாலே ஶப்₃தா₃தி₃விஷயப்ரவணரான ஸம்ஸாரிகள் ப₃த்₃த₄வர்க்க₃ம்.

38. ஆத்மஸ்வரூபம் இருக்கும்படி எங்ஙனேயென்னில்: ஜ்ஞாநாநந்த₃ ஸ்வரூபமாய். நித்யமாய், அசித்திற்காட்டில் ஸூக்ஷ்மமாய். ஜ்ஞாநகு₃ணகமாய். அணுபரிமாணமாய். ப₄க₃வத₃ாயத்த கர்த்ருத்வகமாய், ஈஶ்வரனுக்கு ப்ரகாரதயா ஶேஷமாயிருக்கும்.

39. ப₃த்₃த₄ாத்மாக்களுடைய ஜ்ஞாநம் ஸங்கோசவிகாஸங்களுக்கு அர்ஹமாயிருக்கும்.

40. நித்ய முக்தர்களுடைய ஜ்ஞாநம் ஸங்கோச விகாஸங்களுக்கு அநர்ஹமாயிருக்கும்.

சிதப்ரகரணம் முற்றிற்று.

ஈஶ்வரப்ரகரணம்

41. ஈஶ்வரன் சேதநாசேதநாத்மகமான உப₄யவிபூ₄திக்கும் நியந்தாவாயிருக்கும்.

42. எம்பெருமானுடைய தி₃வ்யாத்மஸ்வரூபம் ஹேயப்ரத்யநீகமாய், கல்யாணைகதாநமாய் ஸகலேதரவிலக்ஷணமாய், அதிஸூக்ஷ்மமாய் தே₃ஶகாலவஸ்துக்களால் அபரிச்சி₂ந்நமாய் உள்ள ஜ்ஞாநாநந்த₃மாயிருக்கும்.

43. தி₃வ்யமங்க₃ளவிக்ரஹம் ஶுத்₃த₄ஸத்வமாய், பஞ்சோபனிஷந்மயமாய் எம்பெருமானுக்கு ஸர்வதா₃ அபீ₄மதமாய், தி₃வ்யாத்ம ஸ்வரூபத்துக்கும் அதை ஆஶ்ரயித்திருக்கும் கல்யாண கு₃ணங்களுக்கும் ப்ரகாஶகமாய், ஏகரூபமாய், ஸர்வ விஸஜாதீயமாய் அப்ராக்ருதமாய், அளவிறந்த தேஜஸ்ஸை யுடைத்தாய், நித்யயௌவன ஸ்வபா₄வமாய், ஸர்வக₃ந்த₄ ஸ்வபா₄வமாய், ஸௌந்த₃ர்யாதி₃ கல்யாணகு₃ண யுக்தமாய், அதிமநோஹரமாய் நித்யர்க்கும், முக்தர்க்கும் அநுபா₄வ்யமாய், முமுக்ஷுக்களுக்கும் ஶுபா₄ஶ்ரயமாயிருக்கும்.

44. பரமபத₃மும், அங்குள்ள பதா₃ர்த்த₂ங்களும், முக்தருடைய விக்₃ரஹங்களும், நித்யஸித்₃த₄ருடைய விக்₃ரஹங்களும் ஶுத்₃த₄ஸத்வமாய், பஞ்சோபநிஷந்மயமாயிருக்கும்.

45. எம்பெருமானுடைய தி₃வ்யாத்மகு₃ணங்களாவன— ஜ்ஞாந ஶக்த்யாதி₃ ஷாட்₃கு₃ண்யங்களும், அதிலே பிறந்த ஸௌஶீல்யாதி₃களும்.

46. இவைதான் ஓரோ கு₃ணங்களுக்கு அவதி₄யின்றியிலே, இவற்றுக்குத் தொகையுமின்றியிலேயிருக்கும்.

47. இப்படிப்பட்ட ஸ்வரூபாதி₃களையுடைய ஈஶ்வரன் பரவ்யூஹாதி₃களினாலே உப₄யவிபூ₄தியையும் நிர்வஹித்தருளும்.

48. எங்ஙனேயென்னில்:

49. கீழ்ச்சொன்ன ஷாட்₃கு₃ண்யாதி₃ ஸம்ஸ்த கல்யாண கு₃ணங்களோடும், தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹத்தோடும் பரம

பத3த்திலே நித்யரும் முக்தரும் தன்னையனுப4விக்க, அவர்களை அநுப4வித்துக்கொண்டு இருக்குமிருப்பு பராவஸ்தை2.

50. வ்யூஹாவஸ்தை2யாவது-லீலாவிபூ4தியை நிர்வஹிக்கைக்காக ஷாட்3கு3ண்யங்களிலே † இவ்விரண்டு குணங்களை ப்ரகாஶிப்பித்துக்கொண்டு ஸங்கர்ஷண ப்ரத்3யும்நாதி3 ரூபேண வந்து அவதரிக்கை.

51. இந்த வ்யூஹங்கள்தான் ஜக3த்ஸ்ருஷ்ட்யாதி3களுக்கும், திருவவதாரங்களுக்கும் அடியாயிருக்கும்.

52. விப4வமாவது—தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்தை தே3வதிர்யங்மநுஷ்ய ஸ்தா2வர ஶரீரங்களோடே ஸஜாதீயமாக்கிக்கொண்டு, தன் படிகள் ஒன்றையும் விடாதே, அவ்வோ ஜாதிகளிலேவந்து அவதரிக்கை-ஸாக்ஷாத்3விப4வாமவது; சேதநர் பக்கல் ஸ்வரூபேண ஆவேஶித்து அவதரிக்கை-ஸ்வரூபாவேஶாவதாரம்; சில சேதநர் பக்கலிலே ஶக்தியினாலே கார்யகாலத்திலே ஆவேஶித்து ரக்ஷிக்கை-ஶக்த்யாவேஶாவதாரம்.

53. அர்ச்சாவதாரமாவது—ஆஶ்ரிதர் உகந்ததேதேனுமொரு த்3ரவ்யத்தை அதி4ஷ்டி2த்து, அதிலே தி3வ்யமங்க3ளவிக்3ரஹத்திற் பண்ணும் ஆத3ரத்தைப் பண்ணிக்கொண்டு ஆஶ்ரிதபராதீ4னனாய்க்கோயில்களிலும் க்3ருஹங்களிலும் காலாவதி4யின்றிக்கே அவதரிக்கை.

54. உபாஸிப்பாருடைய ஹ்ருத3யங்களிலே விக்3ரஹஸஹிதனாய்க்கொண்டு அவர்களுக்கு ஶுபா4ஶ்ரயமாயிருப்பதொரு ப்ரகாரமுமுண்டு.

55. இப்படி சித3சிதீ3ஶ்வரதத்வங்களும் ஸங்க்3ரஹேண சொல்லப்பட்டது.

56. ஸகலசேதநாசேதநங்களையும் ஈஶ்வரன் ப்ரகாரமாக உடையனாய், தான் அவற்றுக்கு ப்ரகாரியாய், வேறு சேதனர்க்கு ப்ரகாரியில்லாமையாலே நம் த3ர்ஶனத்துக்குத் தத்வம் ஒன்றே என்னவுமாம்.

பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளையருளிய
தத்வத்ரயஸங்க்3ரஹம் முற்றிற்று.
பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

இவ்விரண்டு-இரண்டிரண்டு; மும்மூன்று என்பதுபோலே.

## மாமுனிகளின் திருவாக்கில் (தத்வத்ரயவ்யாக்₂யானத்தில்) தத்வத்ரய ஸங்க்₃ரஹமும், தத்வத்ரய விவரணமும்.

## தத்வத்ரய ஸங்க்₃ரஹம்

1. (அவதாரிகை)— "நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டர், ஆச்சான் பிள்ளை முதலான பூர்வாசார்யர்களுடைய ப்ரப₃ந்த₄ நிர்மாணத்துக்கும் கருத்து இதுவிறே"

2. (சித்-3) "நடுவிற்றிருவீதிப்பிள்ளைபட்டரும், ஆச்சான்பிள்ளையும் முதலான ஆசார்யர்கள், தத்வத்ரயமருளிச்செய்கிறவிடத்தில் அசித்₃க்ரமமாக அருளிச்செய்தார்கள்" இந்த ஸ்ரீஸூக்தியிலிருந்து தத்வத்ரய ஸங்க்₃ரஹம் ஆதிகாலந்தில் ஆச்சான்பிள்ளையருளிச்செய்த "தத்வத்ரயம்" எனறே வழங்கப்பட்டுவந்ததெனக் தெரிகிறது. பிள்ளை லோகாசார்யர் தத்வத்ரயத்தை வ்யாவர்த்திப்பதற்காக, தத்வத்ரய ஸங்க்₃ரஹமென்று பின்புள்ளார் வழங்கியிருக்கவேண்டும்

3. (அசித்-27) "ஸங்கோசேந உத்பத்திக்ரமத்தை அருளிச்செய்தவிடத்தில்; பெரியவாச்சான்பிள்ளையும் இப்படியிறே அருளிச்செய்தது" ஸங்க்ரஹம 13-22 சூர்ணைகளில் ஆவரணக்ரமத்தை விவரிக்காமல் அருளியிருக்கும் ஸ்ரீஸூக்திகளையே இங்கு மாமுனிகள் குறிக்கிருரென்பது தெளிவு. ஆச்சான்பிள்ளையென்று பலவிடங்களில் எடுக்கப்பட்டவர் பெரியவாச்சான்பிள்ளையே என்று தெளிவுபடுத்துகிருர்.

4. (ஈச்-9) "எம்பெருமானுடைய தி₃வ்யாத்மகு₃ணங்களாவன-ஜ்ஞாந ஶக்த்யாதி₃ ஷட்₃கு₃ணங்களும் அதிலே பிறந்த ஸௌஶீல்யாதி₃களும்" என்கிற இவ்வாக்யத்துக்குஅர்த்த₂மெழுதுகிறவளவில், 'அதிலே பிறக்கை யாவது — வஸ்தூத்கர்ஷாபாத₃கஷாட்₃கு₃ண்யாயத்தகு₃ணபூ₄ர்வமாகை' என்றிறே விவரணத்தில் ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தது" ஸங்க்ரஹம் 45-வது சூர்ணையே இங்கு எடுக்கப்பட்ட மூலவாக்யம இதிலிருந்து ஸங்க்₃ரஹத்திற்கு வ்யாக்₂யானமாயமைந்தது விவரணம் என்று தெளிவாகிறது.

5. (ஈச்-47) "இவ்வண்ட₃த்திலே ப₃த்₄த₄ாத்ம ஸமஷ்டிபூ₄தனை ப்₃ரஹ்மாபிறக்கும்; இதுக்குக் கீழ் ஸ்வஸங்கல்பத்தாலே எம்பெருமான்றனே ஸ்ருஷ்டித்தருளும்; இதுக்குமேல் ப்₃ரஹ்மாவுக்கு அந்தர்யாமியாய் நின்றுஸ்ருஷ்டித்தருளும்'என்றுஆச்சான்பிள்ளை அருளிச்செய்கையாலும்"

ஸங்க்₃ரஹம் 25, 26 சூர்ணைகளை ஆச்சான்பிள்ளையருளியதாகக் குறிப்பிடுகையால்,பெரியவாச்சான்பிள்ளையை மாமுனிகள் ஆச்சான் பிள்ளையென வழங்கிருர் என்பதற்கு நிஸ்ஸந்தி₃க்₃த₄ப்ரமாணமிது.

## தத்வத்ரயவிவரணம்

1. (சித்-35) "என்று விவரணத்திலே ஆச்சான்பிள்ளையும்."

2. (அசித்-27) "இது தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான்பிள்ளை யருளிச்செய்த க்ரமம்"

3. (அசித்-48) "இதுவிறே தத்வத்ரயவிவரணத்தில் ஆச்சான் பிள்ளை ப்ராத₄ாந்யேந அருளிச்செய்தது"

4. (ஈச்-9) "என்றிறே விவரணத்தில் ஆச்சான்பிள்ளை அருளிச் செய்தது"

5. (ஈச்-40) "இப்படி விவரணத்திலே ஆச்சான்பிள்ளை அருளிச் செய்தாரிறே"

குறிப்பு:—விவரணத்தையெடுக்கும்போது நியமேந 'விவரணத்திலே ஆச்சான்பிள்ளை'என்று அருளுகையாலே, ஸங்க்₃ரஹ விவரண கர்த்ரைக்யம் தோற்றுகிறது.

ஸ்ரீ:

திருமந்த்ரார்த்த₂ம் தொடங்கும்போது அநுஸந்திக்கும்
தனியன்கள்

["ஸ்ரீஶைலேஶ" விலிருந்து "ப்ரணதோஸ்மி நித்யம்" வரை பொதுத்தனியன்களை அநுஸந்தித்தபின் பின்வரும் தனியன்களை அநுஸந்திப்பது.]

மாமுனிகள் அருளிச்செய்த
ரஹஸ்யார்த்த₂ ஸம்ப்ரதா₃ய பரமபரையின் ஒட்டுத்தனியன்

लोकगुरुं गुरुभिस्सह पूर्वैः कूरकुलोत्तमदासमुदारम् ।
श्रीनगपत्यभिरामवरेशौ दीप्रशयानगुरूंश्च भजेऽहम् ॥

லோககு₃ரும் கு₃ருபி₄ஸ்ஸஹ பூர்வை: கூரகுலோத்தமதா₃ஸமுதா₃ரம் |
ஸ்ரீநக₃பத்யபி₄ராமவரேஶௌ தீ₃ப்ரஶயாநகு₃ருஞ்ச ப₄ஜேऽஹம் ||

பூர்வோக்த கு₃ருபரம்பரைக்கு ப்ரத்யேக தனியன்கள்
பிள்ளைலோகாசார்யர் தனியன்
(ஈயுண்ணி பத்₃மநாப₄ர் அருளிச்செய்தது)

लोकाचार्याय गुरवे कृष्णपादस्य सूनवे ।
संसारभोगिसन्दष्टजीवजीवातवे नमः ॥

லோகாசார்யாய கு₃ரவே க்ருஷ்ணபாத₃ஸ்ய ஸூநவே |
ஸம்ஸாரபோ₄கி₃ஸந்த₃ஷ்ட ஜீவஜீவாதவே நம: ||

திருவாய்மொழிப்பிள்ளை அருளிச்செய்த
கூரகுலோத்தமதா₃ஸர் தனியன்

लोकाचार्यकृपापात्रं कौण्डिन्यकुलभूषणम् ।
समस्तात्मगुणावासं वन्दे कूरकुलोत्तमम् ॥

லோகாசார்யக்ருபாபாத்ரம் கௌண்டி₃ந்யகுலபூ₄ஷணம் |
ஸமஸ்தாத்மகு₃ணாவாஸம் வந்தே₃ கூரகுலோத்தமம் ||

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த
திருவாய்மொழிப்பிள்ளை தனியன்

नमः श्रीशैलनाथाय कुन्तीनगरजन्मने ।
प्रसादलब्धपरमप्राप्यकैङ्कर्यशालिने ॥

நமஶ்ஸ்ரீஶைலநாதா₂ய குந்தீநக₃ரஜந்மநே |
ப்ரஸாத₃லப்₃த₄பரம ப்ராப்ய கைங்கர்யஶாலிநே ||

மணவாளமாமுனிகளுக்கு மாதாமஹரான
கோட்டூர் அழகியமணவாளப்பெருமாள்பிள்ளை தனியன்

लोकाचार्यपदांभोजराजहंसायितान्तरम् ।
ज्ञानवैराग्यजलधिं वन्दे सौम्यवरं गुरुम् ॥

லோகாசார்ய பத₃ாம்பே₄ாஜ ராஜஹம்ஸாயிதாந்தரம் ।
ஜ்ஞாநவைராக்₃யஜலதி₄ம் வந்தே₃ ஸௌம்யவரம் கு₃ரும் ॥

மணவாளமாமுநிகள் அருளிச்செய்த
திகழக்கிடந்தான் திருநாவீறுடையபிரான தாதரண்ணரையர் தனியன்

श्रीजिह्वावद्धीशदासममलमशेषशास्त्रविदम् ।
सुन्दरवरगुरुकरुणाकन्दलितज्ञानमन्दिरं कलये ॥

ஸ்ரீஜிஹ்வாவத₃தீ₄ஶதா₃ஸமமல மஶேஷஶாஸ்த்ரவித₃ம் ।
ஸுந்த₃ர வரகு₃ருகருணாகந்த₃ளித ஜ்ஞாநமந்தி₃ரம் கலயே ॥

இதன் பிறகு ஸ்வாசார்யபரம்பரைத் தனியன்களை அநுஸந்திக்க வேண்டும்.

சாற்றும்போது அநுஸந்திக்கும் தனியன்கள்.

வாநமாமலைசீயர் அருளிச்செய்தது.

கோதிலுலகாசிரியன் கூரகுலோத்தமதாதர்
தீதில்திருமலையாழ்வார் செழுங்குரவை மணவாளர்
ஓதுபுகழ்த்திருநாவீறுடையபிரான் தாதருடன்
போதமணவாளமுனிபொன்னடிகள் போற்றுவனே.

வாழியுலகாசிரியன் வாழியவன் மன்னுகுலம்
வாழி முடும்பையென்னுமாநகரம்—வாழி
மனஞ்சூழ்ந்த பேரின்பமல்குமிகுநல்லா
ரினஞ்சூழ்ந்திருக்குமிருப்பு.

ஓதுமுடும்பையுலகாசிரியனரு
ளேது மறவாதவெம்பெருமான்—நீதி
வழுவாச் சிறுநல்லூர் மாமறையோன் பாதந்
தொழுவார்க்கு வாராதுயர்.

இதன் பிறகு "நம:ஶ்ரீஶைல" என்று தொடங்கி ஸ்வாசார்ய பரம்பரைத் தனியன்களை முன்போல் அநுஸந்தித்து முடிக்கவேண்டும்.

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே ஶரணம்.
சீயர் திருவடிகளே ஶரணம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



## மணவாள மாமுனிகள் அருளிச்செய்த

# முமுக்ஷுப்படி வ்யாக்2யான அவதாரிகை

ஸ்ரிய:பதியாய், ஸ்ரீவைகுண்ட2நிகேதநனாய், நித்யமுக்தாநுப4வ்யனாய், நிரதிஶயாநந்த3 யுக்தனாயிருக்கிற ஸர்வேஶ்வரன், அந்த நித்யஸூரிகளோபாதி தன்னை அநுப4வித்து நித்யகைங்கர்யரஸராய் வாழுகைக்கு ப்ராப்தியுண்டாயிருக்கச்செய்தேயும் அத்தை இழந்து, 1. "असन्नेव" (அஸந்நேவ) என்கிறபடியே அஸத்கல்பராய்க்கிடக்கிற ஸம்ஸாரிசேதநருடைய இழவை அநுஸந்தி4த்து, அத்யந்த வ்யாகுலசித்தனாய், இவர்கள் கரணகளேப3ரங்களை இழந்து இறகொடிந்த பக்ஷிபோலே கிடக்கிற த3ஶையிலே கரணாதி3களைக் கொடுத்து, அவற்றைக்கொண்டு வ்யபி4சரியாதே தன்னையாஶ்ரயித்து உஜ்ஜீவிக்கைக்கு உடலாக, அபௌருஷேயமாய், நித்யநிர்தோ3ஷமாய், ஸ்வத:ப்ரமாணமான வேத3த்தையும் தது3பப்3ரும்ஹணங்களான ஸ்ம்ருதி இதிஹாஸ புராணாதி3களையும் ப்ரவர்த்திப்பித்தவிடத்திலும், அந்த ஶாஸ்த்ராப்4யாஸத்துக்கு அநேகயோக்3யதை வேண்டுகையாலே, அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்து சேதநர் உஜ்ஜீவிக்கை அரிதாயிருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி, ஸகல ஶாஸ்த்ர தாத்பர்யங்களையும் ஸங்க்3ரஹமாக இவர்கள் அறியலாம்படி பண்ணவேணுமென்று, ஸ்வரூபோபாய புருஷார்த்த2 யாதா2த்ம்ய ப்ரதிபாத3கமான ரஹஸ்யத்ரயத்தையும், ஸ்வயமேவ ஆசார்யனாய் நின்று ப்ரகாஶிப்பித்தருளினான்.

அதில், திருமந்த்ரத்தை ஸ்ரீபத₃ரிகாஶ்ரமத்திலே ஸ்வாமஶ்ரீயக₄னான நரன் விஷயமாக ப்ரகாஶிப்பித்தான். த்₃வயத்தை ஸ்ரீவிஷ்ணு லோகத்திலே ஸ்வமஹிஷியான பிராட்டி விஷயமாக ப்ரகாஶிப்பித்தான். சரமஶ்லோகத்தைத் திருத்தேர்த்தட்டிலே ஸ்வாஶ்ரிதனான அர்ஜுநன் விஷயமாக ப்ரகாஶிப்பித்தான். ஆகையாலிறே 2. "लक्ष्मीनाथसमारम्भां" (லக்ஷ்மீ நாத₂ ஸமாரம்ப₄ாம்) என்று கு₃ருபரம்பராதி₃யிலே ஈஶ்வரனை அநுஸந்தி₄க்கிறது.

இனி இந்த ரஹஸ்யத்ரயந்தான் ஶப்₃த₃ம் ஸங்க்₃ரஹமாயிருந்ததேயாகிலும் அர்த்த₂ம் உபதே₃ஶக₃ம்யமாகையாலும், அதறிந்தே எல்லார்க்கும் உஜ்ஜீவிக்க வேண்டுகையாலும், அந்த ரஹஸ்யத்ரயத்திலும் பூர்வாசார்யர்களுடைய உபதே₃ஶ பரம்பரா ப்ராப்தமான அர்த்த₂ விஶேஷங்களை ஸர்வர்க்கும் ஸங்க்₃ரஹமாகவும் ஸுவ்யக்தமாகவும் பிள்ளைலோகாசார்யர் தம்முடைய பரமக்ருபையாலே இப்ரப₃ந்த₄முகே₂ந அருளிச்செய்கிறார். முன்பே ரஹஸ்யத்ரய விஷயமாக மூன்று ப்ரப₃ந்த₄ம் இட்டருளியிருக்கச்செய்தேயும், அதில் யாத்₃ருச்சி₂கப்படி அதிஸங்க்₃ரஹமாகையாலும், பரந்தபடி அதிவிஸ்த்ருதமாகையாலும், ஶ்ரிய:பதிப்படி உப₄யதே₃ாஷமுமின்றிக்கே இருந்ததேயாகிலும் ஸம்ஸ்க்ருதவாக்யப₃ஹுளமாகையாலே பெண்ணுக்கும் பேதைக்கும் அதி₄கரிக்கப் போகாமையாலும், த்ரிவித₄தே₃ாஷமுமில்லாதபடி இன்னமும் ஒரு ப்ரப₃ந்த₄மிட வேணுமென்று திருவுள்ளம்பற்றி, எல்லாவற்றுக்கும் பின்பிறே முமுக்ஷுப்படியாகிற இப்ரப₃ந்த₄ம் இட்டருளிற்று.

ஆகையிறே, அல்லாத ப்ரப₃ந்த₄ங்கள் கிடக்க, இத்தை எல்லாரும் அதி₄கரித்துப்போருகிறது. இன்னமும் பூர்வ ப்ரப₃ந்த₄ங்களில் அநுக்தமான அர்த்த₂ விஶேஷங்களும் இப்ரப₃ந்த₄த்திலே உண்டாகையாலும், இதுவே எல்லார்க்கும் ஆத₃ரணீயமாயிருக்கும்.

வ்யாக்₂யாந அவதாரிகை முற்றிற்று.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த

# முமுக்ஷுப்படி-திருமந்த்ரப்ரகரணம்

## மூ. 1. முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.

முமுக்ஷுப்படி வ்யாக்$_2$யானம்—திருமந்த்ரப்ரகரணம்

வ்யாக்$_2$யாநம்:—(*முமுக்ஷுவுக்கு அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று.*) *முமுக்ஷுவாகிறான் மோக்ஷத்திலே இச்சை$_2$யுடையனானவன்.* "**मुचॢ मोक्षणे**" (முச்ல் மோக்ஷணே)*யிறே த$_4$ாது. இத்தால், ஸம்ஸார விமோசநத்தில் இச்சை$_2$ பிறந்தவனுக்கு என்றபடி. ஆத்மப்ராப்தி காமனுக்கும் முமுக்ஷுத்வமுண்டேயாகிலும், இவ்விடத்தில் அவன் விவக்ஷிதனன்று, அவனுக்கு ரஹஸ்யத்ரயஜ்ஞாநாபேக்ஷை இல்லையிறே. ஆகையால், இவர் முமுக்ஷுவென்கிறது, ப$_4$க$_3$வத்ப்ராப்தி காமதயா ஸம்ஸார நிவ்ருத்தியில் இச்சை$_2$ பிறந்தவனை. ஏவம்பூ$_4$தனானவனுக்கு* (அறியவேண்டும் ரஹஸ்யம் மூன்று) *என்றது—இவனுக்கு அவஶ்யம் ஜ்ஞாதவ்யமாயுள்ளது ஸ்வரூப உபாய புருஷார்த்த$_2$ங்களாகையாலும், அவற்றை இந்த ரஹஸ்யத்ரயம் உள்ளபடி ப்ரதிபாதி$_3$க்கையாலும், ரஹஸ்யத்ரயமுமே அறியவேண்டுவது—என்கை* 3. "**स्वज्ञानं प्रापकज्ञानं प्राप्यज्ञानं मुमुक्षुभिः। ज्ञानत्रयमुपादेयमेतदन्यन्न किञ्चन॥**" (ஸ்வஜ்ஞாநம் ப்ராபக ஜ்ஞாநம் ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபி$_4$:। ஜ்ஞாநத்ரயமுபாதே$_3$யம் ஏதத$_3$ந்யந்ந கிஞ்சந॥) *என்னக்கடவதிறே.* (ரஹஸ்யம் மூன்று) *என்று இவர் உத்$_3$தே$_3$ஶிக்கிறது—திருமந்த்ரமும் த்$_3$வயமும் சரமஶ்லோகமுமாகிற இவற்றை என்னுமிடம் மேலே ஸுஸ்பஷ்டம். இவற்றை ரஹஸ்யங்களென்கிறது—ஸகல வேதா$_3$ந்த ஸாரார்த்த$_2$ ப்ரதிபாத$_3$கதயா பரமகு$_3$ஹ்யங்களாகையாலே. ஆக, இவ்வாக்யத்தால், அதி$_4$காரி நிர்த்தே$_3$ஶமும், தத்$_3$ஜ்ஞாதவ்ய நிர்த்தே$_3$ஶமும்பண்ணியருளினாராய்த்து.*

இனி, அந்த ரஹஸ்யத்ரயத்திலும் ப்ரத$_2$மரஹஸ்யம் ஏது என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார், 'அதில் ப்ரத$_2$ம ரஹஸ்யம் திருமந்த்ரம்' என்று;

## மூ. 2. அதில் ப்ரத$_2$ம ரஹஸ்யம்—திருமந்த்ரம்.

வ்யா:—அதாவது-அந்த ரஹஸ்யத்ரயத்திலும் வைத்துக் கொண்டு, இவ்வதி$_4$காரிக்கு ப்ரத$_2$மம் ஜ்ஞாதவ்யமான ரஹஸ்யம் ஸ்வரூபயாதா$_2$த்ம்யபரமாய், த்யாஜ்யோபாதே$_3$யவிபா$_4$க ஜ்ஞானத்தைப் பரிபூர்ணமாகப் பிறப்பிக்குமதான திருமந்த்ரம்-என்கை. அநந்யார்ஹஶேஷத்வம், அநந்யஶரணத்வம், அநந்யபோ$_4$க்$_3$யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதி$_3$க்கையாலே சேதநஸ்வரூபயாதா$_2$த்ம்ய ப்ரதிபாத$_3$நபரமாய், தத$_3$நுகு$_3$ணமான த்யாஜ்ய உபாதே$_3$யவிபா$_4$க$_3$த்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதி$_3$யாநின்றுள்ள இம்மந்த்ரத்தாலே ஸுஶிக்ஷிதமான ஸ்வரூபத்தை உடையவனுக்கிறே மற்றை ரஹஸ்யங்களிரண்டாலும் ப்ரதிபாதி$_4$க்கப்படுகிற உபாயோபேயங்களில் அபேக்ஷை ஜநிப்பது. ஆகையால், ஸ்வரூபயாதா$_2$த்ம்யபரமான திருமந்த்ரம், ப்ரத$_2$ம ரஹஸ்யமென்னக் குறையில்லை. இன்னமும், ப்ரணவத்துக்கு மந்த்ரஶேஷம் விவரணமானாற்போலே மந்த்ரஶேஷத்துக்கு த்$_3$வயம் விவரணமாய், த்வயத்துக்குச் சரமஶ்லோகம் விவரணமாயிறே இருப்பது. அந்த ந்யாயத்தாலும், இதினுடைய ப்ராத$_2$ம்யம் ஸித்$_3$த$_4$மிறே. ஆக, இவை எல்லாவற்றையும் திருவுள்ளம் பற்றியாய்த்து 'ப்ரத$_2$ம ரஹஸ்யம் திருமந்த்ரம்' என்று இவர் அருளிச்செய்தது. இத்தை மந்த்ரமென்கிறது 4. "मन्तारं त्रायत इति मन्त्रः" (மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:) என்கிறபடியே ஶப்$_3$த$_3$ ஶக்தியாலும் அர்த்த$_3$ போ$_3$த$_4$நத்தாலும் தன்னை அநுஸந்திப்பார்க்கு ரக்ஷகமாகையாலே. ஶப்$_3$த$_3$ஶக்தியாலே ரக்ஷகமாம், ஜபஹோமாதி$_3$களாலே கார்யங்கொள்ளும் உபாஸகர்க்கு. அர்த்த$_2$ போ$_3$த$_4$நத்தாலே ரக்ஷகமாம் ஈஶ்வரனே உபாயோபேயமென்றிருக்கும் ப்ரபந்நர்க்கு. அர்த்த$_2$போ$_3$த$_4$நத்தாலே

ரக்ஷகமாகையாவது. 5. "देहासक्तात्मबुद्धिर्यदि भवति पदं साधु विद्यात् तृतीयं, स्वातन्त्र्यान्धो यदि स्यात्प्रथममितरशेषत्वधीश्चेद्द्वितीयम्। आत्मत्राणोन्मुखश्चेन्नम इति च पदं बान्धवाभासलोलः शब्दं नारायणाख्यं विषयचपलधीश्चेत् चतुर्थीं प्रपन्नः॥" (தே₃ஹாஸக்தாத்மபு₃த்₃தி₄ர் யதி₃ ப₄வதி பத₃ம ஸாது₄ வித்₃யாத் த்ருதீயம் ஸ்வாதந்த்ர்யாந்தே₄ா யதி₃ ஸ்யாத் ப்ரத₂மம் இதரஶேஷத்வதீ₄ஶ்சேத்₃ த்₃விதீயம்। ஆத்மத்ராணோந்முக₂ஶ்சேந்நம இதி ச பத₃ம் பா₃ந் த₄வாபா₄ஸலோலஶ் ஶப்₃த₃ம் நாராயணாக்₂யம் விஷய சபல தீ₄ஶ்சேச் சதுர்த்தீ₂ம் ப்ரபந்ந:॥) என்று ப₄ட்டர் அருளிச்செய்த படியே தன்னை அநுஸந்தி₄ப்பார்க்கு தே₃ஹாத்மாபி₄மாநமும், ஸ்வாதந்த்ர்யமும், அந்யஶேஷத்வமும், ஸ்வரக்ஷணே ஸ்வாந் வயமும், அபு₃ந்து₄ஸங்க₃மும் விஷயப்ராவண்யமும் மேலிடாத படிபண்ணி ஸ்வரூபாநுரூபமாக நடக்கும்படி நோக்குகை.

இனிமேல் இம்மந்த்ரத்தினுடைய வைப₄வத்தை விஸ் தரேண ப்ரதிபாதி₃ப்பதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரத₂மம் இதனுடைய அநுஸந்த₄ாந க்ரமகத₂நமுக₂த்தாலே இதன் வைப₄வத்தை அருளிச்செய்கிறார் 'திருமந்த்ரத்தினுடைய' என்று தொடங்கி.

**மூ. 3. திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப்போரும்படி ப்ரேமத்தோடே பேணி அநுஸந்தி₄க்கவேணும்.**

வ்யா:- திருமந்த்ரத்துக்குச் சீர்மையாவது. 6. "ऋचो यजूंषि सामानि तथैवाथर्वणानि च। सर्वमष्टाक्षरान्तस्स्थम्" (ருசோ யஜூம்ஷி ஸாமாநிததை₂வாத₂ர்வணாநிச। ஸர்வமஷ்டாக்ஷராந்த:ஸ்த₂ம்) என்கிறபடியே ஸகலவேத₃ ஸங்க்₃ரஹமாய், †"மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே ஜ்ஞாதவ்யஸகலார்த்த₂ப்ரதிபாத₃கமாய், 7. "मन्त्राणां परमो मन्त्रो गुह्यानां गुह्यमुत्तमम्। पवित्रं च पवित्राणां मूलमन्त्रः सनातनः॥" (மந்த்ராணாம் பரமோ மந்த்ரோ கு₃ஹ்யாநாம் கு₃ஹ்யமுத்தமம்। பவித்ரம் ச பவித்ராணாம் மூலமந்த்ரஸ்ஸநாதந:) என்கிற

†பெரிய-திரு 8-10-3.

படியே மந்த்ரங்களில் வைத்துக்கொண்டு பரமமான மந்த்ர மாய், கு₃ஹ்யங்களில் வைத்துக்கொண்டு உத்தமமான கு₃ஹ்ய மாய், பவித்ரங்களுக்கும் பவித்ரமாயிருக்கிற கௌ₃ரவம். (சீர்மைக்குப் போரும்படி) என்றது— தகும்படியென்கை. (ப்ரேமத்தோடே பேணி அநுஸந்தி₄க்கை) யாவது— இத்தை அநுஸந்தி₄க்குமளவில் ஶாஸ்த்ரஹ்ருத₃யனாயிருந்தநுஸந்தி₄க் கையன்றிக்கே, இதின் வைலக்ஷண்ய ஜ்ஞாநமடியாக இதின் பக்கல் தனக்குண்டான ப்ரேமத்தோடே, கு₃ஹ்யாநாம் கு₃ஹ்யமானவிது அநதி₄காரிகள் செவிப்படாதபடி 9. "मन्त्रं यत्नेन गोपयेत्" (மந்த்ரம் யத்நேந கோ₃பயேத்) என்கிறபடியே பேணிக்கொண்டநுஸந்தி₄க்கை, இப்படி அநுஸந்தி₄க்கவேணு மென்கையாலே ப்ரகாராந்தரேண அநுஸந்தி₄க்கலாகாதென் கிற நியமம் தோற்றுகிறது.

இப்படி, தன் பக்கல் ப்ரேமமுண்டாகவே இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாமோ வென்ன அருளிச்செய்கிறார் 'மந்த்ரத்திலும்' என்று தொடங்கி.

**மூ. 4. மந்த்ரத்திலும் மந்த்ரத்துக்கு உள்ளீடான வஸ்து விலும் மந்த்ரப்ரத₃னான ஆசார்யன்பக்கலிலும் ப்ரேமம் க₄னக்க உண்டானால் கார்யகரமாவது.**

வ்யா:— அதாவது-ஜ்ஞாதவ்யார்த்த₂ஜ்ஞாபகமான இம் மந்த்ரந்தன்னிலும், ஶேஷித்வ ஶரண்யத்வ ப்ராப்யத்வங்களா கிற ஆகாரத்ரயயுக்ததயா இம்மந்த்ரத்துக்கு வாச்யவஸ்துவா யிருக்கிற ஈஶ்வரவிஷயத்திலும் 9. "तन्मन्त्रं ब्राह्मणाधीनम्" (தந் மந்த்ரம் ப்₃ராஹ்மணாதீ₄நம்)என்கிறபடியே இம்மந்த்ரம் ஆசார் யாதீ₄நமாயிருப்பதொன்றாகையாலே இத்தையத₂ப்ரதிபத்தி யுக்தனாய்க்கொண்டு, தனக்கு உபகரித்த ஆசார்யவிஷயத் திலும் தத்தத்₃வைலக்ஷண்யாநுரூபமாக ப்ரேமம் அதிஶயேந உண்டானால், இம்மந்த்ரம் இவனுக்குக் கார்யகரமாவது என்கை. 10. मन्त्रे तद्देवतायाञ्च तथा मन्त्रप्रदे गुरौ। त्रिषु भक्तिस्सदा

कार्या सा हि प्रथमसाधनम्॥ (மந்த்ரே தத்₃தே₃வதாயாஞ்ச தத₂ா மந்த்ரப்ரதே₃ கு₃ரௌ। த்ரிஷு பு₄க்திஸ் ஸதா₃ கார்யா ஸா ஹி ப்ரத₂ம ஸாத₄நம்॥) என்னக்கடவதிறே.

*இனி, இம்மந்த்ரத்தினுடைய அவதரணப்ரகாரகத₂ந முக₂த்தாலே இதினுடைய அப்ரதிமவைப₄வத்தை அருளிச் செய்கிறார் 'ஸம்ஸாரிகள்' என்று தொடங்கி.*

மூ. 5. ஸம்ஸாரிகள் தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து, ஈஶ்வர கைங்கர்யத்தையும இழந்து, இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேஶ்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ்சேரும்படி, தானே ஶிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினன்.

வ்யா:— *ஸம்ஸாரிகளாகிறார்—அநாத்₃யசித்ஸம்ப₃ந்த₄த்தாலே ப்ரவாஹரூபேண வருகிற அவித்₃யாகர்மவாஸநாருசி விவஶராய், ஜந்மமரணாதி₃ க்லேஶப₄ாகி₃களாய்த்திரிகிற ப₃த்₃த₄சேதனர்.* (தங்களையும் ஈஶ்வரனையும் மறந்து)*என்றது—*
*11.* "दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः। नान्यथा लक्षणं तेषां बन्धे मोक्षे तथैव च॥" (தா₃ஸபூ₄தா: ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:। நாந்யதா₂ லக்ஷணம் தேஷாம் ப₃ந்தே₄ மோக்ஷே ததை₂வ ச॥)*என்கிறபடியே ஸ்வதஸ்ஸித்₃த₄மான ப₄க₃வச்சே₂ஷத்வத்தை லக்ஷணமாகவுடையராயிருக்கிற தங்களையும் 12.*"पतिं विश्वस्य"(பதிம் விஶ்வஸ்ய) *13.*"स्वामित्वं ब्रह्मणि स्थितं" (ஸ்வாமித்வம் ப்₃ரஹ்மணி ஸ்தி₂தம்) *இத்யாதி₃களிற்சொல்லுகிறபடியே தங்களுக்கு நிருபாதி₄கஶேஷியாயிருக்கிற ஈஶ்வரனையும் அறியாதே என்கை. ஆனால், அறியாமலென்னாதே மறந்தென்பான் என்? முன் ஒருகால் நினைத்துப் பின்பு அந்நினைவுக்கு ப்ரச்யுதி வந்தவிடத்திலிறே மறந்து என்னலா*

வது' என்னில்: /"மறந்தேனுன்னை முன்னம்" என்கிறபடியே ஸ்வகஸ்ஸித்3த4மான ஸம்ப3ந்த4த்தையுணர்ந்தால், முன்பு நினைத்திருந்த அர்த்த2த்தை மறந்தாற்போலே இருக்கும் ஸம்ப3ந்த4த்தில் உறைப்பை நினைத்து அருளிச்செய்தாராயித்தனை. (ஈஶ்வர கைங்கர்யத்தையும் இழந்து) என்றது— கீழ்ச் சொன்ன அஜ்ஞானத்தாலே வகுத்த ஶேஷியான ஈஶ்வர விஷயத்தில் கைங்கர்யமாகிற பரமபுருஷார்த்த2த்தையும் ப்ராபிக்கப்பெறாதே—என்கை. புருஷார்த்த2த்தினுடைய கௌ3ரவத்தையும், அதுக்கிட்டுப் பிறந்துவைத்துக் கிட்டப் பெறாமல் கிடந்தபடியையும் நினைத்து, 'இழந்து' என்கிறார். (இழந்தோமென்கிற இழவுமின்றிக்கே) என்றது— ஸ்வ ஸ்வரூபபரஸ்வரூப ஜ்ஞானமும் புருஷார்த்த2 ஜ்ஞானமும் இல்லாமையாலே, ஸ்வஶேஷத்வாநுரூபமான ஶேஷிவிஷய கைங்கர்யரூப புருஷார்த்த2த்தை இழந்தோமென்கிற அலாப4 க்லேஶந்தானுமின்றிக்கே—என்கை. (ஸம்ஸாரமாகிற பெருங் கடலிலே விழுந்து நோவுபட) என்றது— 14. "**संसारसागरं घोरमनन्तक्लेशभाजनम्**" (ஸம்ஸாரஸாக3ரம் கோ4ரம் அநந்தக்லேஶ பா4ஜநம) என்கிறபடியே அநந்தக்லேஶபா4ஜநமாய், ஒருவராலும் ஸ்வயத்நத்தால் கரைகாண அரிதாம்படியிருக்கிற ஸம்ஸாரமாகிற மஹாஸமுத்3ரத்துக்குள்ளே விழுந்து தாபத்ரயாபி4பூ4தராய்க்கொண்டு க்லேஶப்பட—என்கை. இத்தால், தங்களையும் ஈஶ்வரனையும் அறியாமையாலும், புருஷார்த்த2த்தை அறியாமையாலும், ஸம்ஸார ஸமுத்3ரத்துக்குள்ளே கிடந்து நோவுபடாநிற்க, விரோதி4யான ஸம்ஸாரந்தன்னையும் தந்நிஸ்தரணோபாயத்தையும் அறியாமையாலும், ஜ்ஞாதவ்யமான அர்த்த2பஞ்சகத்திலும் ஒன்றையும் அறியாமற் கிடந்தார்களென்கை. 15. "**प्राप्यस्य ब्रह्मणो रूपं**" (ப்ராப்யஸ்ய ப்3ரஹ்மணோ ரூபம்) இத்யாதி3ப்படியே ஸகலஶாஸ்த்ரங்களும் ப்ரதிபாதி3ப்பது அர்த்த2பஞ்சகத்தையுமிறே. இவ்வர்த்த2ங்களை இவர்களுக்கு ஸங்க்3ரஹமாக அறிவிக்கைக்காக, ஸகலஶாஸ்த்ர ஸங்க்3ரஹமான திருமந்த்ரத்தை ஸர்வேஶ்வரன் வெளியிட்ட ப்ரகாரத்தைச் சொல்லுகிறது மேல்,—(ஸர்வேஶ்வரன் தன்

/ பெரியதிரு 6-6-2.

க்ருபையாலே) என்றது—16. "ईशेशितव्यसंबन्धादनिदंप्रथमादपि" (ஈஶேஶிதவ்யஸம்பந்தா₄த் அநிதம்ப்ரதமாதபி) என்கிற படியே அநாதியாக ஸர்வரோடுமுண்டான ஈஶேஶிதவ்ய ஸம்பந்தத்தையுடையனான எம்பெருமான். 17. "एवं संसृतिचक्रस्थे भ्राम्यमाणे स्वकर्मभिः। जीवे दुःखाकुले विष्णोः कृपा काप्युपजायते॥" (ஏவம் ஸம்ஸ்ருதிசக்ரஸ்தே₂ ப்₄ராம்யமாணே ஸ்வகர்மபி₄: । ஜீவே து₃:க₂ாகுலே விஷ்ணோ: க்ருபா காப்யுபஜாயதே ॥) என்கிற படியே இவர்கள் படுகிற து₃:க்க₂த₃ர்ஶநமாத்ரத்தாலுண்டான தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே-என்கை. (இவர்கள் தன்னையறிந்து கரைமரம்சேரும்படி) என்றது—இப்படி ஸம்ஸாரஸாக₃ரத்திலே கிடந்து நோவுபடுகிற இவர்கள் 18. "त्वामेव शरणं प्राप्य निस्तरन्ति मनीषिणः" (த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:) என்றும், 19. "संसारार्णवमग्नानां विषयाक्रान्तचेतसां। विष्णुपोतं विना नान्यत् किञ्चिदस्ति परायणम्॥" (ஸம்ஸாரார்ணவமக்₃நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம்। விஷ்ணு போதம விநா நாந்யத் கிஞ்சித₃ஸ்தி பராயணம் ॥) என்றும் சொல்லுகிறபடியே. ஸம்ஸார நிஸ்தரணோபாயபூ₄தனான தன்னை யறிந்து ஸம்ஸாரஸாக₃ரத்தைக் கடந்து அக்கரைப் படும்படி—என்கை. (தானே ஶிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று) என்றது—*"நரநாரணனாயுலகத்தறநூல் சிங்காமைவிரித்தவன்" என்கிறபடியே நரநாராயணரூபேண அவதரித்து நரனான தான் ஶிஷ்யனுமாய், நாராயணனான தான் ஆசார்யனுமாய் நின்று—என்கை. (திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான்) என்றது—ஸகலஶாஸ்த்ர ஸங்க்₃ரஹமாய், அந்த ஶாஸ்த்ர தாத்பர்யமான அர்த்த₂பஞ்சகத்தையும் ஸுஸ்பஷ்டமாக ப்ரதிபாதி₃யாநிற்கும் திருமந்த்ரத்தை ப்ரகாஶிப்பித்தருளினான்-என்கை. அருளிச்செய்தானென்னாதே வெளியிட்டருளினானென்றது, இப்போது தான் ஒன்றை நிர்மித்துச் சொன்னானல்லன், அநாதி₃யானத்தை ப்ரகாஶிப்பித்தானித்தனை என்னுமிடமும், அதிகு₃ஹ்யமாயுள்ளத்தை

* பெரியதிரு 10-6-1.

இவர்கள் து₃ர்க்க₃தி கண்டு ஸஹிக்கமாட்டாமையாலே ப்ர காஶிப்பித்தானென்னுமிடமும் தோற்றுகைக்காக.

ஆனால், ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளிவிட அமையாதோ? ஶிஷ்யனாய் நின்றது எதுக்காக? என்ன, அருளிச் செய்கிறார்—'ஶிஷ்யனாய்' என்று தொடங்கி.

மூ. 6. ஶிஷ்யனாய் நின்றது, ஶிஷ்யனிருக்குமிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக.

வ்யா:— அதாவது - ஆசார்யனாய் நின்று வெளியிட்டருளின அளவன்றிக்கே, தானே ஶிஷ்யனுமாய்க்கொண்டு நின்றது, 20. "आस्तिको धर्मशीलश्च शीलवान् वैष्णवः शुचिः। गम्भीरश्चतुरो धीरः शिष्य इत्यभिधीयते॥" (ஆஸ்திகோ த₄ர்ம ஶீலஶ்ச ஶீலவாந் வைஷ்ணவஶ்ஶுசி:। க₃ம்பீ₄ரஶ்சதுரோ தீ₄ரஶ் ஶிஷ்ய இத்யபி₄தீ₄யதே॥) 21. "शरीरं वसु विज्ञानं वासः कर्म गुणानसून्। गुर्वर्थं धारयेद्यस्तु स शिष्यो नेतरः स्मृतः॥" (ஶரீரம் வஸு விஜ்ஞாநம் வாஸ: கர்ம கு₃ணாநஸூந்। கு₃ர்வர்த்த₂ம் தா₄ரயேத் யஸ்து ஸ ஶிஷ்யோ நேதர: ஸ்ம்ருத:॥) 22. "सद्बुद्धिः साधुसेवी समुचितचरितस्तत्त्वबोधाभिलाषी शुश्रूषुस्त्यक्तमानः प्रणिपतनपरः प्रश्नकालप्रतीक्षः। शान्तो दान्तोऽनसूयुः शरणमुपगतः शास्त्रविश्वासशाली शिष्यः प्राप्तः परीक्षां कृतविदभिमतस्तत्त्वतः शिक्षणीयः॥" (ஸத்₃பு₃த்₃தி₄ஸ் ஸாது₄ஸேவீ ஸமுசிதசரிதஸ்தத்வபோ₃தா₄பி₄லாஷீ ஶுஶ்ரூஷுஸ்த்யக்தமாந: ப்ரணிபதநபர: ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ:। ஶாந்தோ தா₃ந்தோऽநஸூயுஶ்ஶரணமுபக₃தஶ்ஶாஸ்த்ரவிஶ்வாஸஶாலீ ஶிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாம் க்ருதவித₃பி₄மதஸ் தத்வதஶ்ஶிக்ஷணீய:॥) இத்யாதி₃களிற் சொல்லுகிறபடிகளும், ஸாத்₄யாந்தர நிவ்ருத்தியும், ப₂லஸாத₄ந ஶுஶ்ரூஷையும், ஆர்த்தியும், ஆத₃ரமும், அநஸூயையும் உடையனாயிருக்கையுமாகிற ஶிஷ்யலக்ஷணம் லோகத்திலுள்ளார் அறியாமையாலே அத்தை ஸ்வாநுஷ்டா₂நத்தாலே அறிவிக்கைக்காக—என்கை. உபதே₃ஶத்தாலே அறிவிக்குமளவில், ஸ்வோத்கர்ஷம் தேடிக்கொள்ளவந்தானித்தனை யென்று நினைக்கவுங் கூடும்; அநுஷ்டா₂நத்தாலே அறிவிக்குமளவில், நமக்கும் இது

வேணுமென்று விஶ்வஸித்துப் பரிக்₃ரஹிக்கைக்கு உடலா யிருக்குமிறே.

"இப்படி ஶிஷ்யனாய் நின்று இம்மந்த்ரஶிக்ஷை பண்ணி இவ்வழியாலேஜ்ஞாநம்பிறக்கவேணுமோ? † ஞானக்கலைகள் என்கிறபடியே ஸகலஶாஸ்த்ரங்களும் ஜ்ஞாநஸாத₄நமா யன்றோ இருப்பது: அவற்றை அப்₄யஸித்து அவ்வழியாலே ஜ்ஞாநம் பிறந்தாலோ?' என்ன, ஶாஸ்த்ரஜந்யஜ்ஞாநத் துக்கும், இம்மந்த்ரஜந்யஜ்ஞாநத்துக்கும் உண்டான விஶே ஷத்தை ஸத்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் 'ஸகலஶாஸ்த் ரங்களாலும்' என்று தொடங்கி.

**மூ. 7. ஸகல ஶாஸ்த்ரங்களாலும் பிறக்கும் ஜ்ஞாநம் ஸ்வயமார்ஜிதம்போலே; திருமந்த்ரத்தால் பிறக்கும ஜ்ஞாநம் பைத்ருகத₄நம்போலே.**

வ்யா:—அதாவது-தத்வஜ்ஞாந ஜநகங்களான ஶ்ருதி ஸ்ம்ருத்யாதி₃ ஸகலஶாஸ்த்ரங்களாலும் சேதநருக்குப் பிறக் கும் ஜ்ஞாநம் ஸ்வயம் ஆர்ஜிதத₄நம்போலே அத்யாயாஸலப்₄ யமாயிருக்கும். ஆசார்யோபதே₃ஶமடியாகத் திருமந்த்ரத் தால் பிறக்கும் ஜ்ஞாநம், பைத்ருகத₄நம்போலே அநாயாஸ லப்₄யமாயிருக்கும்—என்கை. 23. "**शास्त्रज्ञानं बहुक्लेशं बुद्धेश्चलनकारणम्। उपदेशाद्धरिं बुद्ध्वा विरमेत्सर्वकर्मसु॥**" (**ஶாஸ்த்ர ஜ்ஞாநம் ப₃ஹுக்லேஶம் பு₃த்₃தே₄ஶ்சலநகாரணம்। உபதே₃ஶாத் ஹரிம் பு₃த்₃த்₄வா விரமேத் ஸர்வ கர்மஸு॥**) என்னக்கடவதிறே. இத்தால், ஶாஸ்த்ரங்களிற்காட்டில் தத்ஸங்க்₃ரஹமான திரு மந்த்ரத்துக்கு உண்டான வைப₄வம் சொல்லிற்றாயிற்று.

ஆனால், ஶாஸ்த்ரங்களொழிந்ததாகிறது; ப₄க₃வந் மந்த்ரந் தான் இதொன்றுமன்றே; பின்னையும் பலவில்லையோ? என்கிற ஶங்கையிலே, மந்த்ராந்தரங்களிற்காட்டில் இதுக்கு உண்டான வைப₄வத்தை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம் பற்றி, 'ப₄க₃வந் மந்த்ரங்கள் தான் அநேகங்கள்' என்கிறார்.

† திருவாய் 1-9-8.

## மூ. 8. பகவந் மந்த்ரங்கள் தான் அநேகங்கள்.

வ்யா:-24. "आस्तां ते गुणराशिवद्गुणपरीवाहात्मनां जन्मनां सङ्ख्या" (ஆஸ்தாம் தே கு₃ணராஶிவத்₃கு₃ணபரீவாஹாத்மநாம் ஜந்மநாம் ஸங்க்₂யா) 25 "बहवो नृप कल्याणगुणाः पुत्रस्य सन्ति ते"(ப₃ஹவோ ந்ருப கல்யாணகு₃ணா: புத்ரஸ்ய ஸந்தி தே) 26."तवानन्तगुणस्यापि षडेव प्रथमे गुणाः"(தவாநந்தகு₃ணஸ்யாபி ஷடே₃வ ப்ரத₂மே கு₃ணா:) 27."बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन"(ப₃ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந) என்றும் *"எண்ணில் தொல்புகழ்" என்றும். †"எங்ஙின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்" என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ப₄கவத்₃கு₃ணங்களும், கு₃ணபரீவாஹரூபங்களான அவதாரங்களும் அஸங்க்₂யாதமாயிருக்குமாபோலே, அவற்றை அநுப₃ந்தி₄த்திருக்கும் மந்த்ர விஶேஷங்களும் 28."अनन्ता वै भगवन्मन्त्राः"(அநந்தா வை ப₄க₃வந்மந்த்ரா:) என்கிறபடியே அநேகங்களாயிருக்கும்-என்கை.

'அவையெல்லாந்தான் ஏகவர்க்க₃மோ?' என்ன, 'அவை தான் வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும்இரண்டு வர்க்க₃ம்' என்கிறார்;

## மூ. 9. அவைதான், வ்யாபகங்களென்றும் அவ்யாபகங்களென்றும் இரண்டுவர்க்க₃ம்.

வ்யா:— அதாவது—ஸர்வவ்யாபகமான ப₄க₃வத்ஸ்வரூபத்தை ப்ரதிபாதி₃க்கையாலே வ்யாபகங்களென்றும், ப₄க₃வத₃வதாரகு₃ண சேஷ்டிதங்களில் ஓரொன்றை ப்ரதிபாதி₃க்கையாலே அவ்யாபகங்களென்றும் உப₄யவர்க்க₃மாயிருக்கும்—என்கை.

'வர்க்க₃த்₃வயமும் தன்னிலொக்குமோ?' என்ன, 'அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்ட₂ங்கள்' என்கிறார்.

---

* திருவாய் 3-3-3. † திருவிருத்தம்-1.

மூ. 10 அவ்யாபகங்களில் வ்யாபகங்கள் மூன்றும் ஶ்ரேஷ்டங்கள்.

வ்யா:—அதாவது-அவ்யாபகங்களாய் இருந்துள்ள ஸகல மந்த்ரங்களிலும் 29. "नारायणाय विद्महे वासुदेवाय धीमहि तन्नो विष्णुः प्रचोदयात्" (நாராயணாய வித்₃மஹே. வாஸுதே₃வாய தீ₄மஹி. தந்நோ விஷ்ணு: ப்ரசோத₃யாத்) என்று விஷ்ணு காயத்ரியில் ஓதப்படுகிற வ்யாபகமந்த்ரங்கள் மூன்றும் ஶ்ரேஷ்டங்களாயிருக்கும்—என்கை.

இந்த விஷ்ணுக₃ாயத்ரியிலே நாராயண வாஸுதே₃வ விஷ்ணு ஶப்₃த₃ங்கள் அந்த மந்த்ரத்ரயத்துக்கும் ப்ரதா₄நபூ₄த நாமத்ரயங்களாகையாலே, ஸாதா₄ரணப்ரணவ நமஸ்ஸுக்களோடேகூடின மந்த்ரத்ரயத்துக்கும் உபலக்ஷணமாகக் கடவது.

இந்த வ்யாபகமந்த்ரத்ரயமும் தன்னிலொக்குமோ என்ன, 'இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதா₄நம்' என்கிறார்.

மூ. 11. இவை மூன்றிலும் வைத்துக்கொண்டு பெரிய திருமந்த்ரம் ப்ரதா₄நம்.

வ்யா:—அதாவது-அவ்யாபகங்களிற்காட்டில் ஶ்ரேஷ்ட₂மாயிருந்துள்ள இந்த வ்யாபகமந்த்ரங்கள் மூன்றிலும் வைத்துக்கொண்டு, 29. "नारायणाय विद्महे" (நாராயணாய வித்₃மஹே) என்று ப்ரத₂மோபாத்தமாகையாலும், அர்த்த₂பூர்த்யாதி₃களாலும், 30. "नास्ति चाष्टाक्षरात्परः" (நாஸ்தி சாஷ்டாக்ஷராத்பர:) 31. "न मन्त्रोऽष्टाक्षरात्परः" (ந மந்த்ரோஷ்டாக்ஷராத் பர:) என்னும்படியான பெருமையையுடைய திருமந்த்ரம் ப்ரதா₄நமாயிருக்கும்—என்கை.

'மற்றை வ்யாபகத்₃வயத்துக்கும் தாழ்வு ஏது? என்ன, 'மற்றையவையிரண்டுக்கும் அஶீஷ்டபரிக்₃ரஹமும் அபூர்த்தியும் உண்டு' என்கிறார்.

**மூ. 12. மற்றையவை இரண்டுக்கும் அஶிஷ்டபரிக்₃ரஹமும் அபூர்த்தியும் உண்டு.**

வ்யா:— அதாவது-வாஸுதே₃வவிஷ்ணுஶப்₃த₃ங்களான மற்றை வ்யாபகமந்த்ரங்களிரண்டுக்கும், நாராயணஶப்₃த₃ம் போலே ஸ்வரூபரூபகு₃ணாதி₃களையெல்லாம் ப்ரதிபாதி₃யாதே, ஸ்வரூபமாத்ரத்தை ப்ரதிபாதி₃க்கையாலே, நிர்விஶேஷசிந்மாத்ரவஸ்துவாதி₃களான குத்₃ருஷ்டிகள் மிகவும் ஆத₃ரித்துப்போருகையாகிற அஶிஷ்டபரிக்₃ரஹமும், வ்யாப்யாத்₄யாஹாராதி₃ஸாபேக்ஷதையாகிற அபூர்த்தியும் உண்டு-என்கை. ''ஷடக்ஷரி-வ்யாப்யபதா₃ர்த்த₂ங்களையும், வ்யாபகப்ரகாரத்தையும் வ்யாப்திப₂லத்தையும் வ்யாபகனுடைய கு₃ணங்களையும் சொலலாதே, வ்யாப்திமாத்ர ப்ரகாஶகமாகையாலே அபூர்ணம். வ்யாபகப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச்செய்தேயும், வ்யாப்யபதா₃ர்த்த₂ங்களுக்கு வாசகஶப்₃த₃ம் இல்லாமையாலும் 'सर्वं वसति'' (ஸர்வம் வஸதி) என்று அர்த்த₂ப₃லத்தாலே ஸர்வஶப்₃த₃ம் புகுந்தாலும், அதில் கு₃ணம் அந்வயியாமையாலும், இனி, கு₃ணஸித்₃தி₄க்காக ப₄க₃வச்ச₂ப்₃த₃த்தைக் கூட்டிக்கொள்ளவேண்டுகையாலும், வ்யாப்திப₂லத்தைச் சொல்லாமையாலும், த்₃வாத₃ஶாக்ஷரியும் அபூர்ணம். இம்மந்த்ரம் அவைபோலன்றியிலே, வ்யாப்யபதா₃ர்த்த₂ங்களோடு,வ்யாபகப்ரகாரத்தோடு,வ்யாப்திப₂லத்தோடு, வ்யாபகனுடைய கு₃ணங்களோடு வாசியற ஶப்₃த₃மாகக் காட்டுகையாலே, அவற்றிற்காட்டில் இதுக்கு அர்த்த₂பௌஷ்கல்யநிப₃ந்த₄நமான ஆதி₄க்யம்உண்டு" [பரந்தரஹஸ்யம்] என்று மற்றை வ்யாபகமந்த்ரங்களிரண்டினுடைய அபூர்த்தியையும் திருமந்த்ரத்தினுடைய அர்த்த₂பூர்த்தியையும் ஸுஸ்பஷ்டமாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே.

'இதுதனக்கு ஶிஷ்டபரிக்₃ரஹம் உண்டோ?' என்ன, அருளிச்செய்கிறார் இத்தை என்று தொடங்கி.

**மூ. 13. இத்தை, வேதங்களும், ருஷிகளும், ஆழ்வார்களும், ஆசார்யர்களும் விரும்பினார்கள்.**

வ்யா:—அதாவது-விஷ்ணுகா₃யத்ரியிலே வ்யாபகமந்த்ர த்ரயத்தையுஞ் சொல்லுகிறவளவில், ப்ரத₂மத்திலே நாராயணஶப்₃த₃த்தை ப்ராத₄ாந்யேந ப்ரதிபாதி₃க்கையாலும். 32. "विश्वं नारायणं" (விஶ்வம் நாராயணம்) என்று தொடங்கி. 33. "नारायणपरं ब्रह्म तत्त्वं नारायणः परः। नारायणपरो ज्योतिरात्मा नारायणः परः। यच्च किञ्चिज्जगत्यस्मिन् दृश्यते श्रूयतेऽपि वा। अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य नारायणः स्थितः॥" (நாராயணபரம் ப்₃ரஹ்ம தத்த்வம் நாராயண: பர:। நாராயணபரோ ஜ்யோதிராத்மா நாராயண: பர:। யச்ச கிஞ்சிஜ்ஜக₃த்யஸ்மிந் த்₃ருஶ்யதே ஶ்ரூயதேபி வா। அந்தர்ப₃ஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தி₂த:॥) என்று ஸகலவேதா₃ந்த ஸாரபூ₄தமான நாராயணாநுவாகத்திலும். 34. "एको हवै नारायण आसीन्न ब्रह्मा नेशानो नेमे द्यावापृथिवी" (ஏகோ ஹவை நாராயண ஆஸீந்ந ப்₃ரஹ்மா நேஶாநோ நேமே த்₃யாவாப்ருதி₂வீ) என்று மஹோபநிஷத்திலும், 35 "चक्षुश्च द्रष्टव्यञ्च नारायणः। श्रोत्रञ्च श्रोतव्यञ्च नारायणः।" (சக்ஷுஶ்ச த்₃ரஷ்டவ்யஞ்ச நாராயண:। ஶ்ரோத்ரஞ்ச ஶ்ரோதவ்யஞ்ச நாராயண:।) என்று தொடங்கி 36. "दिशश्च प्रदिशश्च नारायणः" (தி₃ஶஶ்ச ப்ரதி₃ஶஶ்ச நாராயண:) என்றுமுடிவாக நடுவுடைய ஸுபா₃லோபநிஷத்திலும், 37. "यस्यात्मा शरीरं यस्य पृथिवी शरीरं" (யஸ்யாத்மா ஶரீரம் யஸ்ய ப்ருதி₂வீ ஶரீரம்) என்று தொடங்கி 38. "यस्य मृत्युः शरीरं" (யஸ்ய ம்ருத்யு: ஶரீரம்) என்கிறது ஈறாக நடுவுள்ளபர்யாயங்கள்தோறும் 39. "एष सर्वभूतान्तरात्मा अपहतपाप्मा दिव्यो देव एको नारायणः" (ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மா அபஹதபாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:) என்று அந்தர்யாமி ப்₃ராஹ்மணத்திலும் வாஸுதே₃வ விஷ்ணுஶப்₃த₃ங்களை அநாத₃ரித்து நாராயண ஶப்₃த₃த்தையிட்டு ப₄க₃வத்ஸ்வரூபாதி₃களை நிர்த்₃தே₃ஶிக்கையாலும், அபௌருஷேயமாய், நித்யநிர்த்₃தோ₃ஷமாய், ஸ்வத: ப்ரமாணங்களான வேத₃ங்களும் விரும்பிற்றின. 40. "यथा सर्वेषु देवेषु नास्ति नारायणात्परः। तथा सर्वेषु मन्त्रेषु नास्ति चाष्टाक्षरात्परः॥" (யதா₂ ஸர்வேஷு தே₃வேஷு நாஸ்தி நாராயணாத் பர:। ததா₂ ஸர்வேஷு மந்த்ரேஷு நாஸ்தி சாஷ்டாக்ஷராத்பர:॥)

31. "भूत्वोर्ध्ववाहुरद्यात्र सत्यपूर्वं ब्रवीमि वः। हे पुत्रशिष्याः शृणुत न मन्त्रोष्टाक्षरात्परः ॥" (பூ$_4$த்வோர்த்$_4$வபா$_3$ஹுரத்$_3$யாத்ர ஸத்யபூர்வம் ப்$_3$ரவீமி வ:। ஹே புத்ரஶிஷ்யா:ஶ்ருணுத ந மந்த்ரோஷ்டாக்ஷராத்பர: ॥) *41.* "सर्ववेदान्तसारार्थः संसारार्णवतारकः। गतिरष्टाक्षरो नृणां अपुनर्भवकाङ्क्षिणाम् ॥" (ஸர்வவேதா$_3$ந்த ஸாரார்த்த$_2$ஸ்ஸம்ஸாரார்ணவதாரக:। க$_3$திரஷ்டாக்ஷரோ ந்ருணாம் அபுநர்ப$_4$வ காங்க்ஷிணாம் ॥) *42.* "आर्ता विषण्णाः शिथिलाश्च भीताः घोरेषु च व्याधिषु वर्तमानाः। सङ्कीर्त्य नारायणशब्दमात्रं विमुक्तदुःखाः सुखिनो भवन्ति ॥" (ஆர்த்தா விஷண்ணா: ஶிதி$_2$லாஶ்ச பீ$_4$தா: கோ$_4$ரேஷு ச வ்யாதி$_4$ஷு வர்த்தமாநா:।ஸங்கீர்த்ய நாராயணஶப்$_3$த$_3$மாத்ரம் விமுக்த து:க்கா$_2$ஸ்ஸுகி$_2$நோ ப$_4$வந்தி॥) *43.* "नारायणेति शब्दोऽस्ति वागस्ति वशवर्तिनी। तथापि नरके घोरे पतन्तीति किमद्भुतम् ॥" (நாராயணேதி ஶப்$_3$தோ$_3$ஸ்தி வாக$_3$ஸ்தி வஶவர்த்திநீ। தத$_2$ாபி நரகே கோ$_4$ரே பதந்தீதி கிமத்$_3$பு$_4$தம் ॥) *44* "किं तत्र बहुभिर्मन्त्रैः किं तत्र बहुभिर्व्रतैः। नमो नारायणायेति मन्त्रः सर्वार्थसाधकः ॥" (கிம் தத்ர ப$_3$ஹுபி$_4$ர்மந்த்ரை:கிம் தத்ர ப$_3$ஹுபி$_4$ர்வ்ரதை:।நமோ நாராயணாயேதி மந்த்ர: ஸர்வார்த்த$_2$ஸாத$_4$க:॥) *இத்யாதி$_3$களாலே வேதா$_3$ர்த்தோ$_2$பப்$_3$ரும்ஹணங்களாயிருக்கிற ஸ்வப்ரப$_3$ந்த$_4$ங்களிலே பல விடங்களிலும் இத்தை ஶ்லாகி$_4$த்துக்கொண்டு சொல்லுகையாலே. வேதா$_3$ர்த்த$_2$ விஶதீ$_3$கரண ப்ரவ்ருத்தரான வ்யாஸாதி$_3$ பரமருஷிகளும் விரும்பினார்கள்; * "வண்புகழ்நாரணன்" || "செல்வநாரணன்" என்று தொடங்கி / "வாழ்புகழ் நாரணன்" என்று முடிவாக. ஆதி$_3$மத்$_4$யாவஸாநமாக நம்மாழ்வார் அருளிச்செய்கையாலும். § "நாடுநகரமும் நன்கறிய நமோ நாராயணாய" என்று தொடங்கி † "ஓவாதே நமோ நாரணாவென்பன்" என்று பெரியாழ்வாரும், ‡ "நாத்தழும்பெழ நாரணா" என்று தொடங்கி i "நலந்திகழ் நாரணன்" என்று பெருமாளும், e "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி s "எட்டெழுத்து மோதுவார்கள்*

* திருவாய்1-2-10. || திருவாய்1-10-8. / திருவாய்10-9-1.
§ திருப்பல்-4. † பெரியாழ்திரு 5-1-3. ‡ பெரு-திரு 2-4.
i பெரு-திரு10-11. e நான்-திருவ-1. s திருச்சந்த-77.

வல்லர் வானமாளவே" என்று திருமழிசைப்பிரானும். o "நான் கண்டுகொண்டேன் நாராயணா வென்னும நாமம்" என்று உபக்ரமதசையிலே ஒருகால் சொன்னாற்போலே ஒன்பதின்கால் சொல்லி r "நாராயணனே வா! மணிவண்ணா! நாகணையாய்! வாராய்"என்று திருமங்கையாழ்வாரும உபக்ரமத்தோடு உபஸம்ஹாரத்தோடு வாசியற அருளிச்செய்கையாலும். f "நன்மாலைகொண்டு நமோ நாரணா வென்னும் சொன்மாலை கற்றேன்" என்றும், i 'நாரணனைவென்றோவா துரைக்கு முரையுண்டே" என்றும். s "ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு" t 'நாரணன் தன் நாமங்கள்" c "பகற்கண்டேன் நாரணனைக்கண்டேன்"என்றும். || "நாமம் பல சொல்லி நாராயணா" என்றும் முதலாழ்வார்களும் அருளிச்செய்கையாலும. / "மயர்வறமதிநல மருளினன்" என்கிறபடியே நிர்ஹேதுக பகவத் கடாக்ஷத்தாலே ஸமதிகத ஸமஸ்த வஸ்து வாஸ்தவரான ஆழ்வார்களெல்லாரும் விரும்பினார்கள். இதரமந்த்ரங்களை அநாதரித்து இத்தையே தந்தாமுக்குத் தஞ்சமாக அநுஸந்தித்து. உபதேசவேளையிலும் தந்தாமைப் பற்றினவர்களுக்கும் இத்தையே உஜ்ஜீவநஹேதுவாக உபதேசித்துப்போருகையாலே. அவ்வாழ்வார்களைப் பின்சென்ற ஆசார்யர்களெல்லாரும் விரும்பினார்களென்கை.

இத்தால் மந்த்ராந்தரங்களிற் காட்டில் இம்மந்த்ரத்துக்குண்டான வைபவஞ் சொல்லிற்றாய்த்து.

இனி, வாச்யந்தன்னிலும் இதுக்குண்டான வைபவத்தை அருளிச்செய்கிறார் "வாச்ய ப்ரபாவம் போலன்று வாசக ப்ரபாவம்" என்று.

---

o பெரிய திரு 1-1-1. r சிறிய திரும 50. f முதல் திருவ 57. i முதல் திருவ 95. s இர-திருவ 1. t இர-திருவ-2. c இர-திருவ 81. || மூன்-திருவ 8. / திருவாய் 1-1-1.

மூ. 14. வாச்ய ப்ரப₄ாவம் போலன்று வாசக ப்ரப₄ாவம்.

வ்யா:— அதாவது.—இதுக்கு வாச்யனாயிருந்துள்ள ஈஶ்வரனுடைய பெருமை போலன்று தத்₃வாசகமான இதின் பெருமையென்றபடி.

அதுதான் ஏது என்னவருளிச்செய்கிறார் 'அவன் தூ₃ரஸ்த₂னானாலும் இது கிட்டி நின்றுதவும்' என்று;

மூ. 15. அவன் தூ₃ரஸ்த₂னானாலும் இது கிட்டி நின்று உதவும்.

வ்யா:—அதாவது-இதுக்கு வாச்யனானவன் ஸந்நிஹிதனன்றிக்கே தூ₃ரஸ்த₂னாயிருந்த காலத்திலும் வாசகமான இது ஆஸந்நமாய்நின்று தன்னை வசித்தவர்கள் அபேக்ஷிதங்களை ஸாதி₄த்துக்கொடுக்குமென்கை.

'இப்படி வாச்யன் தூ₃ரஸ்த₂னாயிருக்க, வாசகம் உதவின இடம் உண்டோ?' என்ன அருளிச்செய்கிறார் 'த்₃ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே' என்று.

மூ. 16. த்₃ரௌபதிக்கு ஆபத்திலே புடைவை சுரந்தது திருநாமமிறே.

வ்யா— அதாவது-மஹாஸத₃ஸ்ஸிலே து₃ஶ்ஶாஸனன் வஸ்த்ராபஹாரம் பண்ணுகிறபோது. 45. "महत्यापदि संप्राप्ते स्मर्तव्यो भगवान् हरिः"(மஹத்யாபதி₃ ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ ப₄க₃வாந் ஹரி:)என்று முன்பே ஸ்ரீவஸிஷ்ட₂மஹர்ஷி சொல்லி வைத்ததை நினைத்து. 46. "शङ्खचक्रगदापाणे द्वारकानिलयाच्युत। गोविन्द पुण्डरीकाक्ष रक्ष मां शरणागताम्॥" (ஶங்க₂சக்ரக₃தா₃பாணே த்₃வாரகாநிலயாச்யுத। கோ₃விந்த₃ புண்ட₃ரீகாக்ஷ ரக்ஷ மாம் ஶரணாக₃தாம்॥) என்று ஶரணம் புகுந்த த்₃ரௌபதி₃க்கு அவ்வாபத்திலே 47. "गोविन्देति यदाक्रन्दत्कृष्णा मां दूरवासिनम्" (கோ₃விந்தே₃தி யதா₃க்ரந்த₃த்க்ருஷ்ணா மாம் தூ₃ரவாஸிநம்) என்கிறபடியே வாச்யனான க்ருஷ்ணன் தூ₃ரஸ்த₂னாயிருக்கச்செய்தேயும். வஸ்த்ரத்தை

வர்த்தி₄ப்பித்துக்கொடுக்கது. அவ்வவதாரசதுக்கு வாசகமான கோ₃விந்த₃னென்கிற திருநாமமிறேயென்கை. நாராயண ஶப்₃த₃ார்த்த₂த்தில் ஏகதே₃ஶத்துக்கு வாசகமான ஒருதிருநாமம் செய்தபடி கண்டால். இதன் ப்ரப₄ாவம் கிம்புநர்ந்யாயஸித்₃த₄மிறே யென்று கருத்து.

இன்னம் ஒருப்ரகாரத்தாலே இதன் வைப₄வத்தை அருளிச்செய்கிருர் 'சொல்லும் க்ரமம் ஒழியச்சொன்னலும்' என்று தொடங்கி.

**மூ. 17. சொல்லும் க்ரமம் ஒழியச்சொன்னலும் தன் ஸ்வரூபம் கெட நில்லாது.**

வ்யா:— அதாவது-ஏதேனும் ஒருமந்த்ரமும் தன்னைத் தஞ்சமாக விஶ்வஸித்துச் சொன்னவர்களுக்கொழியத் தன் கார்யம் செய்யாதேயாகிலும். இது அங்ஙனன்றிக்கே தன்னைத் தஞ்சமாக விஶ்வஸித்துச் சொல்லுகையாகிற க்ரமம் ஒழிய. 48. **"साङ्केत्यं पारिहास्यञ्च स्तोभं हेलनमेव वा" (ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யஞ்ச ஸ்தோப₄ம் ஹேளநமேவ வா)** என்கிறபடியே சொல்லிலும். சொன்னவர்களுக்கு ரக்ஷகமாகையாகிற தன் ஸ்வரூபத்தில் நழுவநில்லாதென்கை.

இனி. இதன் ஸர்வாபேக்ஷிதப்ரத₃த்வமாகிற வைப₄வத்தை அருளிச்செய்கிருர் 'இதுதான்' என்று தொடங்கி.

**மூ. 18. இதுதான் "குலந்தரும்" என்கிறபடியே எல்லா அபேக்ஷிதங்களையும் கொடுக்கும்.**

வ்யா:—அதாவது-இம்மந்த்ரந்தான் "குலந்தரும்" என்று தொடங்கி ஆழ்வார் அருளிச்செய்தபடியே, அதி₄காராநுகு₃ணமான அபேக்ஷிதங்களையெல்லாம் கொடுக்குமென்கை.

அத்தை விஶதீ₃கரிக்கிருர் 'ஐஶ்வர்ய' இத்யாதி₃யாலே.

**மூ. 19. ஐஶ்வர்ய கைவல்ய ப₄க₃வல்லாப₄ங்களை ஆசைப்பட்டவர்களுக்கு அவற்றைக் கொடுக்கும்.**

வ்யா:—அதாவது-49 "ऐहलौकिकमैश्वर्यं स्वर्गाद्यं पारलौकिकम्। कैवल्यं भगवन्तञ्च मन्त्रोऽयं साधयिष्यति॥" (ஐஹலௌகிகமைஶ்வர்யம் ஸ்வர்க்கா₃த்₃யம் பாரலௌகிகம்। கைவல்யம் ப₄க₃வந்தஞ்ச மந்த்ரோயம் ஸாத₄யிஷ்யதி॥) என்கிறபடியே ஐஹிகமாயும் பாரலௌகிகமாயுமிருக்கும் ஐஶ்வர்யத்தையும், ஆத்மப்ராப்தி ரூபமான கைவல்யத்தையும், பரமபுருஷார்த்த₂மான ப₄க₃வல்லாப₄த்தையும் ஆசைப்பட்ட அதி₄காரிகளுக்கு ஜபஹோமாதி₃களாலே ஸ்வயம் ஸாத₄நமாய் நின்று, அவ்வோ புருஷார்த்த₂ங்களைக் கொடுக்கு மென்கை.

இனி, கர்மாத்₃யுபாய ஸஹகாரித்வரூபமான இதன் வைப₄வத்தை அருளிச்செய்கிறார் 'கர்மஜ்ஞாந' இத்யாதி₃யாலே.

**மூ. 20. கர்மஜ்ஞாநப₄க்திகளிலே இழிந்தவர்களுக்கு விரோதி₄யைப் போக்கி அவற்றைத் தலைக் கட்டிக்கொடுக்கும்.**

வ்யா:—அதாவது-கர்மயோக₃த்தில் இழிந்தவர்களுக்கு ஜபஹோமாதி₃களாலே தன்னை ஸஹாயமாகக்கொள்ளுமளவில், கர்மயோகா₃ரம்ப₄ விரோதி₄யான பாபத்தைப்போக்கி, அந்தக் கர்மத்தினுடைய அவிச்சே₂தா₃பாத₃கமாய்க்கொண்டு அத்தைத் தலைக்கட்டிக்கொடுக்கும். ப்ரத₂மத்திலே. ஜ்ஞாநயோக₃த்திலே இழிந்தவர்களுக்குத் தன்னை ஸஹாயமாகக் கொள்ளுமளவில் கர்மஸாத்₄யமான ஜ்ஞாநாரம்ப₄விரோதி₄பாப நிவ்ருத்தியைப் பண்ணி அந்த ஜ்ஞாநத்துக்கு நாடோறும் அதிஶயத்தைப் பண்ணுநின்றுகொண்டு, அத்தைத் தலைக் கட்டிக்கொடுக்கும். ப₄க்தியோக₃த்திலே இழிந்தவர்களுக்குத் தன்னை ஸஹாயமாகக் கொள்ளுமளவில், ப₄க்தியோகா₃ரம்ப₄ விரோதி₄யான பாபத்தைப்போக்கி, ப₄க்திவ்ருத்₃தி₄ ஹேதுவாய்க்கொண்டு அத்தைத் தலைக்கட்டிக் கொடுக்குமென்கை.

இங்ஙனன்றிக்கே, ப்ரபந்நர்க்கு இது செய்யும் உபகார வைப₄வத்தை அருளிச்செய்கிறார் 'ப்ரபத்தியிலே' என்று தொடங்கி.

மூ. 21. ப்ரபத்தியிலே இழிந்தவர்களுக்கு ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பிறப்பித்துக் காலக்ஷேபத்துக்கும் போ₄க₃த்துக்கும் ஹேதுவாயிருக்கும்.

*வ்யா:—அதாவது-கீழ்ச்சொன்னவைபோலே து₃ஸ்ஸாதமுமாய், ஸ்வரூபவிருத்₃த₄முமாய் இருக்கையன்றிக்கே, ஸுஸாதமுமாய், ஸ்வரூபாநுரூபமுமான ப்ரபத்யுபாயத்திலே இழிந்தவர்களுக்கு, தத₃நுரூபமான ப₄க₃வத்பாரதந்த்ர்யரூப ஸ்வரூப ஜ்ஞாநத்தை விஸத₃மாகப் பிறப்பித்து அர்த்த₂ாநுஸந்த₄ாநாதி₃களாலே போதுபோக்குகைக்கும் ஹேதுவாய், * "எனக்கென நற்றேனும்பாலுமமுதுமாய திருமால் திருநாமம்" என்கிறபடியே ப்ராப்₃யவஸ்துவைப்போலே ஸ்வயம் போ₄க்₃யமாயிருக்கையாலே, போ₄க₃த்துக்கும் ஹேதுவாயிருக்குமென்கை.*

*இனி, ஜ்ஞாதவ்ய ஸகலார்த்த₂ ப்ரதிபாத₃கத்வமாகிற இதனை வைப₄வத்தை அருளிச்செய்கிறார், 'மற்றெல்லாம் பேசிலும்' என்று தொடங்கி.*

மூ. 22. †"மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே அறியவேண்டும் அர்த்த₂மெல்லாம் இதுக்குள்ளே உண்டு.

*வ்யா:—அதாவது- † "நின் திருவெட்டெழுத்துங் கற்று மற்றெல்லாம் பேசிலும்" என்கிறபடியே, ஆத்மோஜ்ஜீவநத்துக்கு உடலாக அறியவேண்டும் அர்த்த₂விஶேஷங்களெல்லாம் இம்மந்த்ரத்துக்குள்ளே உண்டென்கை.*

*'அறியவேண்டும் அர்த்த₂மெல்லாம் ஆகிறது எது?' என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார் 'அதாவது அஞ்சர்த்த₂ம்' என்று.*

மூ. 23. அதாவது-அஞ்சர்த்த₂ம.

---

* *பெரிய திரு 6-10-6.* † *பெரிய திரு 8-10-3.*

வ்யா:—ஸ்வஸ்வரூப பரஸ்வரூப புருஷார்த்த2ஸ்வரூப உபாயஸ்வரூப விரோதி4ஸ்வரூபங்களாகிற அர்த்த2பஞ்சகமும் என்றபடி. 50. "प्राप्यस्य ब्रह्मणो रूपं प्राप्तुश्च प्रत्यगात्मनः। प्राप्त्युपायं फलं प्राप्तेस्तथा प्राप्तिविरोधि च॥ वदन्ति सकला वेदाः सेतिहासपुराणकाः। मुनयश्च महात्मानो वेदवेदार्थवेदिनः॥" (ப்ராப்யஸ்ய ப்3ரஹ்மணோ ரூபம ப்ராப்துஸ்ச ப்ரத்யகா3த்மந:| ப்ராப்த்யுபாயம் ப2லம் ப்ராப்தேஸ் ததா2 ப்ராப்திவிரோதி4 ச| வத3ந்தி ஸகலா வேதா3ஸ் ஸேதிஹாஸபுராணகா:| முநயஸ்ச மஹாத்மானோ வேத3வேதா3ர்த்த2வேதி3ந:) என்கிறபடியே. ஸகல வேத3ங்களும் ப்ரதிபாதி3ப்பது இவ்வர்த்த2பஞ்சகத்தையுமாகையாலே. தத்ஸங்க்3ரஹமான இம்மந்த்ரத்துக்கும் ப்ரதிபாத்3யம் இதுவேயிறே. இம்மந்த்ரந்தான் பரணவத்தாலே ப்ரத்யகா3த்ம ஸ்வரூபத்தையும், நமஸ்ஸாலே விரோத்4யுபாய ஸ்வரூபங்களையும், நாராயணபத3த்தாலே பரஸ்வரூபத்தையும், அதில் சதுர்த்தி2யாலே ப2லஸ்வரூபத்தையும் ப்ரதிபாதி3க்கக் கடவதாயிறே இருப்பது.

இம்மந்த்ரார்த்த2 வைப4வத்தை அருளிச்செய்கிறார் மேல் 'பூர்வாசார்யர்கள்' என்று தொடங்கி.

**மூ. 24.** பூர்வாசார்யர்கள், இதில் அர்த்த2ம் அறிவதற்கு முன்பு, தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்த2ஜ்ஞாநம பிறந்த பின்பு, "பிறந்தபின் மறந்திலேன்" என்கிறபடியே இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்.

வ்யா:— அதாவது-நாதயாமுந யதிவராதி3களான நம் பூர்வாசார்யர்கள். "அன்று நான் பிறந்திலேன்" என்கிறபடியே இம்மந்த்ரத்தில் அர்த்த2மறிவதற்கு முன்பு தங்களைப் பிறந்தார்களாக நினைத்திரார்கள்; இதில் அர்த்த2ஜ்ஞாநம் தங்களுக்குண்டான பின்பு, 'பிறந்தபின் மறந்திலேன்'என்று ஆழ்வார் தி3வ்யஸூக்தியில் சொல்லுகிறபடியே இம்மந்த்

ரார்த்தத்தையொழிய மற்றொன்றாலே காலக்ஷேபம் பண்ணி யறியார்களென்கை. வேதாஸ்த்ரங்கள் ஆழ்வார் அருளிச் செயல்கள் இவற்றால் போதுபோக்கும்போதும் இம்மந்த்ரார்த்தத்தை உட்கொண்டே அநுஸந்திக்கையாலே (இதனையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்) என்னத்தட்டில்லை.

வாசகசக்தி ஸர்வத்தையும் ஸாதிக்கக்கடவதன்றோ யிருக்க, இதினுடைய வாச்யத்திலே இவர்களூன்றுகைக்கு ஹேதுவேதென்ன அருளிச்செய்கிறார், வாசகத்திற்காட்டில்' என்று தொடங்கி.

**ஸூ. 25. வாசகத்திற்காட்டில் வாச்யத்திலே ஊன்றுகைக்கடி, ஈஶ்வரனே உபாயோபேயமென்று நினைத்திருக்கை.**

வ்யா:—அதாவது:- ஸர்வபலத்துக்கும் ஸ்வயம் ஸாதநமாயும், ஸாதநாந்தரங்களுக்கும் ஸஹகாரியாய் நின்று தலைக்கட்டிக்கொடுத்தும் போருகிற இதினுடைய வாசகசக்தி தானே அமைந்திருக்கச்செய்தே, அதிலுங்காட்டில் கீழ்ச் சொன்னபடியே, இம்மந்த்ரத்தினுடைய வாச்யத்திலே பூர்வாசார்யர்கள் ஊன்றுகைக்கடி, உபேயாந்தரபரராய், இத்தை ஸாதநமாகக்கொண்டு ஸாதித்தல், உபாயாந்தரபரராய் இத்தை ஸஹகாரியாகக்கொள்ளுதல் செய்யுமவர்களைப் போலன்றிக்கே, உபாயோபேயங்களிரண்டும் ஈஶ்வரனேயென்று ப்ரதிபத்திபண்ணியிருக்கையென்றபடி.

ஆக, "திருமந்த்ரத்தினுடைய சீர்மைக்குப் போரும்படி" என்று தொடங்கி, இவ்வளவும்-வாய்வந்தபடி அநுஸந்திக்கவொண்ணாதபடியான இதனுடைய கௌரவத்தையும், ஈஶ்வரன் தானே ஶிஷ்யனுமாய், ஆசார்யனுமாய் நின்று வெளியிட்டருளுகையால் வந்த ஏற்றத்தையும், ஸகலஶாஸ்த்ரங்களிலும், ஸகலமந்த்ரங்களிலும், வாச்யந்தன்னிலுங்

காட்டில் இதுக்கு உண்டான பெருமையையும், அக்ரம மாகச் சொல்லிலும் தன் கார்யம் செய்யும் ஆதிக்யத்தையும், அபேக்ஷித ஸகலபலப்ரதத்வரூபமான மாஹாத்ம்யத்தையும், கர்மாத்யுபாயஸஹகாரித்வரூபமான உத்கர்ஷத்தையும், ஜ்ஞாதவ்யஸகலார்த்தப்ரதிபாதகதயா வந்த மாஹாத்ம்யத்தையும், ஏகத்ப்ரதிபாத்ய அர்த்தகௌரவ விசேஷத்தையும் அருளிச்செய்கையாலே இம்மந்த்ரத்திநுடைய வைபவத்தை எல்லாரும் அறியும்படி தர்சிப்பித்தருளினாராயிற்று.

இனிமேல், இம்மந்த்ரத்துக்கு வாச்யார்த்தம் இரண்டு படியாக அருளிச்செய்கிறார் 'இதுதன்னில்' என்று தொடங்கி.

**ஸூ. 26. இதுதன்னில்சொல்லுகிற அர்த்தம்-ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்; ஸ்வரூபமும் உபாயமும் பலமுமென்னவுமாம்.**

வ்யா:—அதாவது—இம்மந்த்ரந்தன்னில் சொல்லுகிற அர்த்தம்—இவ்வாத்மாவினுடைய சேஷத்வபாரதந்த்ர்யங்களாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபத்துக்கு அநுரூபமாயிருந்துள்ள கைங்கர்யமாகிற ப்ராப்யமும்; அன்றிக்கே, சேஷத்வமாகிற ஸ்வரூபமும், அந்த ஸ்வரூபாநுரூபமான உபாயமும், உபாயலக்ஷ்யமான பலமும் என்று சொல்லவுமாமென்கை. இதில் ப்ரதமயோஜனையில் ப்ரணவ நமஸ்ஸுக்களாலே ஸ்வரூபமும், நாராயணபதத்தாலே ப்ராப்யமும் சொல்லுகிறது. அநந்தரயோஜனையில், ப்ரணவத்தாலே சேஷத்வமும், நமஸ்ஸாலே உபாயமும், நாராயணபதத்தாலே பலமும் சொல்லுகிறது.

'பலவிசேஷந்தானிருக்கும்படி எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் 'பலமிருக்கும்படி' என்று தொடங்கி.

**ஸூ. 27. பலமிருக்கும்படி ப்ரமேயசேகரத்திலும் அர்ச்சிராதிகதியிலும் சொன்னோம்.**

வ்யா:—அதாவது - இவ்வாத்மாவுக்கு ப்ராப்யமான பலந்தான், அர்ச்சிராதி₃மார்க₃த்தாலே பரமபத₃த்திலே போய் பரிபூர்ண ப₄க₃வத₃நுப₄வத்தைப் பண்ணி அவ்வநுப₄வஜநித ப்ரீதிப்ரேரிதனாய்க்கொண்டு பண்ணும் அஶேஷஶேஷவ்ருத்தியாகையாலே, அதிருக்கும்படியை ஸங்க்₃ரஹேண ப்ரமேயஶேக₂ரமாகிற ப்ரப₃ந்த₄த்திலும், விஸ்தரேண அர்ச்சிராதி₃க₃தியாகிற ப்ரப₃ந்த₄த்திலும் விஶத₃மாகச் சொன்னோம்; அவற்றிலே கண்டுகொள்வதென்கை.

இனி, இம்மந்த்ரத்துக்கு ப்ரதிபத₃ம் அர்த்த₂ம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரத₂மம் இதினுடைய அக்ஷரஸங்க்₂யையையும், பத₃ஸங்க்₂யையையும் அருளிச்செய்கிறார், 'இதுதான்' என்று தொடங்கி.

மூ 28. இதுதான் எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பத₃மாயிருக்கும்.

வ்யா:—அதாவது - இம்மந்த்ரந்தான் 51."ओमित्येकाक्षरं। नम इति द्वे अक्षरे। नारायणायेति पञ्चाक्षराणि। इत्यष्टाक्षरं छन्दसा गायत्री चेति॥" (ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்₃வே அக்ஷரே, நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரம் ச₂ந்த₃ஸா கா₃யத்ரீசேதி) 52. "ओमित्यग्रे व्याहरेत्। नम इति पश्चात्। नारायणायेत्युपरिष्टात्।" (ஓமித்யக்₃ரே வ்யாஹரேத், நம இதி பஶ்சாத், நாராயணாயேத்யுபரிஷ்டாத்) என்கிறபடியே எட்டுத்திருவக்ஷரமாய், மூன்று பத₃மாயிருக்குமென்கை. இதனுடைய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுகிறவிடத்திலே, 51"ओमित्येकाक्षरं" (ஓமித்யேகாக்ஷரம்) என்று ப்ரணவத்தை ஓரக்ஷரமாகவும் 51"नम इति द्वे अक्षरे" (நம இதி த்₃வே அக்ஷரே) என்று நமஸ்ஸை இரண்டக்ஷரமாகவும் 51 "नारायणायेति पञ्चाक्षराणि" (நாராயணாயேதி பஞ்சாக்ஷராணி) என்று நாராயண பத₃த்தை அஞ்சக்ஷரமாகவும் ஶ்ருதி சொல்லுகையாலே, ஸமஸ்தபத₃மான நாராயண பத₃த்தில நாரபத₃த்தைப் பிரித்து ஷடக்ஷரமாக்கி, ப்ரணவத்தை

யொழிய அஷ்டாக்ஷரத்வம் சொல்லுமவர்களுடைய பக்ஷம் அவைதி$_3$கமாகையாலே அநாத$_3$ரணீயமாகக்கடவது.

'இதில் பத$_3$த்ரயமும் எவ்வர்த்த$_2$த்தைச் சொல்லுகிறது?' என்னும் ஆகாங்க்ஷையிலே, 'மூன்று பத$_3$மும் மூன்றர்த்த$_2$த்தைச் சொல்லுகிறது' என்கிறார்.

**மூ. 29. மூன்று பத$_3$மும் மூன்று அர்த்த$_2$த்தைச் சொல்லுகிறது.**

அவ்வர்த்த$_2$ங்கள் தம்மை விஶத$_3$மாக அருளிச்செய்கிறார் 'அதாவது-ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும்' என்று.

**மூ. 30. அதாவது—ஶேஷத்வமும், பாரதந்த்ர்யமும், கைங்கர்யமும.**

வ்யா:—'ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமும்' என்று முதற்சொன்ன வாக்யார்த்த$_2$ம் இத்தை நினைத்திறே.

'இப்பத$_3$த்ரயத்திலும் ப்ரத$_2$மபத$_3$ந்தான் எது? என்ன, 'இதில் முதல்பத$_3$ம் ப்ரணவம்' என்கிறார்.

**மூ. 31. இதில் முதற்பத$_3$ம் ப்ரணவம்.**

வ்யா:-52. "ओमित्यग्रे व्याहरेत्" (ஓமித்யக்$_3$ரே வ்யாஹரேத்) என்றிறே ஶ்ருதி சொல்லிற்று. ஸ்ம்ருதியும், 53. "प्रणवाद्यं नमोमध्यं नारायणपदान्तिमम्। मन्त्रमष्टाक्षरं विद्यात्सर्वसिद्धिकरं नृणाम्॥" (ப்ரணவாத்$_3$யம் நமோமத்$_4$யம் நாராயணபத$_3$ாந்திமம்| மந்த்ரமஷ்டாக்ஷரம் வித்$_3$யாத் ஸர்வஸித்$_3$தி$_4$கரம் ந்ருணாம்||) என்றதிறே.

இனி, ப்ரணவத்துக்கு அர்த்த$_2$ம் அருளிச்செய்வதாக, இதனுடைய அக்ஷரத்ரயாத்மகதையை அருளிச்செய்கிறார்,— 'இது 'அ'என்றும், 'உ'என்றும், 'ம'என்றும் மூன்று திருவக்ஷரம்' என்று.

**ஸூ. 32. இது 'அ' என்றும, 'உ' என்றும, 'ம' என்றும் மூன்று திருவக்ஷரம்.**

வ்யா:— *இப்ரணவந்தான், அஸம்ஹிதாகாரத்தாலே மூன்றக்ஷரமாய், மூன்றுபத₃மாய், மூன்றர்த்த₂ ப்ரகாஶகமாய், ஸம்ஹிதாகாரத்தாலே ஏகாக்ஷரமாய், ஏகபத₃மாய், ஏகார்த்த₂ப்ரகாஶகமாயிறே இருப்பது.*

*இந்த அக்ஷரத்ரயத்திநுடையவும் உத்பத்திக்ரமத்தை ஸத்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் 'மூன்று தாழியிலே' என்று தொடங்கி.*

**ஸூ. 33. மூன்று தாழியிலே தயிரை நிறைத்துக் கடைந்து வெண்ணெய் திரட்டிநாற்போலே மூன்று வேதத்திலும் மூன்று அக்ஷரத்தையும் எடுத்தது.**

வ்யா:—*54.* भूरिति ऋग्वेदादजायत। भुव इति यजुर्वेदात्। सुवरिति सामवेदात्। तानि शुक्राण्यभ्यतपत्। तेभ्योऽभितप्तेभ्यस्त्रयो वर्णा अजायन्त। अकार उकार मकार इति। तानेकधा समभरत्तदेतदोमिति॥ (பூ₄ரிதி ருக்₃வேதா₃த₃ஜாயத பு₄வ இதி யஜுர்வேதா₃த் ஸுவரிதி ஸாமவேதா₃த் தாநி ஶுக்ராண்யப்₄யதபத் தேப்₄யோऽபி₄தப்தேப்₄யஸ் த்ரயோ வர்ணா அஜாயந்த அகார உகார மகார இதி தாநேகதா₄ ஸமப₄ரத் தத₃தேதோ₃மிதி)*என்றும்,55*"अकारश्चाप्युकारश्च मकारश्च प्रजापतिः। वेदत्रयान्निरवृहत् भूर्भुवस्स्वरितीति च॥" (அகாரஞ் சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:। வேத₃ த்ரயாந் நிரப்₃ருஹத் பூ₄ர்பு₄வஸ் ஸ்வரிதீதி ச ॥) *என்றும் ஶ்ருதி ஸ்ம்ருதிகளிற்சொல்லுகிறபடியே ருக்யஜுஸ்ஸாமரூபமான வேத₃த்ரயத்தில் நின்றும், "பூ₄: பு₄வ: ஸுவ:" என்கிற வ்யாஹ்ருதித்ரயத்தையும் தோற்றுவித்து அந்தவ்யாஹ்ருதி த்ரயத்தையும் பொன்னோடே வைக்குமாபோலே தன் ஸங்கல்பத்தாலே ஓட வைத்து, அவற்றில் நின்றும் அகார உகார மகாரங்களாகிற அக்ஷரங்கள் மூன்றும், அடைவே தோன்றும்படிபண்ணி, இப்படி ஸர்வேஶ்வரன் ஸமுத்₃த₄ரித்தபடியைத் திருவுள்ளம்*

பற்றி,பாத்ரத்ரயக₃தமான தயிரைத் தனித்தனியேகடைந்து, தத்ஸாரமான வெண்ணெயை வாங்கித் திரட்டினாற்போலே, (மூன்று வேத₃த்திலும் மூன்றக்ஷரத்தையும் எடுத்தது) என்கிறார்.

இத்தால் ப₂லிதத்தை அருளிச்செய்கிறார் 'ஆகையால் இது ஸகலவேத₃ஸாரம்' என்று.

**ஸூ. 34. ஆகையால், இது ஸகலவேத₃ஸாரம்.**

வ்யா:— அதாவது-அக்ஷரத்ரயமும் ஓரோர வேத₃த்தினுடைய ஸாரமாக ஸமுத்₃த்₄ருதமாகையாலே இவ்வக்ஷரத்ரயாத்மகமான ப்ரணவம் ஸகலவேத₃ ஸாரம்-என்றபடி.

ஆக, "இதுதன்னிற்சொல்லுகிற அர்த்த₂ம்" என்று தொடங்கி இவ்வளவும்-இம்மந்த்ரத்தினுடைய வாக்யார்த்த₂த்தையும், அக்ஷர ஸங்க்₂யையையும், பத₃ஸங்க்₂யையையும், பத₃த்ரயமும் அர்த்த₂த்ரய ப்ரதிபாத₃கமென்னுமத்தையும், அதில் ப்ரத₂மபத₃ம் இன்னதென்னு மத்தையும், அதுதான் அக்ஷரத்ரயாத்மகமாய் இருக்குமென்னுமத்தையும்,அவ்வக்ஷரத்ரயமும் வேத₃த்ரயஸாரமாக உத்பந்நமாகையாலே தத் ஸமுதா₃யமான ப்ரணவம் ஸகலவேத₃ஸார மென்னுமத்தையும் அருளிச்செய்தாராயிற்று.

இனி, இவ்வக்ஷரத்ரயத்துக்கும் அடைவே அர்த்த₂ம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரத₂மம் அகாரார்த்த₂த்தை அருளிச்செய்கிறார், 'இதில் அகாரம்' என்று தொடங்கி.

**ஸூ.35.இதில் அகாரம்-ஸகலஶப்₃த₃த்துக்கும் காரணமாய் நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே, ஸகலஜக₃த்துக்கும் காரணமாய் ஸர்வரக்ஷகனை எம்பெருமானைச் சொல்லுகிறது.**

வ்யா:— அகாரவது— இவ்வக்ஷரத்ரயத்திலும் வைத்துக் கொண்டு ப்ரத₂மாக்ஷரமான அகாரம். 56. "नामरूपञ्च भूतानां कृत्यानाञ्च प्रपञ्चनम्। वेदशब्देभ्य एवादौ देवादीनां चकार सः॥" (நாமரூபஞ்ச பூ₄தாநாம க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம்। வேத₃ஶப்₃தே₃ப்₄ய ஏவாதௌ₃ தே₃வாதீ₃நாஞ் சகார ஸ:॥) என்கிறபடியே லௌகிக ஶப்₃த₃ங்களுக்கும் வேத₃ம் காரணமாய், 57. "प्रणवाद्यास्तथा वेदाः" (ப்ரணவாத்₃யாஸ்ததா₂ வேதா₃:) 58. "ओङ्कारप्रभवा वेदाः" (ஓங்காரப்ரப₄வா வேதா₃:) இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே அந்த வேத₃ங்களுக்கும் ப்ரணவம் காரணமாய், 59. "तस्य प्रकृतिलीनस्य" (தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய) என்கிறபடியே அந்த ப்ரணவந்தனக்குத் தான் காரணமாயிருக்கையாலே 60. "अकारो वै सर्वा वाक्" (அகாரோ வை ஸர்வா வாக்) 61. "समस्त शब्दमूलत्वादकारस्य स्वभावतः" (ஸமஸ்தஶப்₃த₃மூலத்வாத₃காரஸ்ய ஸ்வபா₄வத:) என்கிறபடியே ஸகலஶப்₃த₃த்துக்கும் காரணமாய் ஸர்வேஶ்வரன் ஸமஸ்த வஸ்துஶரீரதயா ஸர்வரக்ஷகனாயிருக்கும்படியை ப்ரதிபாதி₃க்கிற நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே 62. "यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति" (யதோ வா இமாநி பூ₄தாநி ஜாயந்தே யேந ஜாதாநி ஜீவந்தி) 63. "स एव सृज्यः स च सर्गकर्ता स एव पात्यत्ति च पाल्यते च" (ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்க₃கர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச) இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே எல்லா ஜக₃த்துக்கும் காரணமாய் எல்லார்க்கும் ரக்ஷகனாயிருக்கும் எம்பெருமானைச் சொல்லுகிறது—என்கை. இத்தால், இவ்வக்ஷரத்தில் ப்ரக்ருத்யர்த்த₂மான காரணத்வமும், தா₄த்வர்த்த₂மான ரக்ஷகத்வமும் சொல்லிற்றாயிற்று. இவ்வகாரத்துக்கு நாராயணபத₃ஸங்க்₃ரஹதயா ரக்ஷகவாசித்வம் சொல்லும்போதும், தா₄துஸித்₃த₄வேஷத்தை அவலம்பி₃த்தே சொல்லவேணுமிறே.

'ரக்ஷிக்கையாவது தான் ஏது' என்னும் ஆகாங்க்ஷையிலே அருளிச்செய்கிறார் 'ரக்ஷிக்கையாவது' என்று தொடங்கி.

ஸூ. 36. ரக்ஷிக்கையாவது—விரோதி₄யைப் போக்குகையும் அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்.

**வ்யா:**- அதாவது—ரக்ஷகத்வந்தான் அநிஷ்டநிவர்த்தகத்வ இஷ்டப்ராபகத்வரூபேண த்$_3$விவித$_4$மாகையாலே, ஈஶ்வரன் சேதநரை ரக்ஷிக்கையாவது - அவர்களுக்கு து:க்க$_2$ாவஹமான விரோதி$_4$யைப் போக்குகையும் ஸுக$_2$ாவஹமான அபேக்ஷிதத்தைக் கொடுக்கையும்—என்கை.

இவர்களுக்கு இவன் போக்கும் விரோதி$_4$ ஏது? கொடுக்கும் அபேக்ஷிதம் ஏது?' என்ன, அருளிச்செய்கிறார் 'இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும்' என்று.

**ஸூ. 37. இவையிரண்டும் சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும.**

**வ்யா:**—சேதநர் நின்ற நின்ற அளவுக்கு ஈடாயிருக்கும் என்றது—தத்தத$_3$தி$_4$காராநுகு$_3$ணமாயிருக்கும்—என்றபடி.

இது தன்னை வ்யக்தமாக அருளிச்செய்கிறார் மேல் 'ஸம்ஸாரிகளுக்கு' இத்யாதி$_3$.

**ஸூ.38. ஸம்ஸாரிகளுக்கு விரோதி$_4$ ஶத்ருபீடா$_3$தி$_3$கள். அபேக்ஷிதம் அந்நபாநாதி$_3$கள்; முமுக்ஷுக்களுக்கு விரோதி$_4$ ஸம்ஸார ஸம்ப$_3$ந்த$_4$ம், அபேக்ஷிதம் பரமபத$_3$ ப்ராப்தி; முக்தர்க்கும் நித்யர்க்கும் விரோதி$_4$ கைங்கர்ய ஹாநி, அபேக்ஷிதம் கைங்கர்ய வ்ருத்$_3$தி$_4$.**

**வ்யா:**- அதாவது-தே$_3$ஹாத்மாபி$_4$மாநாதி$_3$களும் ஶப்$_3$தா$_3$தி$_3$ விஷயாநுப$_4$வமுமே யாத்ரையாயிருக்கும் ஸம்ஸாரிகளுக்கு நிவர்த்யமான விரோதி$_4$ ஶத்ருக்களால் வரும் நலிவு தொடக்க மானவை; ப்ராப்யமான அபேக்ஷிதம் சோறு தண்ணீர் முதலானவை—என்கை. 'ஶத்ருபீடா$_3$தி$_3$கள்' என்கிறவிடத்தில் 'ஆதி$_3$' ஶப்$_3$த$_3$த்$_3$தாலே ஆதி$_4$வ்யாதி$_4$ முதலானவற்றால் வரும் பீடைகளைச் சொல்லுகிறது. 'அந்நபாநாதி$_3$கள்' என்கிற விடத்தில் 'ஆதி$_3$' ஶப்$_3$த$_3$த்தாலே ஸ்ரக்$_3$ வஸ்த்ர ஆப$_4$ரண அங்க$_3$ராக$_3$ அங்க$_3$நாலிங்க$_3$நாதி$_3$களைச் சொல்லுகிறது.

'முமுக்ஷுக்களுக்கு' இத்யாதி$_{3}$. அதாவது:— ஸம்ஸாரத்தில் அடிக்கொதித்துப் பரமபத$_{3}$த்திலே போக ஆசைப்படாநிற்கும் முமுக்ஷுக்களுக்கு நிவர்த்யமான விரோதி$_{4}$- பொய்ந்நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்புமாய்க்கொண்டு இவ்விபூ$_{4}$தியிலேயிருக்கையாகிற ஸம்ஸார ஸம்ப$_{3}$ந்த$_{4}$ம்; ப்ராப்யமான அபேக்ஷிதம் ப$_{4}$க$_{3}$வத$_{3}$நுப$_{4}$வாதி$_{3}$களுக்கு அநுகூலமான பரமபத$_{3}$த்தை ப்ராபிக்கை—என்கை.

'முக்தர்க்கும்' இத்யாதி$_{3}$. அதாவது—நிவ்ருத்த ஸம்ஸாரராயும், அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரக$_{3}$ந்த$_{4}$ராயும், ப$_{4}$க$_{3}$வத$_{3}$நுப$_{4}$வஜநிதப்ரீதிகாரித கைங்கர்யபரராயுமிருக்கும் முக்தர்களும் நித்யர்க்கும் விரோதி$_{4}$, வகுத்த ஶேஷியான ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஸ்வரூபாநுரூபமாகப் பண்ணிக்கொண்டு போரும் கைங்கர்யத்துக்கு வரும் விச்சே$_{2}$த$_{3}$ம்; அபேக்ஷிதம் உத்தரோத்தரம் அடிமை செய்து செல்லுகையாகிற கைங்கர்ய வ்ருத்$_{3}$தி$_{4}$—என்கை.

ஆக இப்படி அதி$_{4}$காராநுகு$_{3}$ணம் விரோதி$_{4}$யைப்போக்கி அபேக்ஷிதத்தைக் கொடுக்கையால் ஈஶ்வரனே ஸர்வரக்ஷகனென்னுமிடம் சொல்லிற்றாயிற்று.

'இப்படி ஈஶ்வரனேயோ பின்னையெல்லாரையும் ரக்ஷிக்கிறவன், லோகத்திலே மாதாபித்ரு ப்ரப்$_{4}$ருதி தே$_{3}$வதாந்தர பர்யந்தமாக ரக்ஷகராய்ப் போருகிறவர்கள் பலருமில்லையோ?' என்ன, அருளிச்செய்கிறார் 'ஈஶ்வரனை ஒழிந்தவர்கள் ரக்ஷகரல்லரென்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்' என்று.

**மூ. 39. 'ஈஶ்வரனையொழிந்தவர்கள் ரக்ஷகரல்லர்' என்னுமிடம் ப்ரபந்நபரித்ராணத்திலே சொன்னோம்.**

வ்யா:-அதாவது-நிருபாதி$_{4}$க ப$_{3}$ந்து$_{4}$வாய், ஸர்வகாலமும் கைவிடாதே நோக்கிக்கொண்டு போரும் ஸர்வேஶ்வரனை

யொழிந்த ஔபாதி4க ப3ந்து4க்களான மாதாபித்ராதி3களும், அர்வாசீநரான தே3வதாந்தரங்களும் ரக்ஷகரல்லரென்னுமிடம் ஸவிஸ்தரமாக ப்ரபந்நபரித்ராணம் என்கிற ப்ரப3ந்த4த்திலே சொன்னோம்; அதிலே கண்டுகொள்வது-என்கை.

அநந்தரம் அர்த்த2ப3லத்தாலே இப்பத3த்தில் அநுஸந்தி4க்கப்படும் ஸ்ரிய:பதித்வத்தை அருளிச்செய்கிறார், 'ரக்ஷிக்கும்போது' என்று தொடங்கி.

**மூ.40. ரக்ஷிக்கும்போது பிராட்டி ஸந்நிதி4 வேண்டுகையாலே, இதிலே ஸ்ரீஸம்ப3ந்த4மும் அநுஸந்தே4யம்.**

**வ்யா:**— அதாவது- 64. **"लक्ष्म्या सह हृषीकेशो देव्या कारुण्यरूपया । रक्षकस्सर्वसिद्धान्ते वेदान्तेऽपि च गीयते ॥"** (லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேஶோ தே3வ்யா காருண்யரூபயா| ரக்ஷகஸ்ஸர்வஸித்3தா4ந்தே வேதா3ந்தேபி ச கீ3யதே||) என்கிறபடியே ரக்ஷகனான ஈஶ்வரன் சேதநரை ரக்ஷிக்கும் த3ஶையில் இவர்களுடைய அபராத4ங்களைக் கண்டாகில் தன் ஸ்வாதந்த்ர்யத்தாலேயாகில் உபேக்ஷியாமற்செய்கைக்கு உறுப்பான க்ருபையை ஜநிப்பிக்கும் புருஷகாரபூ4தையான பிராட்டிஸந்நிதி4 அவஶ்யாபேக்ஷிதமாகையாலே, ரக்ஷகனான அவனைச் சொல்லுகிற இவ்வகாரத்திலே அவனுடைய லக்ஷ்மீஸம்ப3ந்த4மும் அநுஸந்தே4யம்-என்கை. 'லக்ஷ்மீ' என்னாதே 'ஸ்ரீ' என்றது 65. **"श्रयत इति श्रीः"** (ஶ்ரயத இதி ஸ்ரீ:) என்கிறபடியே அவனை நித்யஸேவை பண்ணுகையாலே அவனோடு இவளுக்கு உண்டான அவிநாபா4வமும், 66. **"श्रीयत इति श्रीः"** (ஸ்ரீயத இதி ஸ்ரீ:) என்கிறபடியே சேதநருக்கு இவள் நித்ய ஸேவ்யையாயிருக்குமென்னுமதுவும் தோற்றுகைக்காக.

இன்னமும் இவ்வகாரத்தில் ஈஶ்வரனுடைய லக்ஷ்மீஸம்ப3ந்த4ம் நியமேந தோற்றுமென்னுமத்தை ஆப்தவசநத்தாலே த3ர்ஶிப்பிக்கிறார் 'அத்ர' இத்யாதி3யால்.

**மூ.41. அத்ர ப4க3வத்ஸேநாபதிமிஶ்ரர் வாக்யம்:-அவன் மார்புவிட்டுப் பிரியில் இவ்வக்ஷரம் விட்டுப்பிரிவது.**

**வ்யா:—** *அதாவது—இவ்விடத்திலே ஜ்ஞாநாதி₄கரான ஸ்ரீஸேநாபதிசீயர் அருளிச்செய்யும் வார்த்தை:-" / அகலகில்லேனிறையும்' என்று அவன் திருமார்பிலே நித்யவாஸம் பண்ணும் இவள் அம்மார்பைவிட்டுப் பிரியிலாயிற்று, அவனுக்கு ப்ரதிபாத₃கமான இவ்வக்ஷரத்தைவிட்டுப் பிரிவது" என்று—என்கை. 'என்று' என்கிற இத்தனையுங் கூட்டாதபோது, கீழோடு இவ்வாக்யம் அந்வயியாது.*

*இத்தால், அவன் திருமார்பில் ஸம்ப₃ந்த₄ம் இவளுக்கு நித்யமாகையாலே அவன் தோற்றுமிடத்திலே இவளும் தோற்றுகை நிஶ்சிதமாகையால், அவன் திருமார்பில் அந்வயத்தோபாதி அவனுக்கு வாசகமான அகாரத்தில் அந்வயமும் இவளுக்கு நித்யமென்றதாயிற்று.*

*இன்னமும் இவ்வர்த்த₂த்தை ஸ்தி₂ரீகரிக்கைக்காக ஈஶ்வர சேதந வாசகங்களான அகார மகாரங்களிரண்டிலும் இவளுக்கு உண்டான அநவரதாந்வயத்தை ஸத்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் 'ப₄ர்த்தாவினுடைய' என்று தொடங்கி.*

**மூ.42. ப₄ர்த்தாவினுடைய படுக்கையையும் ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதேயிருக்கும் மாதாவைப்போலே ப்ரத₂ம சரமபத₃ங்களை விடாதேயிருக்கும் இருப்பு.**

**வ்யா:-** *அதாவது-ஶேஷபூ₄தையான தன்ஸ்வரூபத்துக்குச் சேரும்படி அவனை ரஸிப்பிக்கைக்காக ப₄ர்த்தாவினுடைய படுக்கையையும் விடாதே, ரக்ஷகையான தன் ஸ்வரூபத்துக்கும் போரும்படி தத்₃ரக்ஷணம் பண்ணுகைக்காக ப்ரஜையினுடைய தொட்டிலையும் விடாதே இருக்கும் மாதாவானவளைப்போலே, இவளும் ப₄ர்த்ருபூ₄தனான ஈஶ்வரனுக்கு ப்ரதிபாத₃கமாயிருந்துள்ள ப்₂ரதமபத₃மான அகாரத்தையும், ப்ரஜாபூ₄தரான சேதநர்க்கு ப்ரதிபாத₃கமாயிருந்துள்ள சரமபத₃*

---

/ திருவாய் 6-10-10.

மான மகாரத்தையும் தத்ஸத்₃விஷயத்தில் தனக்கு உண்டான ஸம்ப₃ந்த₄த்துக்கு ஈடாக ரஸிப்பிக்கை ரக்ஷிக்கையாகிற இவற்றைப்பற்ற, விடாதேயிருக்குமிருப்பு—என்கை.

கீழ்ச்சொன்ன த்₃ருஷ்டாந்தத்தை ஒருவிஶேஷ நிஷ்ட₂மாக்கி அருளிச்செய்கிறார் 'ஸ்ரீநந்த₃கோ₃பரையும் க்ருஷ்ணனையும் விடாத' என்று தொடங்கி.

மூ. 43. ஸ்ரீநந்த₃கோ₃பரையும் க்ருஷ்ணனையும் விடாத யசோதைப்பிராட்டியைப்போலே.

வ்யா:—அதாவது-ப₄ர்த்தாவான தன் ஸ்வரூபாநுகு₃ணமாக ரஸிப்பிக்கைக்காக ப₄ர்த்தாவான ஸ்ரீநந்த₃கோ₃பரையும் விடாதே, மாதாவான தன் ஸ்வரூபாநுகு₃ணமாக ரக்ஷிக்கைக்காகப் புத்ரனை க்ருஷ்ணனையும் விடாதே †"அம்பரமே" என்கிற பாட்டிற் சொல்லுகிறபடியே மத்₄யேவர்த்திக்கும் யசோதைப்பிராட்டியைப்போலே ப்ரத₂ம சரமபத₃ வாச்யரான ஈஶ்வர சேதனர்களிருவரையும் விடாதே இவளும் வர்த்திக்கும்படி—என்கை.

'ஈஶ்வரஶேஷத்வமாத்ர மொழியப் பிராட்டிக்கும் ஶேஷமென்னுமிடம் இவ்வாசகத்தில் இன்றிக்கேயிருக்கச்செய்தேயும், இவளுக்கும் ஶேஷம் என்று நாம்கொள்ளுகிறபடி எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் 'ஒருவன்' என்று தொடங்கி.

மூ.44.ஒருவனடிமைகொள்ளும்போது க்₃ருஹிணிக்கென்றன்றே ஆவணவோலையெழுதுவது; ஆகிலும், பணிசெய்வது க்₃ருஹிணிக்கிறே. அதுபோலே நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி.

வ்யா;–அதாவது–லோகத்திலே ஒருவன் தா₃ஸதா₃ஸிகள் முதலானதோரடிமையைக் கொள்ளும்போது தனக்கென்றே

† திருப்பாவை-17.

எழுதிக்கொள்ளுமதொழிய, தன் க்₃ருஹிணிக்கென்றன்று விலை யோலை எழுதிக்கொள்வது; ஆயிருக்கச்செய்தேயும், அடிமைத் தொழில் செய்வது க்₃ருஹிணிக்கிறே; அதுபோலே ஈஶ்வர ஶேஷம் என்னும் அளவை இவ்வகாரம் சொல்லிற்றேயாகி லும், நாம் பிராட்டிக்கு அடிமையாயிருக்கும்படி—என்கை.

கீழ்ச்சொன்ன ஹேதுக்களையெல்லாம் அநுவதி₃த்துக் கொண்டு ஈஶ்வரனுக்கும், பிராட்டிக்கும் ஒருகாலும் ப்ருத₂க் ஸ்தி₂தியில்லாமையை அருளிச்செய்கிறார் 'ஆகப் பிரித்து நிலையில்லை' என்று.

மூ. 45. ஆக, பிரித்து நிலையில்லை.

இந்த ப்ருத₂க்ஸ்தி₂த்யபா₄வத்துக்கு இரண்டு த்₃ருஷ்டாந்தமருளிச்செய்கிறார் 'ப்ரபை₄யை' என்றுதொடங்கி

மூ.46. ப்ரபை₄யையும், ப்ரபா₄வானையும், புஷ்பத்தை யும் மணத்தையும்போலே.

வ்யா:-அதாவது-ப்ரபை₄க்கும் ப்ரபா₄வானுக்கும்ப்ருத₂க் ஸ்தி₂தி இல்லாதாப்போலவும், புஷ்பத்துக்கும்பரிமளத்துக்கும் ப்ருத₂க்ஸ்தி₂தி இல்லாதாப்போலவும்-என்கை. 67. "**अनन्या राघवेणाहं भास्करेण प्रभा यथा**" (அநந்யா ராக₄வேணாஹம் பா₄ஸ்கரேண ப்ரபா₄ யதா₂) 68 '**अनन्या हि मया सीता भास्करेण प्रभा यथा**' (அநந்யா ஹி மயா ஸீதா பா₄ஸ்கரேண ப்ரபா₄ யதா₂) என்றுப்ரபா₄ப்ரபா₄வான் களைப்போலே இருவருக்கும் ப்ருத₂க்ஸ்தி₂தி இல்லையென்னு மிடம் இருவர் வாக்காலும் சொல்லப்பட்டதிறே. 69. "**प्रसूनं पुष्यन्तीमपि परिमलर्द्धिं जिगदिषुः**" (ப்ரஸூநம் புஷ்யந்தீமபி பரிமளர்த₃தி₄ம்ஜிக₃தி₃ஷு:) என்கிறவிடத்திலே ஈஶ்வரனைபுஷ்பஸ்தா₂நேயாகவும், பிராட்டியைப்பரிமளஸ்தா₂நேயாகவும்ப₄ட்டரருளிச் செய்கையாலே, புஷ்ப பரிமளங்களுக்குப்போலே, இருவர்க் கும் ப்ருத₂க்ஸ்தி₂தி இல்லையென்னுமிடம் அர்த்தா₂த்ஸித்₃த₄ம்.

இந்த ப்ருத₂க்ஸ்தி₂த்யபா₄வத்தை அநுவதி₃த்துக்கொண்டு இச்சேர்த்தியே சேதநர்க்கு உத்₃தே₃ஶ்யமாய்த்தலைக்கட்டின

படியை அருளிச்செய்கிறார் "ஆக, இச்சேர்த்தி உத்₃தே₃ஶ்ய மாய்விட்டது' என்று.

**மூ.47. ஆக, இச்சேர்த்தி உத்₃தே₃ஶ்யமாய்விட்டது.**

வ்யா:—'இச்சேர்த்தி உத்₃தே₃ஶ்யம்' என்கையாலே, இவர்களைத் தனித்தனியே விரும்புகை உத்₃தே₃ஶ்யம் அன்று என்றபடி. இருவரையும் பிரித்து விரும்பினால், ராவண சூர்ப்பணகைகளுக்குப்போலே, அநர்த்த₂மே ப₂லிக்குமத்தனை. இருவரையும் பற்றினாலிறே, ஸ்ரீவிபீ₄ஷணாழ்வானைப் போலே வாழலாவது.

இனிமேல், இதில் விப₄க்த்யர்த்த₂ம் அருளிச்செய்வதாக ப்ரத₂மம் விப₄க்திதன்னை நிர்த்₃தே₃சிக்கிறார் 'இதிலே சதுர்த்தி₄யேறிக் கழியும்' என்று.

**மூ. 48. இதிலே, சதுர்த்தி₂யேறிக்கழியும்.**

வ்யா:—அதாவது— இவ்வகாரத்திலே சதுர்த்தி₂யேறி "ஸுபாம்ஸுலுக்" (ஸுபாம்ஸுலுக்) இத்யாதி₃ ஸூத்ரத்தாலே லுப்தமாய்ப்போம்-என்கை.

"விப₄க்த்யந்தரமெல்லாங்கிடக்க, இவ்வகாரத்தில் சதுர்த்தி₂யேறினபடிதான் எங்ஙனே?' என்கிற ஶங்கையை அநுவதி₃க்கிறார் 'சதுர்த்தி₂யேறினபடியென்? என்னில்' என்று.

**மூ. 49. 'சதுர்த்தி₂யேறினபடியென்?' என்னில்,-**

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் 'நாராயண பத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே' என்று.

**மூ. 50. நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாயிருக்கையாலே.**

வ்யா:—அதாவது-இவ்வகாரம், சதுர்த்₂யந்தமான நாராயணபத₃த்துக்கு ஸங்க்₃ரஹமாகையாலே, இதிலும் சதுர்த்தி₂

ஏறிற்று—என்கை. இங்ஙன் அன்ருகில். இரண்டுக்கும் ஸங்க்₃ரஹவிவரணத்வம் ஸித்₃தி₄யாதிறே.

'இத்தாற்சொல்லுகிற அர்த்த₂ம்தான் எது?' என்ன, அருளிச்செய்கிருர் 'இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது' என்று.

மூ. 51. இத்தால், ஈஶ்வரனுக்கு ஶேஷமென்கிறது.

வ்யா:—அதாவது—இதுதான் 70. "तादर्थ्ये चतुर्थी" (தாத₃ர்த்த்₂யே சதுர்த்தீ₂) ஆகையாலே இச்சதுர்த்தி₃யால் ஈஶ்வரனுக்கு ஶேஷமென்னுமிடம் சொல்லுகிறது—என்கை.

71. "सर्वं परवशं दुःखं" (ஸர்வம் பரவஶம் து₃:க்க₂ம்) 72. "सेवा श्ववृत्तिः" (ஸேவா ஶ்வவ்ருத்தி:) என்கிற லௌகிக ந்யாயத்தைக்கொண்டு ஶேஷத்வத்தை து₃:க்க₂ரூபமாக நினைத்திருக்குமவர்கள் பண்ணும் ப்ரஶ்நத்தை அநுவதி₃க்கிருர் 'ஶேஷத்வம் து₃:க்க₂ரூபமாகவன்ரே நாட்டில் காண்கிறதென்னில்' என்று.

மூ. 52. 'ஶேஷத்வம் து₃:க்க₂ரூபமாகவன்ரே நாட்டிற் காண்கிறது' என்னில்,—

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிருர் 'அந்த நியமமில்லை' என்று தொடங்கி.

மூ. 53, அந்த நியமம் இல்லை; உகந்தவிஷயத்துக்கு ஶேஷமாயிருக்கும்இருப்பு ஸுக₂மாகக்காண்கையாலே.

வ்யா:—அதாவது—நாடுதன்னிலே /"பணிமின் திருவருள்" இத்யாதி₃ப்படியே அபி₄மத விஷயத்துக்கு ஶேஷமாயிருக்குமிருப்பு ஸுக₂ரூபமாகக் காண்கையாலே. ஶேஷத்வமாகில து₃க்க₂ரூபமாயிருக்குமென்கிற நியமமில்லை—என்கை.

/ திருவாய் 4-1-5.

*"அபி$_4$மத விஷயத்தில் ஶேஷத்வம் ஸுக$_2$மாகிறது. அவ்விஷயத்தில் கு$_3$ணமடியாக வந்ததாகையாலேயன்றோ" என்ன, அருளிச்செய்கிறார் 'அகாரத்திலே' என்று தொடங்கி.*

**ஸூ. 54. அகாரத்திலே கல்யாண குணங்களைச் சொல்லுகையாலே. இந்த ஶேஷத்வமும் கு$_3$ணத்தாலே வந்தது.**

**வ்யா:**-*அதாவது-ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வப்ரதிபாத$_3$கமான அகாரத்திலே அந்த ரக்ஷணோபயோகி$_3$யான கல்யாண கு$_3$ணங்களைச் சொல்லுகையாலே, ஈஶ்வர விஷயமான இந்த ஶேஷத்வமும் அந்த குண$_3$ங்களடியாக வந்தது-என்கை. ஆகையால், இதுவும் ஸுக$_2$ரூபமாயிருக்கக் குறையில்லையென்று கருத்து.*

*'ஆனால், ஔபாதி$_4$கமான இது ஸ்வரூபமன்றோ?' என்ன அருளிச்செய்கிறார் 'ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்' என்று.*

**ஸூ. 55. ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்.**

**வ்யா:**—*அதாவது-உகந்தவிஷயத்தில் இதன் ஸுக$_2$ரூபத்வத்துக்கு கு$_3$ணக்ருதத்வத்தை ஹேதுவாகச் சொல்லுகையாலே அந்த கு$_3$ணக்ருதத்வம் இங்கும் உண்டென்னுமிடத்துக்குச்சொன்ன இத்தனையொழிய, அர்த்த$_2$ஸ்தி$_2$தியை நிரூபித்தால் 73.* "स्वत्वमात्मनि सञ्जातं स्वामित्वं ब्रह्मणि स्थितम्" (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்$_3$ரஹ்மணி ஸ்தி$_2$தம்) *74.* "आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावञ्च सदा स्मर"(ஆத்மதா$_3$ஸ்யம் ஹரேஸ் ஸ்வாமயம் ஸ்வபா$_4$வம் ச ஸதா$_3$ ஸ்மர) *75.*"दासभूताः स्वतः सर्वे ह्यात्मानः परमात्मनः। नान्यथा लक्षणं तेषां वन्धे मोक्षे तथैव च ॥" (தா$_3$ஸபூ$_4$தாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:। நாந்யதா$_2$ லக்ஷணம்தேஷாம் ப$_3$ந்தே$_4$ மோக்ஷே ததை$_2$வ ச॥) *இத்யாதி$_3$களிலே இத்தை ஆத்மாவுக்கு ஸ்வாபா$_4$விகமாகச் சொல்லுகையாலே, ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்-என்கை.*

'ஶேஷத்வமேயென்று அவதரிப்பானேன்? ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமான ஆத்மவஸ்துவுக்கு அல்லாதபோதும் ஸ்வரூபம் இல்லையோ?' என்ன. அருளிச்செய்கிறார் 'ஶேஷத்வமில்லாத போது ஸ்வரூபமில்லை' என்று.

**சூ. 56. ஶேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை.**

ஶேஷத்வமில்லாதபோது ஆத்மாபஹாரரூபமான ஸ்வாதந்த்ர்யபுத்தி நடக்கையாலே. ஸ்வரூபம் அழிந்துவிடும் என்னுமதத்தை தர்ஶிப்பிக்கிறார். மேலிரண்டு வாக்யத்தாலே:—'ஆத்மாபஹாரமாவது' என்று தொடங்கி.

**சூ. 57. ஆத்மாபஹாரமாவது ஸ்வதந்த்ரமென்கிற நினைவு; ஸ்வதந்த்ரமாம்போது இல்லையாய்விடும்.**

வ்யா:-அதாவது—76. "योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते। किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा॥" (யோऽந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே। கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா॥) என்று ஸர்வபாபமூலமாகச் சொன்ன ஆத்மாபஹாரமாவது தன் ஸ்வரூபம் ஸ்வதந்த்ரம் என்கிற ப்ரதிபத்தி; ஸ்வதந்த்ரம் ஆமளவில் 77. "असन्नेव" (அஸந்நேவ) என்கிறபடியே ஸ்வரூபம் இல்லையாய்விடும்—என்கை. ஆகையால் 'ஶேஷத்வமில்லாதபோது ஸ்வரூபமில்லை' என்னத்தட்டில்லை என்று கருத்து.

ஆக, ப்ரக்ருத்யர்த்தமான ஈஶ்வரனுடைய காரணத்வமும், தாத்வர்த்தமான ரக்ஷகத்வமும், அர்த்தபலத்தால் வந்த ஶ்ரிய:பதித்வமும், ப்ரத்யயஸித்தமான சேதன ஶேஷத்வப்ரதிஸம்பந்தியான ஶேஷித்வமும் ஆகிற அகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம் மத்யமாக்ஷரமான உகாரத்துக்கு அர்த்தம் அருளிச்செய்வதாக உபக்ரமிக்கிறார் 'ஸ்தாநப்ரமாணத்தாலே உகாரம் அவதாரணார்த்தம்' என்று.

மூ. 58 ஸ்த₂நப்ரமாணத்தாலே உகாரம் அவத₄ார ணார்த்த₂ம.

வ்யா:-அதாவது—78. "तदेव भूतं तदु भव्यमा इदं" (ததே₃வ பூ₄தம் தது₃ ப₄வ்யமா இத₃ம்) என்றும், 79 "तदेवाग्निस्तद्वायुस्तत् सूर्यस्तदु चन्द्रमाः" (ததே₃வாக்₃நிஸ்தத்₃வாயுஸ் தத் ஸூர்யஸ்தது₃ சந்த்₃ரமா:) என்றும் இத்யாதி₃களிலே ஏவகாரஸ்த₂ாநத்திலே உகாரத்தை ப்ரயோகி₃க்கக் காண்கையாலே, ஸ்த₂ாந ப்ரமாணத்தாலே உகாரம் அவத₄ாரணத்தை அர்த்த₂மாக உடைத்தாயிருக்கும்—என்கை.

'அவத₄ாரணத்துக்கு அர்த்த₂ம் அயோக₃வ்யவச்சே₂த₃ மாதல், அந்யயோக₃வ்யச்சே₂த₃மாதல் ஆகையாலே, இவ்வவத₄ாரணத்தாற் சொல்லுகிறது எது?' என்ன, அருளிச் செய்கிறார் 'இத்தால், பிறர்க்கு ேஶஷமன்றென்கிறது' என்று.

மூ. 59. இத்தால், பிறர்க்கு ேஶஷம் அன்று என்கிறது

வ்யா:-அதாவது:-அவத₄ாரண வாசகமான இவ்வுகாரத்தால் கீழ் ஈஶ்வர ேஶஷமாகச் சொன்ன இவ்வாத்மவஸ்து, அந்யர்க்கு ேஶஷமன்று என்னுமிடத்தைச் சொல்லுகிறது—என்கை. சதுர்த்தி₂யாலே ஈஶ்வரேஶஷத்வம் ப்ரதிபாதி₃த மாகச்செய்தே, அந்யேஶஷத்வம் ப்ரஸ்துதமாமோ? என்னில் லோகத்திலே ஒருவனுக்கு ேஶஷமான க்₃ருஹக்ஷேத்ர புத்ர த₃ாரஸாதி₃கள், வேறேயுஞ்சிலர்க்கு ேஶஷமாயிருக்கக் காண்கையாலே, அப்படிப்பட்ட அந்யேஶஷத்வம் இந்த ஸ்த₂லத்திலும் உண்டோ? என்று ஒரு ஶங்கை உதிக்குமிறே; ஆகையாலே தாத்₃ருஶமான அந்யேஶஷத்வம் இங்கில்லை என்னுமிடத்தை ப்ரதிபாதி₃க்கிறது உகாரம்.

அங்ஙனன்றிக்கே, இவ்வுகாரத்தாலே லக்ஷ்மீேஶஷத்வம் சொல்லுகிறது என்பாரும் உண்டென்கிறார் 'பெரியபிராட்டியார்க்கு ேஶஷமென்கிறது என்றுஞ் சொல்லுவர்கள்' என்று.

மூ. 60. பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறது என்றும் சொல்லுவர்கள்.

வ்யா:-அதாவது- 80"अकारश्चित्स्वरूपस्य विष्णोर्वाचक इष्यते। उकारश्चित्स्वरूपायाः श्रियो वाची तथा विदुः॥ मकारस्तु तयोर्दास इति प्रणवलक्षणम्॥"(அகாரஶ்சித்ஸ்வரூபஸ்ய விஷ்ணோர்வாசக இஷ்யதே। உகாரஶ்சித்ஸ்வரூபாயா: ஶ்ரியோ வாசீ தத$_2$ா வித$_3$ு:॥ மகாரஸ்து தயோர்த$_3$ாஸ இதி ப்ரணவலக்ஷணம்॥)என்றும்,81"अकारेणोच्यते विष्णुः सर्वलोकेश्वरो हरिः। उद्धृता विष्णुना लक्ष्मीरुकारेणोच्यते सदा॥ मकारस्तु तयोर्विप्र श्रीनारायणयोस्सदा। आत्मनः शेषभूतस्य वाचकः श्रुतिचोदितः॥" (அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஶ்வரோ ஹரி:। உத்$_3$த்$_4$ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸத$_3$ா॥ மகாரஸ்து தயோர்விப்ர ஸ்ரீநாராயணயோஸ்ஸத$_3$ா। ஆத்மநஶ்ஶேஷபூ$_4$தஸ்ய வாசக: ஶ்ருதிசோதி$_3$த:॥) என்றும் இத்யாதி$_3$களாலே ப$_4$க$_3$வச்சா$_2$ஸ்த்ரத்திலே அகாரத்தை ப$_4$க$_3$வத்$_3$வாசகமாகவும், உகாரத்தை லக்ஷ்மீவாசகமாகவும், மகாரத்தை தது$_3$ப$_4$யஶேஷபூ$_4$த ஜீவவாசகமாகவுஞ் சொல்லுகையாலே, உகாரத்தை அவதா$_4$ரணவாசகமாகக் கொள்ளாதே, லக்ஷ்மீவாசகமாகக்கொண்டு, இவ்வுகாரத்தாலே பெரியபிராட்டியார்க்கு ஶேஷமென்கிறதென்றும் நிர்வஹிப்பர்கள்—என்கை.

அத்தைப் பற்றவும் பூர்வயோஜனையே முக்$_2$யமென்னுமத்தை அருளிச்செய்கிறார் 'அதிலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதா$_4$நம்' என்று.

மூ.61. அதிலும் அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதா$_4$நம்.

வ்யா:— அதாவது-பெரியபிராட்டியார்க்கு ஶேஷமாகையாகிற அதிலுங்காட்டில் கீழ்ச்சொன்ன ப$_4$க$_3$வச்சே$_2$ஷத்வத்துக்கு விரோதி$_4$யான அந்யஶேஷத்வம் கழிகையே ப்ரதா$_4$நாபேக்ஷிதம்—என்கை.

*அந்யசேஷத்வமிப்படி க்ரூரமோ?என்ன,க்ரௌர்யத்தை ஸத்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் 'தே₃வர்களுக்கு' என்று தொடங்கி.*

**சூ.62.தே₃வர்களுக்கு சேஷமான புரோடா₃சத்தை நாய்க்கு இடுமாபோலே, ஈச்வரசேஷமான ஆத்ம வஸ்துவை ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை.**

*வ்யா:— அதாவது-ஆராத்₄யரான இந்த்₃ராதி₃ தே₃வர்களுக்கு போ₄க்₃யதயா சேஷமாகக் கல்பிதமான புரோடா₃சத்தை த₃ர்சநஸ்பர்சநாதி₃களுக்குஅநர்ஹமாம்படி நிஹீநமாயிருக்கிற நாய்க்கு இடுமாபோலே இருப்பதொன்று. ப்ராப்தசேஷியான ஈச்வரனுக்கு சேஷமான ஆத்ம வஸ்துவை ஸர்வப்ரகாரத்தாலும் ஹேயரான ஸம்ஸாரிகளுக்கு சேஷமாக்குகை—என்கை.*

*'இப்படி க்ரூரமான அந்யசேஷத்வம் கழிகையே ஆத்மாவுக்கு ப்ரதா₄நாபேக்ஷிதம்' என்று கீழ்ச்சொன்ன அர்த்த₂த்தை ஸ்தி₂ரீகரிக்கிறார் 'ப₄க₃வச்சே₂ஷத்வத்திலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதா₄நம்' என்று.*

**சூ.63. ப₄க₃வச்சே₂ஷத்வத்திலும் அந்யசேஷத்வம் கழிகையே ப்ரதா₄நம்.**

*வ்யா:—அதாவது-லக்ஷ்மீசேஷத்வத்திலுங்காட்டில் ப்ரதா₄நம் என்ற அளவேயன்று. ப₄க₃வான் தனக்கு சேஷமாயிருக்குமதிலுங்காட்டில் அந்யவிஷயத்தில் சேஷத்வம் கழிகை ஆத்மாவுக்கு ப்ரதா₄நாபேக்ஷிதம்—என்கை.*

*இதுக்கு ப்ரமாணம் காட்டுகிறார் "'மறந்தும்புறந்தொழா மாந்தர்' என்கையாலே" என்று.*

**சூ.64."மறந்தும்புறந்தொழாமாந்தர்"என்கையாலே.**

வ்யா:—அதாவது-யமகிங்கரஸம்வாதத்தைத் திருமழிசைப்பிரான் அருளிச்செய்த || "திறம்பேன்மின்கண்டீர்" என்கிறபாட்டிலே பாகவத லக்ஷணம் சொல்லுகிறவளவில், ||'திருவடி தன்னுமம் மறந்தும் புறந்தொழாமாந்தர்' என்று ஸ்வாமியுடையதிருநாமத்தை மறந்தார்களாகிலும் மற்ருரு விஷயத்தில் ஶேஷவ்ருத்திபண்ணுதவர்கள் என்று சொல்லுகையாலே—என்கை.

ஈஶ்வரஶேஷமான ஆத்மவஸ்துவுக்கு ஸ்வஶேஷத்வ பரஶேஷத்வங்களிரண்டும் அந்யஶேஷத்வமாகையாலே உபயத்தையும் இவ்வுகாரம் கழிக்கிறதென்று சொல்லி நிகமிக்கிருர் 'இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்றென்கிறது' என்று.

**மூ.65. இத்தால், தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று என்கிறது.**

வ்யா:—அதாவது-அந்யஶேஷத்வநிவர்த்தகமான இவ்வுகாரத்தாலே, அந்யரில் அந்யதமத்வம் அவிஶிஷ்டமாகையாலே இவ்வாத்மவஸ்து தனக்கும் உரித்தன்று. தன்னையொழிந்த ஸம்ஸாரிகளுக்கும் உரித்தன்று என்னுமிடம் சொல்லுகிறது—என்கை.

ஆக, உகாரார்த்தத்தை அருளிச்செய்தாராயிற்று. அநந்தரம், த்ருதீயாக்ஷரமான மகாரார்த்தத்தை அருளிச்செய்கிருர் 'மகாரம்' என்று தொடங்கி.

**மூ. 66. மகாரம், இருபத்தஞ்சாம் அக்ஷரமாய் ஜ்ஞாந வாசியுமாய் இருக்கையாலே, ஆத்மாவைச் சொல்லுகிறது.**

வ்யா:-அதாவது-82"**भूतानि च कवर्गेण चवर्गेणेन्द्रियाणि च। टवर्गेण तवर्गेण ज्ञानगन्धादयस्तथा॥ मनःपकारेणैवोक्तं फकारेण त्वहङ्कृतिः। बकारेण**

|| நான்-திருவ-68.

भकारेण महान् प्रकृतिरुच्यते॥ आत्मा तु स मकारेण पञ्चविंशः प्रकीर्तितः॥" (பூ₄தாநி ச கவர்க்கே₃ண சவர்க்கே₃ணேந்த்₃ரியாணி ச। டவர் கே₃ண தவர்கே₃ண ஜ்ஞாநக₃ந்த₄தா₃யஸ்தத₂ா॥ மந: பகா ரேணைவோக்தம் ப₂காரேண த்வஹங்க்ருதி:। ப₃காரேண ப₄கா ரேண மஹாந் ப்ரக்ருதிருச்யதே॥ ஆத்மா து ஸ மகாரேண பஞ்ச விம்ஶ: ப்ரகீர்த்தித:॥) என்கிறபடியே ப்ருதிவ்யாதி₃ ப்ரக்ருத் யந்தமான இருபத்துநாலு தத்வத்துக்கும் வாசகமாயிருந் துள்ள ககாராதி₃ப₄காராந்தமான இருபத்துநாலு அக்ஷரமும் போலன்றிக்கே மகாரம் இருபத்தஞ்சாமக்ஷரமாய். "मन-ज्ञाने" (மந-ஜ்ஞாநே)என்கிற த₄ாதுவிலேயாதல், "मनु-अवबोधने"(மநு- அவபோ₃த₄நே) என்கிற த₄ாதுவிலேயாதல் நிஷ்பந்நமாகை யாலே, ஜ்ஞாநவாசியுமாயிருக்கையாலே. 83."पञ्चविंशोयं पुरुषः" (பஞ்சவிம்ஶோऽயம் புருஷ:) 84."पञ्चविंश आत्मा भवति" (பஞ்ச விம்ஶ ஆத்மாப₄வதி) என்கிறபடியே பஞ்சவிம்ஶகனாய் 85. "विज्ञानात्मा पुरुषः" (விஜ்ஞாநாத்மா புருஷ:) 86. "विज्ञातारमरे केन विजानीयात्" (விஜ்ஞாதாரமரே கேந விஜாநீயாத்) என்கிற படியே ஜ்ஞாநஸ்வரூபனுமாய் ஜ்ஞாநகு₃ணகனுமாயிருக்கிற ஆத்மாவைச் சொல்லுகிறது-என்கை.

கீழ்ச்சொன்ன ஶேஷத்வம் ஸர்வஸாத₄ாரணமாகை யாலே த்ரிவித₄ாத்மவர்க்க₃த்தையும்இதிலே சொல்லவேண்டு மாகையாலே. அருளிச்செய்கிறார் 'இதுதான் ஸமஷ்டிவாச கம்' என்று.

### சூ. 67. இதுதான் ஸமஷ்டிவாசகம்.

வ்யா:—அதாவது-இப்படி ஆத்மவாசகமான இம்மகாரந் தான் ஆத்மஸமஸ்டிக்கு வாசகம்—என்கை.

'ஏகவசநம் ஸமஷ்டி வாசகமாமோ?' என்கிற ஶங்கை யிலே. அருளிச்செய்கிறார் 'ஜாத்யேகவசநம்' என்று.

### சூ. 68. ஜாத்யேகவசநம்.

வ்யா:-அதாவது-வ்ரீஹிஸமூஹத்தைச் சொல்லுகிறவன் 'இது ஒரு நெல்' என்றால், அந்த ஏகவசநம் ஜாதிபரமானாற் போலே. இதுவும் ஆத்மஜாதிபரமான ஏகவசநம்-என்கை.

'இம்மகாரத்தால், ஆத்மாவினுடைய எவ்வாகாரஞ் சொல்லுகிறது?' என்ன. அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்று தொடங்கி.

**மூ. 69. இத்தால், ஆத்மா ஜ்ஞாதாவென்று, தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.**

வ்யா:-அதாவது-பஞ்சவிம்ஶாக்ஷரமாய், ஜ்ஞாநவாசியுமாயிருந்துள்ள இம்மகாரத்தால், 'ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மா ஜ்ஞாநாஶ்ரயபூ₄தனானவன்' என்று, அசேதநமான தே₃ஹத்திற்காட்டில் ஆத்மாவின் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று-என்கை.

'தே₃வோऽஹம், மநுஷ்யோऽஹம், ஸ்தூ₂லோऽஹம், க்ருஶோऽஹம்-என்று தே₃ஹத்திலே அஹம்பு₃த்₃தி₄ வ்யவஹாரங்கள் நடவாநிற்க, அஹமர்த்த₂பூ₄தனான ஆத்மா, தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தனென்று சொல்லுகிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் 'தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேக₂ரத்திலே சொன்னோம்' என்று.

**மூ. 70. தே₃ஹத்தில் வ்யாவ்ருத்தி தத்வஶேக₂ரத்திலே சொன்னோம்.**

வ்யா:—அதாவது-அநேக ஹேதுக்களாலே தே₃ஹத்தினுடைய அநாத்மத்வத்தை ஸாதி₄யாநின்றுகொண்டு, ஆத்மாவினுடைய தத்₃வ்யாவ்ருத்தியைத் தத்வஶேக₂ரமாகிற ப்ரப₃ந்த₄த்திலே வ்யக்தமாகச் சொன்னோம். அதிலே கண்டுகொள்வது-என்கை.

'த₄ர்மிஸ்வரூபகத₂ந பூர்வகமாக தத்₃த₄ர்மமான ஶேஷத்வத்தைச் சொல்லுகை ப்ராப்தமாயிருக்க, இப்ரணவந்தன்னிலே ப்ரத₂மம் ஶேஷத்வத்தைச் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லுவானென்?' என்கிற ஶங்கையிலே, அப்படி

சொல்லுகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் 'மணத்தை யும்' இத்யாதி₃ வாக்யத்ரயத்தாலே.

மூ.71.மணத்தையும், ஒளியையுங்கொண்டு, பூவை யும், ரத்நத்தையும் விரும்புமாபோலே, ஶேஷமென்று ஆத்மாவை ஆத₃ரிக்கிறது. அல்லாதபோது *"உயிரினாற் குறைவிலம்" என்கிறபடியே த்யாஜ்யம; அதுதோன்ற ஶேஷத்வத்தைச் சொல்லிப் பின்னை ஆத்மாவைச் சொல்லுகிறது.

வ்யா:—அதாவது—மணத்துக்கு ஆஶ்ரயமென்று பூவை விரும்புமாபோலேயும், ஒளிக்கு ஆஶ்ரயமென்று ரத்நத்தை விரும்புமாபோலேயும், ஶேஷத்வத்துக்கு ஆஶ்ரயமென்றா யிற்று ஆத்மாவை ஆத₃ரிக்கிறது; ஶேஷத்வாஶ்ரயமல்லாத போது * 'உயிரினாற் குறைவிலம்' 'என்று ப₄க₃வச்சே₂ஷத்வ ரஹிதமான ஆத்மாவால் அபேக்ஷையுடையோமல்லோம் என் கிறபடியே த்யாஜ்யமாய்விடுமித்தனை. இப்படியிருந்துள்ள ஶேஷத்வத்தின் ஊற்றந்தோற்ற, ஶேஷத்வத்தை முந்துறச் சொல்லி, பின்னை ஆத்மாவைச் சொல்லிற்று—என்கை.

பத₃த்ரயாத்மகமான இப்ரணவத்தாற் சொல்லித் தலைக் கட்டின அர்த்த₂த்தை அருளிச்செய்கிறார் 'ஆக' என்று தொடங்கி.

மூ. 72. ஆக, ப்ரணவத்தால் /"கண்ணபுரமொன்று டையானுக்கு அடியேன் ஒருவர்க் குரியேனோ" என்கிற படியே ஜீவபரஸம்பந்தஞ் சொல்லிற்று.

வ்யா:-அதாவது-கீழ்ச்சொன்ன எல்லாவற்றாலும், ப்ரண வத்தால் "கண்ணபுரமொன்றுடையானுக்கு" என்று சதுர்த்₂யந்தமான அகாரார்த்த₂த்தையும், /"அடியேன்"என்று ஶேஷத்வாஶ்ரயவாசியான மகாரத்தில் அர்த்த₂த்தையும், / 'ஒருவர்க்குரியேனோ' 'என்று அந்யஶேஷத்வ நிவர்த்தகமான

* திருவாய்4-8-10. / பெரியதிரு8-9-3.

உகாரார்த்தத்தையும் சொல்லாநின்றுகொண்டு ப்ரணவார்த்தத்தை அநுஸந்தித்த திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே, ஜீவபரர்களுக்கு உண்டான ஶேஷஶேஷிபாவ ஸம்பந்தத்தைச் சொல்லிற்று—என்கை.

இன்னமும் பொய்கையாருடைய திவ்யஸூக்தியாலே 'ஶேஷத்வ ப்ரதிஸம்பந்தி ஒரு மிதுநம்' என்னுமிடந்தோற்ற இந்த ஜீவபரஸம்பந்தத்தை அருளிச்செய்கிறார் "இத்தால் * 'தாமரையாள் கேள்வன்'" என்று தொடங்கி.

மூ. 73. இத்தால், *"தாமரையாள் கேள்வனொருவனையே நோக்கு முணர்வு" என்றதாயிற்று.

வ்யா:—அதாவது—இப்ரணவத்தால். * "தாமரையாள் கேள்வன்" என்று-அகாரவாச்யனாய் ஶேஷித்வப்ரதிஸம்பந்தியான ஸ்ரிய:பதியையும். *'ஒருவனையே நோக்கும்' என்று சதுர்த்யுகாரங்களாற் சொல்லுகிற அநந்யார்ஹஶேஷத்வ ப்ரயுக்தமான ஆத்மாவினுடைய ததேகபரதையையும். 'உணர்வு' என்று-அந்த ஶேஷத்வ-ஆஶ்ரயமாகம காரத்தாற் சொல்லப்பட்ட ஜ்ஞானைகநிரூபணீயனான ஆத்மாவையும் சொல்லுகிற ஸூக்திபடியே, ஜீவபரஸம்பந்தம் சொல்லிற்றாயிற்று—என்கை.

அகாரத்தில் ப்ரத்யயார்த்த ப்ரதாநமாக ப்ரணவார்த்தத்தை யோஜித்தார் கீழ்; அதில் தாத்வர்த்த ப்ரதாநமாக ப்ரணவத்துக்கு இன்னமும் ஒருயோஜனை அருளிச்செய்கிறார் 'அகாரத்தாலும்' என்று தொடங்கி.

மூ, 74. அகாரத்தாலும், மகாரத்தாலும், ரக்ஷகனையும், ரக்ஷ்யத்தையும் சொல்லிற்று; சதுர்த்தியாலும், உகாரத்தாலும் ரக்ஷணஹேதுவான ப்ராப்தியையும், பலத்தையும் சொல்லிற்று.

---

* முதல்-திரு 67.

வ்யா:—அதாவது-அகாரத்தாலே ரக்ஷகனை ஈஶ்வரனைச் சொல்லிற்று; மகாரத்தாலே தத்₃ரக்ஷ்யமான ஆத்மவஸ்துவைச் சொல்லிற்று; சதுர்த்தி₂யாலே ரக்ஷிக்கைக்கு ஹேதுவான ஶேஷத்வமாகிற ப்ராப்தியைச் சொல்லிற்று; இப்படி ரக்ஷிக்கிறதற்குப் ப₂லம்-இவ்வாத்மவஸ்து அத்தலைக்கு அநந்யார்ஹமாக விநியோகப்படுகையாகையாலே, அவ்வநந்யார்ஹ ஶேஷத்வ வாசியான உகாரத்தாலே ரக்ஷணப₂லத்தைச் சொல்லிற்று—என்கை.

ஆக. இம்மந்த்ரத்திற் ப்ரத₂மபத₃மான ப்ரணவார்த்த₂த்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, மேலிற்பத₃ங்களுக்கும் அர்த்த₂ம் அருளிச்செய்வதாக மந்த்ரஶேஷமும் இதுக்கு விவரணமாயிருக்கும்படியை முந்துற அருளிச்செய்கிறார். ( இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது ) என்று.

## ஸூ. 75. இனிமேல் ப்ரணவத்தை விவரிக்கிறது.

வ்யா:-''இவ்விடத்தில் விவரணமாகிறது. ப்ரஸ்துதமான அர்த்த₂த்துக்கு உபயுக்தமான அர்த்த₂த்தைச் சொல்லிக்கொண்டு பூர்வோக்தமான அர்த்த₂த்தை விஶதீ₃கரிக்கை" என்று தீ₃பப்ரகாஶத்திலும், 87. "उक्तार्थविशदीकारयुक्तार्थान्तरबोधनम्। मतं विवरणं तत्र महितानां मनीषिणाम्॥" (உக்தார்த்த₂ விஶதீ₃காரயுக்தார்த்தா₂ந்தர போ₃த₄நம்। மதம் விவரணம் தத்ர மஹிதாநாம் மநீஷிணாம்॥) என்று ரஹஸ்யத்ரயார்த்த₂ விவரணக்ரமமருளிச்செய்த ப்ரப₃ந்த₄த்திலும் விவரண லக்ஷணத்தை ஜீயரருளிச்செய்தாரிறே.

விவரிக்கிறபடிதான் எங்ஙனேயென்ன அருளிச்செய்கிறார் 'உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு' என்று தொடங்கி.

## ஸூ.76. உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; அகாரத்தை விவரிக்கிறது நாராயணபத₃ம்; மகாரத்தை விவரிக்கிறது சதுர்த்தி₂; நாரபத₃மென்றுஞ் சொல்லுவர்கள்.

வ்யா:— அதாவது-அந்யஶேஷத்வத்தைக்கழிக்கிறவிடத்தில் அந்யரிலே அந்யதமனாகச் சொல்லப்பட்ட தன்னை வெளியாகச்சொல்லிக் கழிக்கையாலே. உகாரத்தை விவரிக்கிறது நமஸ்ஸு; ரக்ஷகனான ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தையும், ரக்ஷ்யபூ₄த சேதநாசேதநங்களையும் ரக்ஷணோபயோகி₃யான கு₃ணாதி₃களையும் ரக்ஷண ப்ரகாரத்தையும் விஶத₃மாகச் சொல்லுகையாலே. அகாரத்தை விவரிக்கிறது நாராயண பத₃ம்; 88. "**नाकिञ्चित्कुर्वतः शेषत्वम्**" (**நாகிஞ்சித்குர்வதஶ்ஶேஷத்வம்**) 89. "**अकिञ्चित्करस्य शेषत्वानुपपत्तिः**" (**அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:**) என்கிறபடியே கிஞ்சித்காரமில்லாதபோது ஶேஷத்வஸித்₃தி₄ இல்லாமையால் தத்ஸித்₃தி₄க்கு உறுப்பான கிஞ்சித்காரத்தை ப்ரதிபாதி₃க்கிற சதுர்த்தி₂, ஶேஷத்வாஶ்ரயமான ஆத்மவஸ்துவைச் சொல்லுகிற மகாரத்தை விவரிக்கிறது. மகார வாச்யனான ஆத்மாவினுடைய நித்யத்வம், ஏகரூபத்வம், ப₃ஹுத்வம் தொடக்கமானவற்றை ப்ரதிபாதி₃க்கையாலே மகாரத்தை விவரிக்கிறது நாரபத₃மென்றுஞ் சொல்லுவர்கள்—என்கை.

'அக்ஷரக்ரமத்திலே விவரியாதே வ்யுத்க்ரமமாக விவரிப்பானேன்?' என்ன, அருளிச்செய்கிறார் 'அடைவே' என்று தொடங்கி.

**மூ. 77. அடைவே விவரியாதொழிகிறது-விரோதி₄ போய் அநுப₄விக்கவேண்டுகையாலே.**

வ்யா:— அதாவது—அக்ஷரக்ரமத்திலே விவரியாதொழிகிறது-அகார விவரணமான நாராயணபத₃த்தில் ப₄க₃வத₃நுப₄வத்துக்கு விரோதி₄யான அஹங்கார மமகாராதி₃கள் நமஸ்ஸாலே கழியுண்டுபோய்ப் பின்னை அநுப₄விக்கவேண்டுகையாலே என்கை.

இனி, மத்₄யமபத₃மான நமஸ்ஸுக்கு அர்த்த₂ம் அருளிச்செய்வதாக, அதில் அவாந்தரபத₃பே₄த₃த்தை அருளிச்செய்கிறார் "நமஸ்ஸு 'ந' என்றும் 'ம:' என்றும் இரண்டுபத₃ம்" என்று.

**மூ. 78.** நமஸ்ஸு-''ந'' என்றும் "ம:" என்றும் இரண்டு பதம்.

*'இவ்விரண்டு பதங்களுக்கும் அர்த்தம் எது?' என்ன, அருளிச்செய்கிறார் 'ம: என்கிற இத்தால்' என்று தொடங்கி.*

**மூ. 79.** 'ம:' என்கிற இத்தால், 'தனக்கு உரியன்' என்கிறது; 'ந' என்று அத்தைத் தவிர்க்கிறது.

*வ்யா:—அதாவது—'ம:' என்று ஷஷ்ட்யந்தமான இம் மகாரத்தால், மகாரவாச்யனான ஆத்மாவுக்குக் கீழ்ச்சொன்ன தாதர்த்ய ப்ரதிகோடியான ஸ்வார்த்தத்வம் தோற்றுகையாலே 'தனக்கு உரியன்' என்னுமத்தைச் சொல்லுகிறது; 'ந' என்று நிஷேதவாசியான நஞ்ஞாலே அத்தைக் கழிக்கிறது—என்கை.*

*உபயபதத்தாலும் சொன்ன அர்த்தத்தைச் சேரப் பிடித்து அருளிச்செய்கிறார் 'ஆக நம: என்கிற இத்தால் தனக்கு உரியன் அன்றென்கிறது' என்று.*

**மூ. 80.** ஆக 'நம:' என்கிற இத்தால், 'தனக்கு உரியனன்று' என்கிறது.

*வ்யா:-பதக்ரமத்திலே அர்த்தஞ் சொல்லாதே, வ்யுத்க்ரமமாகச் சொல்லுகிறது நிஷேத்யத்தைச் சொல்லி நிஷேதிக்க வேண்டுகையாலே; க்ரமத்திலே சொல்லும்போது *"வீடுமின்முற்றவும்" என்னுமாபோலே நிஷேதபூர்வகமாக நிஷேத்யத்தைச் சொல்லுகிறதென்று யோஜிக்கவேணும். அதுதானும் பரந்தபடியிலே இவர் தாமே அருளிச்செய்தார்.*

*'தனக்கும் பிறர்க்கும் உரித்தன்று' என்று அந்யஶேஷத்வத்தை நிஷேதித்த உகாரத்தை விவரிக்கிறதாகில், பிறர்க்கு*

---

* திருவாய்1-2-1.

உரித்தன்றென்றத்தையும் விவரியாமல், 'தனக்குரியனன்று' என்ற இத்தையே விவரிப்பானேன்? என்கிற ஶங்கையிலே, அருளிச்செய்கிறார் 'பிறர்க்கு உரியனுனவன்று' என்று தொடங்கி.

**ஸூ. 81. பிறர்க்கு உரியனுன அன்று தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி மீட்கலாம்; தனக்கென்னுமன்று போக்₃யதையுங்கூட அழியும்.**

*வ்யா:-அதாவது-அந்யஶேஷபூ₄தனுன அன்று, ஶேஷத்வத்துக்கு இசைகையாலே, அந்யரிற்காட்டில் தனக்குண்டான ஸர்வகாரணத்வ ஸர்வரக்ஷகத்வ ஸர்வஶேஷித்வாதி₃யான வைலக்ஷண்யத்தைக்காட்டி அந்நிலையில் நின்றும் மீட்கலாம். 'தனக்குரியன' என்று நிற்குமன்று* 90. "त्वं मे" (த்வம் மே) *என்றால்,* 90. "अहं मे" (அஹம் மே) *என்னுமது ஒழிய ஶேஷத்வத்துக்கு இசையாமையாலே. மீட்கைக்கு போக்₃யதையுங்கூட இல்லையாய்விடும்—என்கை.*

*'இந் நமஸ்ஸால் செய்கிற அம்ஶந்தான் எது?' என்ன. அருளிச்செய்கிறார் 'இத்தால் விரோதி₄யைக் கழிக்கிறது' என்று.*

**ஸூ. 82. இத்தால் விரோதி₄யைக் கழிக்கிறது.**

*'அதுதான் ஒன்றோ? பலவோ?' என்ன. அருளிச்செய்கிறார் 'விரோதி₄தான் மூன்று' என்று.*

**ஸூ. 83. விரோதி₄தான் மூன்று.**

*அம்மூன்றுந்தான் எது? என்ன. அருளிச்செய்கிறார் 'அதாவது, ஸ்வரூப விரோதி₄யும், உபாய விரோதி₄யும், ப்ராப்ய விரோதி₄யும்' என்று.*

**ஸூ. 84. அதாவது—ஸ்வரூப விரோதி₄யும், உபாய விரோதி₄யும், ப்ராப்ய விரோதி₄யும்.**

வ்யா:—இத்தால் ப்ரத₂மபத₃த்திற்சொன்ன ஸ்வரூபத்துக்கு விரோதி₄யும், இப்பத₃த்தில் ஆர்த்த₂மாக ஸித்₃தி₄க்கிற உபாயத்துக்கு விரோதி₄யும் உத்தரபத₃த்தில் சொல்லுகிற ப்ராப்யத்துக்கு விரோதி₄யுமென்கை. இந்நமஸ்ஸுதான் காகாக்ஷி ந்யாயத்தாலே பூர்வோத்தரபத₃ங்களிற் சொல்லுகிற ஸ்வரூப ப்ராப்யங்களினுடைய விரோதி₄களைக் கழிக்கக் கடவதாயிறே இருப்பது.

'இவ்விரோதி₄த்ரயமும் கழிகையாவதுதான் எது?' என்ன, அது தன்னை அடைவே அருளிச்செய்கிறார், மேல் மூன்று வாக்யத்தாலே.

**சூ.85. ஸ்வரூப விரோதி₄ கழிகையாவது-*"யானே நீ என்னுடைமையும் நீயே" என்றிருக்கை; உபாயவிரோதி₄ கழிகையாவது-†"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றிருக்கை; ப்ராப்ய விரோதி₄ கழிகையாவது- /"மற்றை நங்காமங்கள் மாற்று" என்றிருக்கை.**

வ்யா:-'ஸ்வரூபவிரோதி₄' இத்யாதி₃. அதாவது-ஸ்வரூபத்துக்கு விரோதி₄ * "யானே என்தனதே" என்றிருக்கையாகையாலே. அது கழிகையாவது *"யானே நீயென்னுடைமையும் நீயே" என்று ஆத்ம ஆத்மீயங்கள் இரண்டும் அத்தலைக்கு ப்ரகாரதயா ஶேஷம் என்றிருக்கை—என்கை. 'உபாயவிரோதி₄' இத்யாதி₃. அதாவது-உபாயத்துக்கு விரோதி₄ ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயமாகையாலே. அது கழிகையாவது-†"களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று—'து₃க்க₂த்தைப் போக்குவாய் போக்காதொழிவாய், வேறொரு ரக்ஷகவஸ்துவையுடையேனல்லேன்' என்றிருக்கை—என்கை. 'ப்ராப்யவிரோதி₄' இத்யாதி₃. அதாவது—ப்ராப்யத்துக்கு விரோதி₄ ஸ்வப்ரயோஜநபு₃த்₃தி₄யாகையாலே, அது கழிகை

* திருவாய் 2-9-9. † திருவாய் 5-8-8. / திருப்பாவை 30.

*யாவது- /''மற்றைநங்காமங்கள் மாற்று'' என்று- 'உன்னுகப்புக்குப் புறம்பான எங்களுடைய ஆசையைப் போக்கு' என்றிருக்கை-என்கை.*

*இப்படி ஸ்வரூபோபாய புருஷார்த்தங்கள் மூன்றுக்கும் விரோதியாகிறது இவனுடைய அஹங்கார மமகாரங்களாகையாலே அதினுடைய க்ரௌர்யதையும் தந்நிவ்ருத்தியிலுண்டானநன்மையையும்அருளிச்செய்கிறார் ''ம:'என்கை ஸ்வரூபநாஶம். 'நம:' என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்' என்று.*

**மூ. 86. 'ம:' என்கை ஸ்வரூபநாஶம், 'நம:' என்கை ஸ்வரூபோஜ்ஜீவநம்.**

வ்யா:—*அதாவது- 91.* **"चेतनस्य यदा मम्यं स्वस्मिन् स्वीये च वस्तुनि। मम इत्यक्षरद्वन्द्वं तदा मम्यस्य वाचकम्॥"** (சேதநஸ்ய யதா மம்யம் ஸ்வஸ்மிந் ஸ்வீயே ச வஸ்துநி| மம இத்யக்ஷரத்வந்த்வம் ததா மம்யஸ்ய வாசகம்॥) *என்கிறபடியே. 'ம:' என்கிற இதிலே அஹங்கார மமகாரங்கள் இரண்டுமுண்டாகையாலே அதிலே அந்விதனாகை— இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபத்துக்கு நாஶம்; 'நம:' என்று அதில் அந்வயமற்றிருக்கை—ஸ்வரூபத்துக்கு உஜ்ஜீவநம்-என்கை. 92.*"**द्व्यक्षरस्तु भवेन्मृत्युस्त्र्यक्षरं ब्रह्मणः पदम्। ममेति द्व्यक्षरो मृत्युर्न ममेति च शाश्वतम्॥**"(த்வ்யக்ஷரஸ்து பவேந் ம்ருதயுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண: பதம்| மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர் ந மமேதி ச ஶாஶ்வதம்॥)*என்னக்கடவதிறே.*

*இப்படி ஸ்வரூப உபாய புருஷார்த்த விரோதிகளைக் கழிக்கிற அளவன்றிக்கே. இந்நமஸ்ஸு தான் ஸ்வரூபாதித்ரயத்தையும் ப்ரகாஶிப்பிக்கும் என்கிறார் 'இதுதான் ஸ்வரூபத்தையும்,உபாயத்தையும், பலத்தையும் காட்டும்'என்று.*

**மூ. 87. இதுதான்-ஸ்வரூபத்தையும், உபாயத்தையும், பலத்தையும காட்டும்.**

*இதுதன்னை உபபாதிக்கிறார். மேல் மூன்று வாக்யத்தாலே.*

---

*| திருப்பாவை 30.*

மூ.88. *"தொலைவில்லிமங்கலந் தொழும்"என்கை யாலே, ஸ்வரூபம் சொல்லிற்று; †"வேங்கடத்து உறை வார்க்கு நம" என்கையாலே, உபாயம் சொல்லிற்று; ||"அந்தி தொழுஞ் சொல்" என்கையாலே, ப₂லம சொல்லிற்று.

வ்யா:— 'தொலைவில்லி மங்கலம்' இத்யாதி₃. அதாவது— *"தொலைவில்லி மங்கலந்தொழும்" என்று அவளுகந்தருளின நிலத்தளவும்செல்ல ஶேஷமாயிருக்கும் படியைச் சொல்லுகிறவளவில் 'தொழும்' என்று நமஸ்காரத் தைச் சொல்லுகையாலே ஸ்வரூபம் சொல்லிற்று-என்கை. 'வேங்கடத்து' இத்யாதி₃. அதாவது—†"வேங்கடத் துறை வார்க்குநம" என்று 'திருவேங்கடமுடையானுக்கு ஶேஷம் நான்; எனக்குரியனல்லேன்' என்று ஸ்வரக்ஷணத்தில் ப்ராப் தியில்லாத ஸ்வரூப பாரதந்த்ர்யத்தைச் சொல்லுகையாலே, அவனே உபாயமென்னுமிடம் ஸித்₃தி₄க்கையாலே உபாயம் சொல்லிற்று-என்கை. 'அந்தி தொழுஞ்சொல்' இத்யாதி₃. அதாவது, ||"அந்திதொழுஞ் சொல்" என்று தா₃ஸ்யரஸம் அதிஶயித்தால் அதனுடைய சரமத₃ஶையிலே சொல்லக் கடவ "தொழுஞ்சொல்" என்று நமஶ்ஶப்₃த₃த்தைச் சொல்லுகையாலே. ப₂லம் சொல்லிற்று—என்கை.

இப்பத₃த்திலே, ததீ₃யஶேஷத்வமும் ஆர்த்த₂மாக அநு ஸந்தே₄யமாகையாலே. அத்தை அருளிச்செய்கிறார் 'உற்ற தும்' என்று தொடங்கி.

மூ.89. /'உற்றதும் உன்னடியார்க்கடிமை' ‡என்கிற படியே இதிலே பா₄க₃வதஶேஷத்வமும் அநுஸந்தே₄யம்.

வ்யா:—அதாவது- /"நின் திருவெட்டெழுத்துங்கற்று நானுற்றதும் உன்னடியார்க்கு அடிமை" என்று 'திருமந்த்ரங் கற்றத்தால் நான் உற்றதும் உன்னடியார்க்கு அடிமை

---

* திருவாய் 6-5-1. † திருவாய் 3-3-6. || திருவாய் 10-8-7. / பெரியதிரு 8-10-3. ‡ (பா) என்கையாலே.

என்னும் இவ்வர்த்த₂த்திலே' என்கிறபடியே, அஹங்கார மமகாரங்கள் நிவ்ருத்தமாய், ப₄க₃வச்சே₂ஷத்வம் உள்ளபடி ப்ரகாஶிக்கிற இந்நமஸ்ஸிலே தத்காஷ்டை₂யான பா₄க₃வத ஶேஷத்வமும் அநுஸந்தி₄க்கவேணும்—என்கை.

இப்படி ஆர்த்த₂மாக அநுஸந்தி₄க்கப்படும் பா₄க₃வத ஶேஷத்வந்தான். இந்நமஸ்ஸிலன்றிக்கே ஸ்த₂லாந்தரங்களிலே சொல்லுவாருமுண்டாகையாலே. அத்தை அருளிச் செய்கிறார் 'இது அகாரத்திலே என்றுஞ்சொல்லுவர்கள். உகாரத்திலே என்றுஞ்சொல்லுவர்கள்' என்று.

**மூ. 90. இது-அகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்; உகாரத்திலே என்றுஞ் சொல்லுவர்கள்.**

வ்யா:— அதாவது- சதுர்த்தி₂யாலே ஆத்மாவினுடைய ப₄க₃வச்சே₂ஷத்வத்தைச் சொல்லுகையாலே, ப₄க₃வச்சே₂ஷத்வகாஷ்டை₂யான இந்த பா₄க₃வத ஶேஷத்வாநுஸந்தா₄நம் அகாரத்திலேயென்றும் சிலர் சொல்லுவர்கள். அநந்யார்ஹஶேஷத்வத்துக்கு எல்லை ததீ₃ய ஶேஷத்வபர்யந்தமாக நிற்கையாகையாலே, அநந்யார்ஹத்வப்ரதிபாத₃கமான உகாரத்திலேயென்றும் சிலர் சொல்லுவர்கள்—என்கை. ஆர்த்த₂மாகையாலே, அவ்வவஸ்த₂லங்களிலும் சொல்லலாயிருந்ததேயாகிலும், கந்தல் கழிந்தவிடத்திலே சொல்லுகையே உசிதமென்று கருதது.

இந்நமஸ்ஸுக்குப் பூர்வத்திற் பிறந்த ப்ரதிபத்தியைப் பற்ற இதிற்பிறந்த ப்ரதிபத்திக்குண்டான வாசியை அருளிச் செய்கிறார்,'ஈஶ்வரன் தனக்கேயாயிருக்கும்'என்று தொடங்கி.

**மூ.91. 'ஈஶ்வரன் தனக்கேயாயிருக்கும்; அசித்துப் பிறர்க்கேயாயிருக்கும்; ஆத்மா தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருக்கும்' என்று முற்பட்ட நினைவு; அங்ஙனன்றிக்கே, அசித்தைப்போலே தனக்கேயாக எனைக் கொள்ளவேணுமென்கிறது நமஸ்ஸால்.**

வ்யா:- அதாவது- 93. "स्वरूपं स्वातन्त्र्यं भगवतः" (ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் ப$_4$க$_3$வத:) என்கிறபடியே, ஸ்வாதந்த்ர்யமே ஸ்வரூபமான ஈஸ்வரன் ஸ்வார்த்த$_2$பரனாயே இருக்கும்; கைங்கர்யரஹிதமாகையாலே தனக்கே என்கைக்கு யோக்$_3$யதையின்றிக்கே பாரதந்த்ர்ய ஸ்வரூபமாயிருக்கும் அசித்து. பரார்த்த$_2$மாயே இருக்கும். சதுர்த்தியிற்சொன்ன ஶேஷத்வத்தையும் மகாரத்திற்சொன்ன ஜ்ஞாத்ருத்வத்தையும் உடையனான ஆத்மா ஜ்ஞாத்ருத்வப$_3$லத்தாலே ஸ்வார்த்த$_2$தைக்கும், ஶேஷத்வத்தாலே பரார்த்த$_2$தைக்கும் பொதுவாயிருக்கும் என்று. நமஸ்ஸுக்குப் பூர்வபத$_3$த்திற் பிறந்த ப்ரதிபத்தி; அப்படியின்றிக்கே, பரார்த்த$_2$தைக வேஷமான அசித்துப் போலே || "தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே" என்கிறபடியே அத்தலைக்கே ரஸமாம்படி விநியோக$_3$ங் கொள்ள வேணும் என்று அபேக்ஷிக்கிறது இந்நமஸ்ஸாலே—என்கை.

"தனக்கேயாக' என்றத்தை உபபாதி$_3$க்கிறார் 'அதாவது' என்று தொடங்கி.

ஸூ.92. அதாவது-பே$_4$ாக$_3$த$_3$ஶையில் ஈஶ்வரன் அழிக்கும்போது நோக்கவேணுமென்று அழியாதொழிகை.

வ்யா:—இத்தால் அத்தலைக்கே ரஸமாம்படி விநியோக$_3$ப் படுகையாவது—தன்னோடே கலந்து பரிமாறும் த$_3$ஶையில் போ$_4$க்தாவான ஈஶ்வரன் †"ஆட்கொள்வானொத்து என்னுயிருண்டமாயன்" என்கிறபடியே அடிமைகொள்வாரைப்போலே புகுந்து, தன் வ்யாமோஹத்தாலே தாழநின்று பரிமாறி இத்தலையில் ஶேஷத்வத்தை அழிக்கும்போது, 'நம் ஶேஷத்வத்தை நாம் நோக்கவேணும்' என்று நைச்யம் பா$_4$வித்து இருய்த்து அவன் போ$_4$கத்தை அழியாதொழிகை—என்கை.

'இப்படி இவன் அழிக்கைக்கு ஹேதுவென்?' என்ன, அருளிச்செய்கிறார் 'அழிக்கைக்கு ஹேது' என்று தொடங்கி.

|| திருவாய் 2-9-4. † திருவாய் 9-6-7.

மூ. 93, அழிக்கைக்கு ஹேது-கீழே சொல்லிற்று; மேலுஞ்சொல்லும்.

வ்யா:— அதாவது-ஈஶ்வரன் மேல்விழுந்து விநியோகமுங் கொள்ளுகிறதமைஶயிலே இவன்ஸ்வயம்பராவித்து இருய்த்து அவன் போகத்தை அழிக்கைக்கு ஹேது. 'ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபம்' என்கையாலே கீழே ப்ரணவத்திலே சொல்லிற்று; சதுர்த்தியிலே கிங்கரஸ்வபாவனுகைச் சொல லுகையாலே, மேலிற் பதத்திலும் சொல்லும்—என்கை.

இனி, இப்பாரதந்த்ர்ய ப்ரதிபத்தியினுடைய வைபவத்தைப் பலபடியாக அருளிச்செய்யாநின்றுகொண்டு, இப் பதத்தை நிகமித்தருளுகிறார் மேல்;

மூ. 94. இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்; இந்நினைவில்லாதபோது எல்லா துஷ்க்ருதங்களும் க்ருதம; இந்நினைவிலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு. இதுஇன்றிக்கே இருக்கப்பண்ணும் யஜ்ஞாதிகளும் ப்ராயஶ்சித்தாதிகளும் நிஷ்ப்ரயோஜநங்கள்; இதுதன்னுலே எல்லாபாபங்களும்போம், எல்லாபலங்களும்உண்டாம்.

வ்யா:—'இந்நினைவு பிறந்தபோதே க்ருதக்ருத்யன்' என்றது-*'தனக்கேயாக எனைக்கொள்ளவேணும்' என்னும் இவ் வத்யந்த பாரதந்த்ர்யப்ரதிபத்தி பிறந்தபோதே தன்னுடைய ஹிதத்துக்கு உடலாகச் செய்யவேண்டுவதெல்லாம் செய்து தலைக்கட்டினவன்—என்கை.

'இந்நினைவு இல்லாதபோது எல்லாதுஷ்க்ருதங்களும் க்ருதம்' என்றது-இப்பாரதந்த்ர்ய ப்ரதிபத்தி இல்லாத போது. 94. "किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा" (கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணு) என்கிறபடியே ஸகலதுஷ்க்ருதங்களும் இவனுலே செய்யப்பட்டதாய்விடும்-என்கை.

* திருவாய் 2-9-4.

'இங்ஙனே விலே எல்லா ஸுக்ருதங்களும் உண்டு' என்றது-இது உண்டாகவே எல்லா ஸுக்ருதமும் பண்ணினால் பிறக்கும் ப்ரீதி ஈஶ்வரனுக்கு விளைகையாலே. இந்தப்பாரதந்த்ர்யப்ரதிபத்தியிலே ஸகலஸுக்ருதமும் உண்டு-என்கை.

'இது இன்றிக்கேயிருக்கப் பண்ணும் யஜ்ஞாதி$_3$களும் ப்ராயஶ்சித்தாதி$_3$களும் நிஷ்ப்ரயோஜநங்கள்' என்றது—இந்தப் பாரதந்த்ர்ய ப்ரதிபத்தி இன்றிக்கேயிருக்கசெய்தே. ஈஶ்வர ப்ரீணநார்த்த$_2$மாக இவன் பண்ணும் யாக$_3$ாதி$_3$ கர்மங்களும், தன் பாபவிமோசநார்த்த$_2$மாகப் பண்ணும் க்ருச்ச்$_2$ரசாந்த்$_3$ராயணாதி$_3$களாகிற ப்ராயஶ்சித்தாதி$_3$களும் ஈஶ்வரப்ரீதிக்கும் ஸ்வபாபவிமோசநத்துக்கும் உடலாகாமை யாலே நிஷ்ப்ரயோஜநங்கள்—என்கை.

'இது தன்னாலே எல்லாப் பாபங்களும்போம். எல்லா ப$_2$லங்களும் உண்டாம்' என்றது—இந்தப் பாரதந்த்ர்ய ப்ரதிபத்தியாலே ஈஶ்வரன் இவனளவிலே அநுக்$_3$ரஹாதிஶயத்தைப் பண்ணுகையாலே அவனுடைய நிக்$_3$ரஹாத்மகமான ஸகல பாபங்களும் போம்; * "உன்னடியார்க்கென் செய்வனென்றேயிருத்தி நீ" என்கிறபடியே இவனுக்கெத்தைச் செய்வோமென்று மேன்மேலும் உபகரிக்கையாலே ஸம்ஸாரநிவ்ருத்தி தொடக்கமாக கைங்கர்யப்ராப்தி பர்யந்தமாக ஸகல ப$_2$லங்களும் உண்டாம்—என்கை. ஆக மத்$_4$யம பதா$_3$ர்த்த$_2$த்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம் நாராயண பதா$_3$ர்த்த$_2$த்தை அருளிச்செய்கிறார் 'நாராயணனென்றது' என்றுதொடங்கி.

## சூ. 95. நாராயணனென்றது நாரங்களுக்கு அயநமென்றபடி.

வ்யா:—அதாவது—நாராயண பத$_3$ந்தான் "நாராணாம் அயநம் ய: ஸ: நாராயண:" என்றும் "நாரா: அயநம் யஸ்ய ஸ:

* பெரிய-திருவ 53.

நாராயண:''என்றும் தத்புருஷபஹுவ்ரீஹிரூப ஸமாஸத்வய ஸித்தமாகையாலே, அதில் தத்புருஷனில் அர்த்தத்தை முந்துற அருளிச்செய்கிறார் 'நாரங்களுக்கயநமென்றபடி' என்று.

நாரங்களாகிறவை தாம் எவை? என்ன. அருளிச்செய்கிறார் 'நாரங்களாவன நித்யவஸ்துக்களினுடைய திரள்' என்று.

மூ. 96. நாரங்களாவன-நித்யவஸ்துக்களினுடைய திரள்.

வ்யா:-நாரபதம் ''நர'' என்றும் ''நார'' என்றும் ''நாரா:'' என்றுமாய் ''रिङ्-क्षये'' (ரிங்-க்ஷயே) என்கிற தாதுவிலே 'ர' என்று பதமாய் க்ஷயிக்கும் வஸ்துவைச் சொல்லி நகாரம் அத்தை நிஷேதித்து ''நர'' என்று க்ஷயமில்லாத நித்ய வஸ்துவைக்காட்டி ஸமூஹார்த்தத்திலே 'அண்'ப்ரத்யயமும், ஆதிவ்ருத்தியுமாய் ''நார'' என்று நித்யவஸ்து ஸமூஹத்தைச் சொல்லி ''நாரா:'' என்று பஹுவசநமாகையாலே ஸமூஹ பாஹுள்யத்தைச் சொல்லுகையால், 'நித்யவஸ்துக்களினுடையதிரள்' என்கிறார். இதில் 'நித்ய' என்கையாலே நரஶப்தார்த்தமும், 'வஸ்துக்கள்' என்கையாலே நாரஶப்தார்த்தமும். அவற்றினுடைய 'திரள்' என்கையாலே பஹுவசநார்த்தமும் சொல்லப்பட்டதிறே.

'தாத்ருஶங்களானவை தாம் எவை? என்ன, அருளிச்செய்கிறார் 'அவையாவன' என்றுதொடங்கி.

மூ.97.அவையாவன-ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாந ஶக்த்யாதிகளும், வாத்ஸல்ய ஸௌஶீல்யாதிகளும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதிகளும், திவ்யபூஷணங்களும், திவ்யாயுதங்களும், பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்ய ஸூரிகளும், சத்ரசாமராதிகளும், திருவாசல் காக்கும்

முதலிகளும், க₃ருடித்₄பரும், முக்தரும், பரமாகாஶமும், ப்ரக்ருதியும், ப₃த்₃தாத்₄மாக்களும், காலமும், மஹதா₃தி₃ விகாரங்களும், அண்டங்களும், அண்டத்துக்கு உட்பட்ட தே₃வாதி₃ பதா₃ர்த்த₂ங்களும.

வ்யா:—(ஜ்ஞாநாநந்தா₃மலத்வாதி₃கள்)ஆவன—ஸ்வரூப நிரூபக த₄ர்மங்கள். ஆ₃தி₃ஶப்₃த₃த்தாலே அநந்தத்வத்தைச் சொல்லுகிறது. (ஜ்ஞாநாஶக்த்யாதி₃கள்) ஆவன—நிரூபித ஸ்வரூப விஶேஷணங்களான ஸமஸ்த கல்யாணகு₃ணங் களுக்கும் ப்ரதா₄நமாயிருந்துள்ள ஜ்ஞாநஶக்தி ப₃ல ஐஶ்வர்ய வீர்யதேஜஸ்ஸுக்களாகிற ஷாட்₃கு₃ணங்கள். (வாத்ஸல்ய ஸௌஶீல்யாதி₃கள்)ஆவன—அந்த ஷாட்₃கு₃ண்யாயத்தமான வாத்ஸல்ய ஸௌஶீல்ய ஸ்வாமித்வ ஸௌலப்₄யாத்₃ய ஸங்க்₂யேயகல்யாணகு₃ணவிஶேஷங்கள். (திருமேனி) ஆவது- அஸாதா₄ரணமான தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹம். ஏகவசநம் ஜாத்யபி₄ப்ராயமாய், நித்யமான தி₃வ்யவிக்₃ரஹத்தையும் ஐச் சி₂கமாகப் பரிக்₃ரஹிக்கும் விக்₃ரஹாந்தரங்களையும் சொல்லு கிறது; அல்லாதபோது ஒரே ஸமூஹமாக எண்ணிவருகிற ப்ரகரணத்துக்குச் சேராது. இதுதான் நடுவிற்றிருவீதிப் பிள்ளைபட்₄டர், ஆச்சான்பிள்ளை இவர்கள் அருளிச்செய்த ப்ரப₃ந்த₄ங்களிலே ஸுஸ்பஷ்டம். (காந்தி ஸௌகுமார்யாதி₃ கள்) ஆவன—அந்த விக்₃ரஹகு₃ணங்களான ஸௌந்த₃ர்ய ஸௌகுமார்ய ஸௌக₃ந்த்₄ய லாவண்ய யௌவநாதி₃கள். (தி₃வ்யபூ₄ஷணங்கள்) ஆவன-ஆப₄ரணசூர்ணையிலே பா₄ஷ்ய காரர் அருளிச்செய்தபடியே கிரீடாதி₃ நூபுராந்தமாக அத் திருமேனிக்குச் சாத்தும் அஸங்₂யேயமான திருவாப₄ரணங் கள். (தி₃வ்யாயுத₄ங்கள்) ஆவன-அழகுக்கும் ஆஶ்ரிதவிரோதி₄ நிரஸநத்துக்கும் உடலாயிருந்துள்ள ஶங்க₂சக்ரக₃தா₃-அஸி ஶார்ங்கா₃தி₃—அஸங்க்₂யேய ஆயுத₄விஶேஷங்கள். (பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்) ஆவார்-95. "श्रीवल्लभ एवंभूतभूमिनीलानायक" (ஶ்ரீவல்லப₄ எவம்பூ₄தபூ₄மிநீளாநாயக) 96. "देवि त्वामनु नीलया सह मही देव्यस्सहस्रं तथा" (தே₃வி த்வா

மநு நீளயா ஸஹ மஹீ தே$_{3}$வ்யஸஸஹஸ்ரம் தத$_{2}$ா) என்கிற படியே ப்ரத$_{4}$ாநமஹிஷியான பெரியபிராட்டியார் முதலாகத் தத்ஸமானைகளான பூ$_{4}$மிநீளைகளும். மற்றும் அநேகராகச் சொல்லப்படுகிறவர்களும். "லக்ஷ்மீ ப்$_{4}$ரப்ருதி மஹிஷீவர்கக$_{3}$ங்களும்" என்றிறே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தது. (நித்ய ஸூரிகள்) ஆவார்-அநந்தக$_{3}$ருட$_{3}$ விஷ்வக்ஸேநாதி$_{3}$களாயிருந்துள்ள அஸங்க்$_{2}$யேயரானஸூரிஜநங்கள். (ச$_{2}$த்ரசாமராதி$_{3}$கள்) ஆவன-கைங்கர்யஉபகரணங்களான ச$_{2}$த்ர சாமர தாலவ்ருந்த ப்$_{4}$ருங்க$_{3}$ாரபதத்$_{3}$க்$_{3}$ரஹாதி$_{3}$கள். (திருவாசல்காக்கும்முதலிகள்) ஆவார்—சண்ட$_{3}$ப்ரசண்ட$_{3}$ ப$_{4}$த்$_{3}$ரஸுப$_{4}$த்$_{3}$ர ஜய விஜயாதி$_{3}$கள். (கணாதி$_{4}$பர்) ஆவார்—குமுத$_{3}$குமுதா$_{3}$க்ஷ புண்ட$_{3}$ரீக வாமந ஶங்குகர்ண ஸர்வநேத்ர ஸுமுக$_{2}$ ஸுப்ரதிஷ்டி$_{2}$தாதி$_{3}$கள். (முக்தர்) ஆவார்-*"கரைகண்டோர்" என்கிறபடியே ஸம்ஸார ஸாக$_{3}$ரத்தைக் கடந்து அக்கரைப்பட்டு நித்யஸூரிகளோடு ஸமாநாகாரராய். நிகி$_{2}$லகைங்கர்ய நிரதராயிருக்கும் அஸங்க்$_{2}$யேயரான சேதநர். (பரமாகாஶம்) ஆவது—பஞ்சோபநிஷந்மயமான பரமபத$_{3}$ம். இதுதான் பஞ்சோபநிஷந்மயமாகையாலே ஸமூஹாத்மகமாயிறே இருப்பது. ஆகையால் ஸமூஹக$_{3}$ணனைக்கு விரோத$_{4}$மில்லை. "பஞ்சோபநிஷந்மயமாகையாலே. பரமபத$_{3}$மும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்றிறே ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தது.

ஆக. 'ஜ்ஞாநாநந்த$_{3}$ாமலத்வாதி$_{3}$களும்' என்றுதொடங்கி இவ்வளவும் ஸ்வரூப நிரூபக த$_{4}$ர்மங்களையும், நிரூபித ஸ்வரூப விஶேஷணங்களான கல்யாணகு$_{3}$ணங்களையும். அக்கு$_{3}$ணங்களுக்கு ப்ரகாஶகமான தி$_{3}$வ்யமங்க$_{3}$ள விக்$_{3}$ரஹத்தையும். விக்$_{3}$ரஹகு$_{3}$ணமான ஸௌந்த$_{3}$ர்யாதி$_{3}$களையும், அந்தஸௌந்த$_{3}$ர்யாதி$_{3}$களோபாதி பூத்தாற்போலே சாத்தின தி$_{3}$வ்யாப$_{4}$ரணங்களையும். அவ்வாப$_{4}$ரணங்களோடு விகல்பிக்கலாம்படியான தி$_{3}$வ்யாயுத$_{4}$ங்களையும். இவையித்தனையும் காட்டிலெரித்த நிலவாகாதபடி அருகேயிருந்து அநுப$_{4}$விக்கிறநாச்சிமாரையும்.

---

* திருவாய் 8-3-10.

அச்சேர்த்தியிலே அடிமைசெய்கிற நித்யஸூரிகளையும், அவர்களுக்குக் கைங்கர்யோபகரணங்களான ச$_2$த்ரசாமராதி$_3$களையும். "இச்சேர்த்திக்கு என் வருகிறதோ" என்று வயிறெரிந்து நோக்கும் திருவாசற்காக்கும் முதலிகளையும். அப்படி மங்க$_3$ளாஶாஸநபரராய், திருப்படைவீட்டுக்கடையக் காவலாயிருக்கும் க$_3$ஜெதி$_4$பரையும். நிவ்ருத்தஸம்ஸாரராய், அவர்களோடு ஒருகோர்வையாய் அடிமைசெய்கிற முக்தரையும், அவ்வடிமைக்கு வர்த்த$_4$கமான பரமபத$_3$த்தையும் அருளிச்செய்தாராயிற்று.

லீலாவிபூ$_4$தியிலுள்ளவற்றை அருளிச்செய்கிறார் மேல். (ப்ரக்ருதி) ஆவது—கு$_3$ணத்ரயாத்மகதயா ஸமூஹாத்மிகையாயிருக்கும் மூலப்ரக்ருதி. "கு$_3$ணத்ரயாத்மிகையாகையாலே மூலப்ரக்ருதியும் ஸமூஹாத்மிகையாயிருக்கும்" என்றிறே இதற்கும் ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தது. (ப$_3$த்$_3$த$_4$ாத்மாக்கள்) ஆவார்-உரைமெழுகிற்பொன்போலே, இப்ரக்ருதிக்குள்ளே உருமாய்ந்து கிடக்கிற ஆத்மாக்கள். (காலம்) ஆவது-அஹோராதராதி$_3$விப$_4$ாக$_3$யுக்ததயா ஸமூஹாத்மகமாயிருக்கும் அசித்$_3$விஶேஷம். "அஹோராத்ராதி$_3$விப$_4$ாக$_3$ங்கள் அநேகமாகையாலே, காலமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்" என்றிறே இதுக்கும் ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தது.

ஆக இவ்வளவும் ஸ்வரூபேண நித்யங்களான வஸ்துக்களைச் சொல்லிற்று.

மேல் ப்ரவாஹரூபேண நித்யங்களைச் சொல்லுகிறது. ஸ்வரூபேண நித்யத்வமாவது— ஸத்தான பதா$_3$ர்த்த$_2$த்தினுடைய உத்பத்தி விநாஶாத்யந்தாப$_4$ாவம். ப்ரவாஹரூபேண நித்யத்வமாவது— உத்பத்தி விநாஶயோகி$_3$யாகாநிற்கச் செய்தேயும், பூர்வகாலத்திலுண்டான நாமரூபலிங்க$_3$ாதி$_3$களுடைய அநந்யதா$_2$ப$_4$ாவம்.

இதில் (மஹதா$_3$தி$_3$ விகாரங்கள்) ஆவன—மஹத்தத்வந் தொடங்கி ப்ருதி$_2$வியளவாக உண்டான இருபத்துமூன்று

தத்வமும். (அண்டங்கள்) ஆவன—இம்மஹதாதிகளாலே ஆரப்₃த₄ங்களாய் 97. "अण्डानां तु सहस्राणां सहस्राण्ययुतानि च" (அண்டா₃நாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச) என்கிறபடியே அஸங்க்₂யேயமாயிருக்கிற அண்ட₃விஶேஷங்கள். (அண்டத்₃து₃க்கு உட்பட்ட தே₃வாதி₃பதா₃ர்த்த₂ங்கள்) ஆவன—அண்டா₃ந்தர்வர்த்திகளான தே₃வ மநுஷ்ய திர்யக் ஸ்தா₂வரங்கள். ஆக, நாரபதா₃ர்த்த₂ம் அருளிச்செய்தாராயிற்று.

மேல், அயநபதா₃ர்த்த₂த்தை அருளிச்செய்கிறார்—'அயநமென்றது—இவற்றுக்கு ஆஶ்ரயமென்றபடி' என்று.

**மூ. 98. அயநம் என்றது—இவற்றுக்கு ஆஶ்ரயமென்றபடி.**

வ்யா:—அதாவது— அயநஶப்₃த₃ம் ஆஶ்ரயவாசியாகையாலே இவற்றுக்கு அயநமென்றது இவற்றுக்கு ஆஶ்ரயமென்றபடி—என்கை.

ப₃ஹுவ்ரீஹி ஸமாஸார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் 'அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆஶ்ரயமாக உடையனென்னவுமாம்' என்று.

**மூ. 99. அங்ஙனன்றிக்கே, இவைதன்னை ஆஶ்ரயமாகவுடையனென்னவுமாம்.**

வ்யா:-அதாவது-இவற்றுக்கு ஆஶ்ரயமென்று தத்புருஷஞ்சொல்லுகையன்றிக்கே, 'இவைதன்னை ஆஶ்ரயமாகவுடையன்' என்று ப₃ஹுவ்ரீஹியாகச்சொல்லவுமாம்-என்கை.

'இவற்றுக்குஆஶ்ரயம்'என்கிறவிடத்தில் கு₃ணங்களையும் சொல்லிற்றேயாகிலும், 'இவைதன்னைஆஶ்ரயமாகவுடையன்' என்கிற இடத்தில், குணங்களையொழியச் சொல்லவேணும்: அக்கு₃ணங்களுக்கு வ்யாப்யத்வம் சொல்லுமளவில், ஆத்மாஶ்

ரயமும் அநவஸ்தை₂யுமாகிற தோ₃ஷங்கள் வருமாகையாலே. "தன் கு₃ணங்களிலே ஈச்வரன் வ்யாபிக்கும்போது கு₃ண விசிஷ்டனாயே வ்யாபிக்கவேணும். நிர்க்கு₃ணமாய் வஸ்து இராமையாலே; அப்போது, வ்யாப்யகு₃ணங்களே வ்யாபக கு₃ணங்களாய், வ்யாபக கு₃ணங்களே வ்யாப்ய கு₃ணங்களாயறுகையாலே. ஆத்மாச்ரய தோ₃ஷமுண்டாம்; அதுக்கு மேலே. தன் கு₃ணங்களிலே கு₃ணி வ்யாபிக்கவென்று புக்கால். தத₃ாச்ரயமான கு₃ணங்களையும் கு₃ணி வ்யாபிக்கவேணும்; அந்த வ்யாபகனுடைய கு₃ணங்களையும் கு₃ணி வ்யாபிக்க வேணும். ஆகையாலே, அநவஸ்த₂ா து₃ஸ்தமாம்" என்று இது தன்னை ஸுஸ்பஷ்டமாக ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தாரிறே.

இவ்வுப₄ய ஸமாஸத்தாலும் ப₂லிதாம்சத்தை அருளிச் செய்கிறார் 'இவையிரண்டாலும்' என்று தொடங்கி.

**சூ. 100. இவையிரண்டாலும் ப₂லித்தது பரத்வ ஸௌலப்₄யங்கள்.**

வ்யா:—அதாவது—நாரங்களுக்கு அயநம்; 'நாரங்களை அயநமாகவுடையவன்' என்கிற இவை இரண்டாலும் ப₂லித்த அர்த்த₂ம்— தன்னையொழிந்த ஸமஸ்த வஸ்துக் களுக்கும் தான் ஆத₄ாரமாயிருக்கையாகிற பரத்வமும், இப்படிப் பெரியனான தான் ஸகல சேதநாசேதநங்களிலும் தன்னையமைத்துக்கொண்டு புக்கிருக்கையாகிற ஸௌலப்₄ய மும்—என்கை.

இன்னமும் ஒரு ப்ரகாரத்தாலே இந்த ஸமாஸத்₃வய ப₂லிதங்களை அருளிச்செய்கிறார் 'அந்தர்யாமித்வமும், உபாய த்வமும், உபேயத்வமுமாகவுமாம்' என்று.

**சூ. 101. அந்தர்யாமித்வமும், உபாயத்வமும், உபேயத்வமுமாகவுமாம்.**

வ்யா:—அதாவது–ப₃ஹுவ்ரீஹியும் தத்புருஷனுமாகிற உப₄யஸமாஸத்தாலும் ப₂லித்தது-அந்தர்யாமிப்₃ராஹ்மணஸித்₃

களிற் சொல்லுகிறபடியே, அகி$_2$ல சேதநாசேதநங்களிலும் அந்தராத்மதயா அவஸ்தி$_2$தனாய்க்கொண்டு நியந்தாவாயிருக்கையாகிற அந்தர்யாமித்வமும் "इण्-गतौ" (இண் க$_3$தௌ) என்கிற தா$_4$துவிலேயாதல் "अय गतौ" (அய க$_3$தௌ) என்கிற தா$_4$துவிலேயாதல் ஸித்$_3$த$_4$மான அயநபத$_3$த்தில் கரணவ்யுத்பத்தியாலும் கர்மணிவ்யுத்பத்தியாலும் ப்ரகாஶிதமான உபாயத்வமும் உபேயத்வமுமாகவுமாம்—என்கை. ப$_3$ஹுவ்ரீஹியோஜநை சொல்லுகிறவிடத்திலே யோக்$_3$யதாநுகு$_3$ணமாக நாரஶப்$_3$த$_3$த்தை கு$_3$ணங்களையொழிந்த வஸ்துக்களுக்கு வாசகமாகக் கொண்டாப்போலே தத்புருஷயோஜநையிலும் அயநஶப்$_3$த$_3$த்தை உபாயோபேயவாசியாகக் கொள்ளுமளவில் யோக்$_3$யதாநுகு$_3$ணமாக நாரஶப்$_3$த$_3$த்தை அசேதநங்களை ஒழிந்த சேதந வஸ்துக்களுக்கு வாசகமாகக் கொள்ளக்கடவது. 98. "नारस्त्विति सर्वपुंसां समूहः परिकथ्यते। गतिरालम्बनं तस्य तेन नारायणः स्मृतः॥" (நாரஸ்த்விதி ஸர்வ பும்ஸாம் ஸமூஹ: பரிகத்$_2$யதே। க$_3$திராலம்ப$_3$நம் தஸ்ய தேந நாராயணஸ் ஸ்ம்ருத:) என்றும், 99. "नारशब्देन जीवानां समूहः प्रोच्यते बुधैः। तेषामयन-भूतत्वान्नारायण इहोच्यते॥" (நாரஶப்$_3$தே$_3$ந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே பு$_3$தை$_4$:। தேஷாமயந பூ$_4$தத்வாந் நாராயண இஹோச்யதே॥) என்றும் இத்யாதி$_3$களிலே இவ்வர்த்த$_2$ம் சொல்லப்படாநின்றதிறே.

கர்மணிவ்யுத்பத்தி ஸித்$_3$த$_4$மான ப்ராப்யத்வத்துக்கு ஸங்கோசமில்லாமையாலே ஸர்வ ப்ரகார விஶிஷ்டமாயிருக்கையாலும், ப$_3$ந்து$_4$ லாப$_4$மும் ப்ராப்யமாயிருக்கையாலும், ஈஶ்வரனுடைய ஸர்வவித$_4$ ப$_3$ந்து$_4$த்வமும் இப்பத$_3$த்திலே சொல்லும்படியை அருளிச்செய்கிறார் 'எம்பிரான்' என்று தொடங்கி.

**மூ. 102. "எம்பிரானெந்தை" என்கையாலே, ஈஶ்வரனே எல்லாவுறவுமுறையுமென்று சொல்லும்.**

வ்யா—அதாவது-நாராயண ஶப்₃த₃ார்த்த₂த்தைஅநுஸந்தி₄க்கிற திருமங்கையாழ்வார் * "எம்பிரானெந்தையென்னுடைச்சுற்றமெனக்கர சென்னுடைவாணாள்" என்கையாலே, ஈஶ்வரனே இவ்வாத்மாக்களுக்கு ஸர்வவித₄ப₃ந்து₄வுமென்று இப்பத₃த்திலே சொல்லும்—என்கை.

'இப்படி ப₃ந்து₄பூ₄தனாய்க்கொண்டு, இத்தலைக்கு அவன் செய்யுமது எது?' என்ன, அருளிச்செய்கிறார் 'நாம் பிறர்க்கானவன்றும், அவன் நமக்காயிருக்கும்' என்று.

**சூ.103. நாம் பிறர்க்கான அன்றும் அவன் நமக்காயிருக்கும்.**

வ்யா:—அதாவது-நாம் தன்னோடு ஓட்டற்றுப் பிறர்க்கு நல்லராயிருந்த காலத்திலும், அவன் நமக்கு நல்லனாயிருக்கும்—என்கை.

'இப்படி நாம் அந்யபரரான அன்றும் நமக்கேயாயிருந்து அவன் செய்து போருமது தான் எது? என்ன, அருளிச்செய்கிறார் 'இராமடம்' என்று தொடங்கி.

**சூ.104. இராமடம் ஊட்டுவாரைப்போலே உள்ளே பதி கிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும்.**

வ்யா:—அதாவது-நேர்கொடுநேர் தங்கள் பக்கல் வந்து அபேக்ஷிதங்களை வாங்கி ஜீவியாதே து₃ர்மாநத்தாலே பட்டினியே திரியுமவர்களையும் விடமாட்டாமையாலே அசலறியாதபடி ராத்ரி மடத்திலே பு₄ஜிப்பிப்பாரைப்போலே தன்பக்கல் தலைசாயோம் என்று இச்சேதநர் ஸ்வாதந்த்ர்யமடித்துத்திரியாநிற்க,இவர்கள் கண்காணாதபடி அந்தராத்மாவாய்க்கொண்டு உள்ளே மறைந்திருந்து இவர்கள்ஸத்தையே தொடங்கி ரக்ஷித்துக்கொண்டு போரும்—என்கை.

* பெரிய திருமொழி 1-1-6.

*ஆக, இந்நாராயண பத₃த்தாலே கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யான ஈச்வரன் படியை அருளிச்செய்தாராயிற்று.*

*இனி, இதில் விப₄க்த்யம்சத்தாலே கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கிறபடியை அருளிச்செய்கிறார், 'ஆய என்கிற இத்தால்' என்று தொடங்கி.*

**மூ. 105. 'ஆய' என்கிற இத்தால் * "சென்றாற் குடையாம்" என்கிறபடியே எல்லா அடிமைகளும் செய்வேணுமென்று அபேக்ஷிக்கிறது.**

*வ்யா:-அதாவது—'ஆய' என்கிற இந்தச் சதுர்த்தி₂யாலே * "சென்றாற் குடையாம்" என்கிற பாட்டிற் சொல்லுகிற படியே திருவநந்தாழ்வானைப்போலே ஸர்வவித₄கைங்கர்யங்களும் செய்யவேணுமென்று அபேக்ஷிக்கிறது—என்கை.*

*'நமஸ்ஸாலே தனக்கென்ன ஒன்றை விரும்புகைக்கு ப்ராப்தியில்லாத அத்யந்த பாரதந்த்ர்யம் சொல்லியிருக்க, இக்கைங்கர்யத்தைத் தான் விரும்பி அபேக்ஷிக்கை ஸம்ப₄வியாது' என்று இருக்குமவர்கள் பண்ணும் ப்ரச்நத்தை அநுவதி₃க்கிறார் 'நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லையென்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கக் கூடுமோ வென்னில்' என்று.*

**மூ. 106. 'நமஸ்ஸாலே தன்னோடு உறவில்லை யென்று வைத்துக் கைங்கர்யத்தை ப்ரார்த்தி₂க்கக் கூடுமோ?' என்னில்;**

*அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் 'படியாய்க்கிடந்து' என்று தொடங்கி.*

**மூ. 107. / "படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே" என்கிறபடியே கைங்கர்ய ப்ரார்த்த₂னை வந்தேறி அன்று; ஸ்வரூப ப்ரயுக்தம்.**

---

* *முதல்திருவ 53.* /*பெருமாள் திருமொழி 4-9.*

வ்யா:— அதாவது— "படியாய்க்கிடந்து உன்பவளவாய் காண்பேனே" என்று, அத்யந்த பாரதந்த்ர்யத்தோடே கைங்கர்யப்ரார்த்தநையையும் சொல்லுகிறபடியே கைங்கர்ய ப்ரார்த்தநை-ஸ்வபோக்த்ருத்வரூப அஹங்காரப்ரயுக்தமாய்க் கொண்டு வந்தேறியானது அன்று. ஶேஷிக்கு அதிஶயத்தை விளைத்தல்லது தான் தரியாதபடியான தன் ஸ்வரூபத்தைப் பற்றி வந்தது—என்கை

உக்தத்தை ஹேதுவாகக்கொண்டு சதுர்த்தியின் கைங்கர்ய ப்ரார்த்தநாப்ரகாஶகத்வத்தை அருளிச்செய்கிறார் 'ஆகையால்' என்று தொடங்கி.

**மூ. 108. ஆகையால் *"வழுவிலா அடிமை செய்ய வேண்டும்நாம்" என்கிற ப்ரார்த்தநையைக்காட்டுகிறது.**

வ்யா:—அதாவது—கைங்கர்ய ப்ரார்த்தநை வந்தேறி அன்றிக்கே, ஸ்வரூபப்ரயுக்தமாகையாலே, * "வழுவிலா அடிமைசெய்யவேண்டும் நாம்" என்று, 'அடிமையில் ஒன்றும் நழுவாதபடி ஸகலகைங்கர்யங்களும் செய்யவேண்டும் நாம்' என்கிற ப்ரார்த்தநையை, இச்சதுர்த்தி ப்ரகாஶிப்பிக்கிறது-என்கை.

இனி, இந்தக் கைங்கர்ய ப்ரார்த்தநை இடைவிடாமல் நடக்கைக்கு உறுப்பான ப்ராப்யருசியுடையார்படியை அருளிச்செய்கிறார் 'கண்ணாரக்கண்டு' என்று தொடங்கி.

**மூ. 109. ||"கண்ணாரக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே காண்பதற்கு முன்பு உறக்கமில்லை. கண்டால் "ஸதா பஶ்யந்தி" ஆகையாலே உறக்கமில்லை.**

வ்யா;-அதாவது-||"இமையோர்கள்குழாம்,தொழுவதுஞ் சூழ்வதுஞ்செய் தொல்லைமாலைக் கண்ணாரக்கண்டு. கழிவ

* திருவாய் 3-3-1. || திருவிருத்தம்-97.

தோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதல்'' என்று 'நித்யஸூரிகளுடைய திரளானது நிரந்தரம் அநுப₄வம் பண்ணுகிற ஸர்வேஸ்வரனைக் கண்கள் நிறையும்படி கண்டொழியக் கழியாதபடியான காதலிலே நிலைநின்றவர்களுக்கும் கண்கள் உறங்குதலுண்டோ?' என்னுமாபோலே, விஷயத்தைக் காண்பதற்குமுன்பு ஜ்ஞாநஸங்கோசரூபமான உறக்கமில்லை; கண்டகாலத்தில் 100. "सदा पश्यन्ति' (ஸதா₃ பஶ்யந்தி) என்கிறபடியே ஸதா₃ அநுப₄வம் பண்ணுகையாலே உறக்கமில்லை—என்கை.

இன்னமும் ஒரு ஹேதுவினாலே இவனுக்கு உறக்கமில்லாமையை அருளிச்செய்கிறார் 'பழுதே' என்று தொடங்கி.

**சூ. 110, ‡"பழுதே பல பகலும் போயின"என்று இழந்த நாளுக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை.**

வ்யா:–அதாவது—‡"செங்கணடலோதவண்ணரடி அரவணைமேற்கண்டு தொழுதேன், பலபகலும் பழுதேபோயின வென்று அஞ்சி அழுதேன்'' என்று—'விஷயத்தைக்கண்டு அநுப₄வித்தவாறே இப்படி அநுப₄விக்கைக்கு உடலான அநேககாலமெல்லாம் வ்யர்த்த₂மே போய்விட்டதே!' என்று இழந்த நாளை நினைத்து க்லேபித்துக் கூப்பிடுகிறவனுக்கு மேலுள்ள நாளில் உறக்கம் வர வழியில்லை—என்கை.

இன்னமும் இவ்விஷயத்தில் அறிவுபிறந்தார்க்கு மறக்கப் போகாது' என்னுமத்தை இசைவிக்கிறார் 'அன்று நான்' என்று தொடங்கி.

**சூ, 111 †"அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன்'' என்றுநின்றார்களிறே.**

---

‡ முதல்திருவ 16. † திருச்சந்தவிருத்தம் 64.

வ்யா:—அதாவது—'அவன் என்னைப் பெறுகைக்காகத் திருப்பதிகளிலே நிற்பது இருப்பது கிடப்பதாகநிற்க. அக்காலத்தில் நான் ஜ்ஞாந லாப₄ரூபமான ஜந்மத்தையுடையனைகப் பெற்றிலேன்; அந்த ஜந்மமுண்டான பின்பு, அவனை ஒருகாலும் மறந்திலேன்' என்று சொல்லா நின்றார்களிறே—என்கை. ஆக, ப்ராப்ய வைலக்ஷண்ய ஜ்ஞாநம் பிறந்தார்படி இதுவாகையாலே, இந்தக் கைங்கர்ய ப்ரார்த்த₂னை இடைவிடாமல் நடக்கும் என்று கருத்து.

இனி, இந்தக்கைங்கர்யத்துக்கு தே₃ஶகாலாதி₃நியமமில்லாமையை அருளிச்செய்கிறார் 'இவ்வடிமைதான்' என்று தொடங்கி.

**மூ.112. இவ்வடிமைதான் †"ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி" என்கிறபடியே ஸர்வதே₃ஶ ஸர்வகால ஸர்வாவஸ்தை₂களிலும் அநுவர்த்திக்கும்.**

வ்யா:—அதாவது—இவ்வாத்மாவினுடைய ஸ்வரூபாநுரூபபுருஷார்த்த₂மான இந்தக் கைங்கர்யந்தான் †"ஒழிவில் காலமெல்லா முடனாய்மன்னி" என்று—"ஒழிவில்லாத காலமெல்லாம் ஸர்வதே₃ஶத்திலும் உடனாய் ஸர்வாவஸ்தை₂யிலும் பிரியாதுநின்று' என்கிறபடியே ஸர்வதே₃ஶத்திலும் ஸர்வகாலத்திலும் ஸர்வாவஸ்தை₂யிலும் நடந்துசெல்லும்—என்கை.

ப₄ார்யைக்கு மங்₃ளஸூத்ரத₄ாரணம் ப₄ர்த்தாவுக்கு அநந்யார்ஹையென்று காட்டுமாபோலே, திருமந்த்ரத₄ாரணம் சேதநர்க்கு ப₄க₃வத₃நந்யார்ஹத்வப்ரகாஶகம் என்னுமிடந்தோற்ற இத்தையொரு மங்க₃ளஸூத்ரமாக நிரூபித்தருளிச்செய்கிறார் 'எட்டிழையாய்' என்று தொடங்கி.

**மூ. 113. எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்களஸூத்ரம்போலே திருமந்த்ரம்,**

† திருவாய் 3-3-1.

வ்யா:— அதாவது-பதினறிழையாய் இரண்டு சரடா யிருக்கும் லௌகிகமான மங்க₃ளஸூத்ரம்போலன்றிக்கே, எட்டிழையாய் மூன்று சரடாயிருப்பதொரு மங்க₃ளஸூத்ரம் போலே, எட்டுத்திருவக்ஷரமாய் மூன்றுபத₃மாயிருக்கிறது இத்திருமந்த்ரம்—என்கை.

'இப்படி நிரூபித்துச்சொன்ன இத்தால் எவ்வர்த்த₂ம் சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்று தொடங்கி.

**மூ. 114. இத்தால், ஈஶ்வரன் ஆத்மாக்களுக்குப் பதியாய்நின்று ரக்ஷிக்கும் என்கிறது.**

வ்யா:-அதாவது-இத்தை மங்க₃ளஸூத்ரமாகச்சொன்ன இத்தால், ஈஶ்வரன் இத்தோடு அந்வயமுடைய ஆத்மாக் களுக்குப் பதியாய் நின்று கொண்டு ரக்ஷிக்கும்—என்று சொல்லுகிறது—என்கை.

இனி, இம்மந்த்ரத்தால் ப்ரதிபாதி₃த்த அர்த்த₂த்தை ஸங்க்₃ரஹித்துச்சொல்லி இத்தை நிக₃மித்தருளுகிறார் 'ஆக, திருமந்த்ரத்தால்' என்று தொடங்கி.

**மூ.115. ஆக,திருமந்த்ரத்தால் 'எம்பெருமானுக்கே உரியேனான நான் எனக்கு உரியனன்றிக்கே ஒழிய வேணும்; ஸர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாகவேணும்' என்றதாயிற்று.**

பிள்ளைலோகாசார்யர் திருவடிகளே சரணம்.
திருமந்த்ரப்ரகரணம் முற்றிற்று.

வ்யா:—'ஆக'என்றது, கீழ்பரக்க அருளிச்செய்த எல்லா வற்றையும் தொகுத்து அருளிச்செய்கிறார் என்னுமிடந் தோற்ற. ( எம்பெருமானுக்கே உரியேனான நான் ) இதில்

'எம்பெருமானுக்கு' என்று சதுர்த்₂யந்தமான ப்ரத₂மாக்ஷரத்தில் அர்த்த₂த்தையும், அவதா₄ரணத்தாலே மத்₄யமாக்ஷரத்தின் அர்த்த₂த்தையும் 'உரியேனான் நான்' என்று த்ருதீயாக்ஷரத்தில் அர்த்த₂த்தையும் சொல்லுகையாலே.ப்ரத₂மபதா₃ர்த்த₂த்தை ஸங்க்₃ரஹித்தபடி. (எனக்கு உரியனன்றிக்கே ஒழிய வேணும்) இதில் 'எனக்குரியன்' என்று ஷஷ்ட்₂யந்தமான மகாரார்த்த₂த்தையும் 'அன்றிக்கேயொழிய' என்கையாலே நகாரார்த்த₂த்தையும், 'வேணும்'என்கையாலே இவ்வர்த்த₂ம் சேதநனுக்கு ப்ரார்த்த₂நீயம் என்னுமத்தையும் ப்ரதிபாதி₃க்கையாலே மத்₄யமபதா₃ர்த்த₂த்தைஸங்க்₃ரஹித்தபடி. (ஸர்வஶேஷியான நாராயணனுக்கே எல்லா அடிமைகளும் செய்யப் பெறுவேனாகவேணும்) இதில் 'ஸர்வஶேஷியான நாராயணனுக்கே' என்று கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யையும் கைங்கர்ய ப்ரார்த்த₂நா ப்ரகாஶிகையான சதுர்த்தி₂யையும் 'எல்லா அடிமைகளும் செய்யப்பெறுவேனாக வேணும்' என்று கைங்கர்ய ப்ரார்த்த₂நா ப்ரகாரத்தையும் சொல்லுகையாலே த்ருதீய.பதா₃ர்த்த₂த்தை ஸங்க்₃ரஹித்தபடி. (என்றதாயிற்று) என்றது—என்று சொல்லிற்றாயிற்று—என்கை.

விஸ்தரேண அருளிச்செய்தத்தை மீளவும் இப்படி ஸங்க்₃ரஹித்தருளிச்செய்தது இத்திருமந்த்ரார்த்த₂த்தை எல்லாருமறிந்து அநுஸந்தி₄க்கைக்காக. ஆகையாலே எல்லார்க்கும் இவ்வர்த்த₂ம் எப்போதும் அநுஸந்தே₄யம்.

திருமந்த்ரப்ரகரணம் வ்யாக்₂யானம் முற்றிற்று.
ஜீயர் திருவடிகளே ஶரணம்.



# முமுக்ஷுப்படி த்₃வயப்ரகரணம்

## வ்யாக்₃யாந அவதாரிகை

ப்ரத₂ம ரஹஸ்யமான திருமந்த்ரத்தினுடைய அர்த்த₂த்தை அருளிச்செய்த அநந்தரம், அதில் மத்₄யமபத₃த்தாலும் த்ருதீய பத₃த்தாலும் ப்ரதிபாதி₃க்கப்பட்ட உபாயோபேயங்களை விஶத₃மாக ப்ரதிபாதி₃யாநின்றுள்ள த்₃வயத்தினுடைய அர்த்த₂த்தை அருளிச்செய்கிறார்.

'முன்பு அருளிச்செய்த மூன்று ப்ரப₃ந்த₄ங்களிலும் திருமந்த்ராநந்தரம் சரமஶ்லோகத்தை அருளிச்செய்து பின்பு த்₃வயத்தை அருளிச்செய்தவர், இப்போது த்₃வயத்தை முந்துற அருளிச்செய்வான் என்?' என்னில்,-இரண்டு ப்ரகாரமும் அருளிச்செய்யலாயிருக்கையாலே. ஆச்சான்பிள்ளை, சீயர் முதலானாரும் இந்த ப்ரகாரமிறே அருளிச்செய்தது.

'இவ்விரண்டு ப்ரகாரந்தனக்கும் கருத்து என்?'-என்னில், சரமஶ்லோகம் முன்னாக த்₃வயத்தைச்சொல்லுகிறது—வித்₄யநுஷ்டா₂ந ரூபங்களாயிருக்கையாலே விதி₄முன்னாக அநுஷ்டா₂நத்தைச் சொல்லுகை ப்ராப்தமாயிருக்கையாலும், திருமந்த்ரம் ப்ராப்யபரமாய் சரமஶ்லோகம் ப்ராபகபரமாய் த்₃வயம் உப₄யத்தினுடையவும் அநுஷ்டா₂ந ப்ரதிபாத₃கமாயிருக்கையாலும். த்₃வயம் முன்னாகச் சரமஶ்லோகத்தைச் சொல்லுகிறது-திருமந்த்ரத்தில் மத்₄யமத்ருதீயபத₃ங்களுக்கு வாக்யத்₃வயம் விவரணமாய், அதுதனக்குச் சரமஶ்லோகத்தில் அர்த்த₄ த்₃வயம் விவரணமாயிருக்குமாகாரத்தாலே. ஆனபின்பு, இரண்டு ப்ரகாரமும் அநுஸந்தி₄க்கத் தட்டில்லை. அதில் ஒரு ப்ரகாரத்தை மூன்று ப்ரப₃ந்த₄த்திலும் அருளிச்செய்தவராகையாலே, மற்றை ப்ரகாரத்தையும் அருளிச்செய்யவேணுமென்று திருவுள்ளம்பற்றி, திருமந்த்ரார்த்த₂ம் அருளிச்செய்த அநந்தரம் த்₃வயார்த்த₂த்தை அருளிச்செய்கிறார்.

அவதாரிகை முற்றிற்று.

*அதில் ப்ரத₂மத்திலே, வைஷ்ணவனுயிருப்பானெருவனுக்கு ஸ்வாதி₄காரார்த்த₂மாக அவஶ்யாபேக்ஷிதமாயுள்ளவற்றை, ஸங்க்₃ரஹமாக அருளிச்செய்கிருர் 'புறம்புண்டானபற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும்' என்றுதொடங்கி ஒரு சூர்ணையாலே.*

**மூ. 116. புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனுய் கு₃ணுநுப₄வ கைங்கர்யங்களே பொழுது போக்காகையும், இப்படி இருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஏற்றமறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும் த்₃வயத்திலும் நியதனுகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும், ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனுய்ப் போருகையும், ஜ்ஞாநமும், விரக்தியும், ஶாந்தியும் உடையனுயிருக்கும் பரமஸாத்விகனேடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதி₄காரிக்கு அவஶ்யாபேக்ஷிதம்.**

வ்யா:—*புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடேவிடுகையாவது-101.*"पितरं मातरं दारान्"(பிதரம் மாதரம் தா₃ராந்) *இத்யாதி₃ப்படியே, பா₃ஹ்யவிஷயஸங்க₃ங்களையடைய மறுவலிடாதபடி ஸவாஸநமாகவிடுகை. எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையாவது—வேறென்று தஞ்சமென்கிற நினைவு கலசாதபடி, நிருபாதி₄க ரக்ஷகனுன் ஸர்வேஶ்வரனையே தஞ்சமாக ஸ்வீகரிக்கை. இவ்விரண்டு வாக்யத்தாலும், சரமஶ்லோகத்தில் பூர்வார்த்த₄த்தில் அர்த்த₂த்தைச் சொல்லுகிறதாகவுமாம். எங்ஙனேயென்னில்?* 'புறம்புண்டான பற்றுக்களையடைய' *என்று—*'ஸர்வத₄ர்மாந்' *என்கிற பத₃த்தில் அர்த்த₂த்தையும்,* 'வாஸனையோடேவிடுகையும்'

என்று-'பரித்யஜ்ய' என்கிற பத$_3$த்தில் அர்த்த$_2$த்தையும், 'எம் பெருமானே' என்று-'மாம்' என்கிற பத$_3$த்தில் அர்த்த$_2$த்தையும். 'ஏ' என்று ஏவகாரத்தாலே-ஏகபத$_3$த்தில் அர்த்த$_2$த்தையும். 'தஞ்சம்'என்கையாலே-'ஶரண' பத$_3$த்தில் அர்த்த$_2$த்தையும். 'பற்றுகையும்'என்று-'வ்ரஜ' பத$_3$த்தில் அர்த்த$_2$த்தையும். அடைவே சொல்லுகையாலே.

பேறுதப்பாதென்று துணிந்திருக்கையாவது— உபாய ப$_2$ல்கு$_3$த்வமும். உத்$_3$தே$_3$ஶ்ய து$_3$ர்லப$_4$த்வமும். ஸ்வக்ருத தோ$_3$ஷபூ$_4$யஸ்த்வமும் அடியாக வரும் ஶங்காத்ரயமுமின்றிக்கே ப$_2$லம் தப்பாமல் ஸித்$_3$தி$_4$க்குமென்று விஶ்வஸித்திருக்கை. பேற்றுக்கு த்வரிக்கையாவது,—இப்படி விஶ்வஸித்து 'பேறுஸித்$_3$தி$_4$க்தபோது காண்கிறோம் என்று இருக்கையன்றிக்கே, ‡"மாகவைகுந்தங் காண்பதற்கென் மனமேகமெண்ணும்" *"தாவி வையங்கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளுங்காலமின்னங் குறுகாதோ" என்கிறபடியே, க்ரமப்ராப்தி பற்றுமற் பதறுகை. ஆக இவை இரண்டாலும் உபாயோபேயாதி$_4$காராபேக்ஷிதங்களான மஹாவிஶ்வாஸத்தையும். ப்ராப்யத்வரையையும் சொல்லுகிறது.

இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் கு$_3$ணாநுப$_4$வ கைங்கர்யங்களே பொழுது போக்காகையாவது-பரமபத$_3$த்திலேபோய் ப$_4$க$_3$வத$_3$நுப$_4$வ கைங்கர்யங்களைப் பண்ணுகையாகிற பேற்றில் த்வரை நடவா நிற்கச்செய்தேயும், இஶ்ஶரீரத்தோடே இருக்கும் நாள் /"தானுகந்தவூர்" என்கிறபடியே ஸர்வேஶ்வரன் உகந்து வர்த்திக்கிற தி$_3$வ்யதே$_3$ஶங்களிலே ||"கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லை" என்று மண்டுகையாகிற ப்ராவண்யத்தையுடையனாய். அவ்வோ தி$_3$வ்யதே$_3$ஶங்களிலே நிற்கிறவனுடைய கல்யாணகு$_3$ணாநுப$_4$வமும். அதடியாகக்

‡ திருவாய் 9-3-7. * திருவாய் 6-9-9. / திருநெடு 6.
|| திருக்குறு 19.

கரணத்ரயத்தாலும் அவன்விஷயத்திற் பண்ணும் கைங்கர்
யமுமே காலக்ஷேபவிஷயமாம்படி யிருக்கை.

இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றம் அறிந்து
உகந்திருக்கையாவது-கீழ்ச்சொன்ன இவ்வாகாரங்களெல்லாம்
உடையராயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களைக்கண்டால், இந்த
ளத்திலே தாமரை பூத்தாற்போலே இந்த விபூ$_4$தியிலே
இங்ஙனேயும் சிலருண்டாவதேயென்று அவர்கள் வைப$_4$
வத்தை அறிந்து அவர்களளவில் ப்ரீதியுக்தனாயிருக்கை.
கீழ்ச்சொன்னவையெல்லாம் உண்டானாலும் உண்டாக
அரிதாயிருப்ப தொன்றிறே இது.

திருமந்த்ரத்திலும் த்$_3$வயத்திலும் நியதனாகையாவது—
மந்த்ராந்தரங்களினுடைய அருகும் மறந்தும் போகாதே,
த்யாஜ்ய உபாதே$_3$யங்களைத் தெளிய அறிவிக்கும் திரு
மந்த்ரத்திலும் அதின் அர்த்த$_2$த்துக்கு விவரணமான த்$_3$வ
யத்திலும் நிஷ்ட$_2$னாயிருக்கை.

ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையாவது,-கீழ்ச்சொன்ன
ஆகாரத்தையெல்லாம் உபதே$_3$ஶத்தாலே தனக்கு உண்
டாக்கின ஆசார்ய விஷயத்தில் 102 **"यस्य देवे परा भक्तिर्यथा देवे
तथा गुरौ"** (யஸ்ய தே$_3$வே பரா ப$_4$க்திர் யதா$_2$ தே$_3$வே ததா$_2$
கு$_3$ரௌ) என்கிறபடியே ப்ரேமம் அதிஶயித்திருக்கை.

ஆசார்யன் பக்கலிலும், எம்பெருமான் பக்கலிலும் க்ருத
ஜ்ஞனாய்ப் போருகையாவது.—நித்யஸம்ஸாரியான தன்னை,
நித்யஸூரிகள்பேற்றுக்கு அர்ஹனாம்படி இரும்பைப்
பொன்னாக்குவாரைப்போலே திருத்தின ஆசார்யன் பக்கலி
லும். அத்$_3$வேஷாதி$_3$களை விளைத்துக்கொண்டுவந்து ஆசார்ய
விஷயத்தோடே சேர்த்த எம்பெருமான் பக்கலிலும் உபகார
ஸ்ம்ருதி உடையனாய்ப்போருகை.

ஜ்ஞானமும், விரக்தியும், ஶாந்தியுமுடையனாயிருக்
கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையாவது-
தான்கலங்கினாலும் கலங்காமல் நோக்குகைக்கு உறுப்பாகவும்

கீழ்ச்சொன்ன ஆகாரங்கள் தனக்கு வர்த்தி₄க்கைக்கு உறுப்பாகவும் தத்வயாத₂ாத்ம்ய ஜ்ஞாநமும். அப்ராப்தவிஷய விரக்தியும். இவைதானிரண்டும் நமக்குண்டென்று இறுமாப்பற்றிருக்கையாகிற ஶாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸத்வநிஷ்ட₂னாயிருப்பானொரு பா₄க₃வதனோடேகூட வஸித்துப்போருகை.

'வைஷ்ணவாதி₄காரிக்கு அவ்ஶ்யாபேக்ஷிதம்' என்றது—இவையித்தனையும் வைஷ்ணவனென்றிருப்பானொரு அதி₄காரிக்கு அவஶ்யம் உண்டாகவேணும்—என்கை.

இப்படியிருக்கும் இவனுக்கு அநுஸந்த₄ாந விஷயம் வகுத்து அருளிச்செய்கிறார் மேல் 'இந்த' என்று தொடங்கி.

**மூ. 117. இந்த அதி₄காரிக்கு ரஹஸ்யத்ரயமும் அநுஸந்தே₄யம்.**

வ்யா:-அதாவது-கீழ்ச்சொன்ன ஆகாரங்களையுடையனாயிருக்கும் இவ்வதி₄காரிக்கு, அந்த ஜ்ஞாநாநுஷ்ட₂ாநங்களுக்கு வர்த்த₄கமான ரஹஸ்யத்ரயமும் அநுஸந்த₄ாந விஷயமாக வேணும்—என்கை.

இனி. த்₃வயத்திற் சொல்லுகிற அர்த்த₂த்தின் வீறுடைமையை அறிவிக்கைக்காக, ஶாஸ்த்ரம் திருமந்த்ரம் சரமஶ்லோகம் இவற்றிற் சொல்லுகிற ப்ரகாரங்களை அருளிச்செய்துகொண்டு சென்று, பின்னை அதுதன்னை அருளிச்செய்கிறார் 'எல்லா ப்ரமாணங்களிலும்' என்று தொடங்கி.

**மூ. 118. எல்லா ப்ரமாணங்களிலும் தே₃ஹத்தாலே பேறென்கிறது; திருமந்த்ரத்தில் ஆத்மாவாலே பேறென்கிறது; சரமஶ்லோகத்தில் ஈஶ்வரனாலே பேறென்கிறது. த்₃வயத்தில் பெரியபிராட்டியாராலே பேறென்கிறது.**

வ்யா:-அதாவது-சேதநனுடைய விஶிஷ்டவேஷத்திலே நோக்கான ஸகல ஶாஸ்த்ரங்களிலும், ஸாத₄நாநுஷ்ட₂ாந

யோக்₃யமான தே₃ஹத்தாலே இவனுக்குப் புருஷார்த்த₂ லாப₄ம் என்கிறது. நிஷ்க்ருஷ்டவேஷத்திலே நோக்கான திரு மந்த்ரத்தில், இவன் ஸ்வரக்ஷணத்தில் நின்றும் கைவாங்கினு லொழிய ஈஶ்வரனுடைய ரக்ஷகத்வம் ஜீவியாமையாலே, தத்ப்ரவ்ருத்தி விரோதி₄யான ஸ்வப்ரவ்ருத்தியை விட்டிருக் கும் ஆத்மாவாலே புருஷார்த்த₂லாப₄ம் என்கிறது. ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்திலே நோக்கான சரமஶ்லோகத்தில், இவ னுடைய ஸ்வீகாரமும் மிகையாம்படி, தானே கைக்கொண்டு ப்ராப்திப்ரதிப₃ந்த₄க ஸகலபாபங்களையும் தள்ளிப்போகட்டு, தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்ளும் ஈஶ்வரனாலே புரு ஷார்த்த₂லாப₄ம் என்கிறது. ஈஶ்வரனுடைய லக்ஷ்மீவிஶிஷ்ட வேஷத்திலே நோக்கான த்₃வயத்தில், விஶேஷணபூ₄தையான பெரியபிராட்டியாராலேபுருஷார்த்த₂லாபமென்கிறது-என்கை.

உபாயம் ஈஶ்வரனாயிருக்க, இவளாலே பேறுகையாவ தென்? என்கிற ஶங்கையிலே, அருளிச்செய்கிறார் 'பெரிய பிராட்டியாராலே' என்று தொடங்கி.

**மூ.119. பெரியபிராட்டியாராலே பேறுகையாவது- இவள் புருஷகாரமானாலல்லது ஈஶ்வரன் கார்யஞ் செய்யானென்கை.**

வ்யா:—அதாவது-இஷ்டாநிஷ்ட ப்ராப்தி பரிஹாரங்கள் இரண்டும் பண்ணுவான் ஈஶ்வரனேயாயிருக்கப் பெரிய பிராட்டியாராலே இவனுக்குப் பேறுகை ஆகிறது—இவ னுடைய அபராத₄த்தைப் பாராதே ரக்ஷிக்கும்படி இவள் புருஷகாரமானால் ஒழிய, ஈஶ்வரன் இவன்கார்யஞ்செய்யான் என்றபடி—என்கை.

கீழ், ஸாமாந்யத்திலே வைஷ்ணவாதி₄காரிக்கு அபேக்ஷி தங்களிறே சொல்லிற்று; விஶேஷித்து த்₃வயத்துக்கு அதி₄ காரியாமவனுக்கு அபேக்ஷிதத்தை அருளிச்செய்கிறார் 'த்₃வயத்துக்கு' என்று தொடங்கி.

**மூ. 120, த்$_3$வயத்துக்கு அதி$_4$காரி ஆகிஞ்சந்யமும், அநந்யக$_3$தித்வமும் உடையவன்.**

வ்யா:—*அதாவது—ஸித்$_3$தே$_4$ாபாயவரண ப்ரதிபாத$_3$க மான த்$_3$வயத்துக்கு அதி$_4$காரி 103.* "अकिञ्चनोऽगतिः त्वमेवो-पायभूतो मे भव" (அகிஞ்சநோऽக$_3$தி:| த்வமேவோபாயபூ$_4$தோ மே ப$_4$வ) *104.* "अकिञ्चनोऽनन्यगतिः शरण्य" (அகிஞ்சநோऽநந்யக$_3$திஶ் ஶரண்ய)*என்றும், * "புகலொன்றில்லா அடியேன்" என்றும் சொல்லுகிறபடியே ஆகிஞ்சந்யமும் அநந்யக$_3$தித்வமும் ஆகிற இரண்டும் உடையவன்—என்கை.*

*'இவையிரண்டின் வேஷமுந்தான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் 'இவையிரண்டும்' என்று தொடங்கி.*

**மூ. 121. இவை இரண்டும் ப்ரபந்ந பரித்ராணத்திலே சொன்னோம்.**

வ்யா:—*அதாவது–உபாயாந்தர ராஹித்யமாகிற ஆகிஞ்சந்யத்தின் வேஷமும், ரக்ஷகாந்தர ராஹித்யமாகிற அநந்யக$_3$தித்வத்தின் வேஷமும் ப்ரபந்ந பரித்ராணமாகிற ப்ரப$_3$ந்த$_4$த்திலே ஸுஸ்பஷ்டமாகச் சொன்னோம். அதிலே கண்டுகொள்வது—என்கை.*

*இனி, த்$_3$வயத்துக்கு வாக்யார்த்த$_2$ம் அருளிச்செய்கிறார் 'இதில் முற்கூற்றால்' என்று தொடங்கி.*

**மூ.122.இதில் முற்கூற்றால், பெரியபிராட்டியாரை முன்னிட்டு ஈஶ்வரன்திருவடிகளை உபாயமாகப் பற்றுகிறது; பிற்கூற்றால் அச்சேர்த்தியிலே அடிமையையிரக்கிறது.**

வ்யா:-*அதாவது-இந்த த்$_3$வயத்தில் பூர்வக$_3$ண்ட$_3$த்தாலே 'ஸ்ரீமத்' என்று பெரியபிராட்டியாரை முன்னிட்டு,'நாராயண*

---

* *திருவாய் 6-10-10.*

சரணௌ' என்று ஈஶ்வரன் திருவடிகளை 'ஶரணம் ப்ரபத்₃யே' என்று உபாயமாகப் பற்றுகிறது; உத்தரக₂ண்ட₃த்தாலே 'ஶ்ரீமதே' என்று பெரியபிராட்டியாரும் அவனுமான சேர்த்தியிலே. 'நாராயணாய' என்கிற சதுர்த்தி₂யாலே கைங்கர்யத்தை அர்த்தி₂க்கிறது—என்கை. 'நமஸ்ஸு' கைங்கர்ய விரோதி₄நிவ்ருத்தி ப்ரதிபாத₃கமாகையாலே. 'அடிமையை இரக்கிறது' என்ற இதிலே அந்தர்ப்₄தம்.

இனி, ப்ரதிபத₃மும் அர்த்த₂மும் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி. ஶ்ரீமத்பத₃ார்த்த₂மும் அருளிச்செய்ய உபக்ரமிக்கிறார் 'ஶ்ரீ என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம்' என்று.

## சூ. 123. ஶ்ரீ என்று பெரியபிராட்டியாருக்குத் திருநாமம்.

வ்யா:—ஶ்ரீஶப்₃த₃ம் ஸம்பத₃ாதி₃களுக்கும் வாசகமாக லோகத்திலே நடந்துபோரக் காண்கையாலே, அத்தை வ்யாவர்த்திக்கைக்காக 'ஶ்ரீ' என்கிற இது பெரியபிராட்டியார்க்குத் திருநாமம் என்கிறார். ஆகையிறே 'லக்ஷ்மீ: பத்₃மாலயா பத்₃மா கமலா ஶ்ரீர் ஹரிப்ரியா'' என்று திருநாமங்களோடே ஸஹபடி₂தமாயிற்று. இதுதான் எல்லாத் திருநாமங்கள்போலன்றிக்கே 105.''श्रीरिति प्रथमं नाम लक्ष्म्याः''(ஶ்ரீரிதி ப்ரத₂மம் நாம லக்ஷ்ம்யா:)எனகிறபடியே இவளுக்குப்ரத₂மாபி₄தா₄நமாயிருக்கும். 106. ''अ इति भगवतो नारायणस्य प्रथमाभिधानं'' (அ இதி ப₄க₃வதோ நாராயணஸ்ய ப்ரத₂மாபி₄தா₄நம்) என்று அகாரம் ஈஶ்வரனுக்கு ப்ரத₂மாபி₄தா₄நமானாற்போலேயாயிற்று. இவளுக்கும் இது ப்ரத₂மாபி₄தா₄நமாயிருக்கும்படி. அது, அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு ஏகாந்தமான ஸ்வபா₄வங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும்; இது இவளுடைய புருஷகாரத்வத்துக்கு ஏகாந்தமான ஸ்வபா₄வங்களைச் சொல்லக்கடவதாயிருக்கும்.

இனி, இந்த ஸ்ரீஶப்₃த₃த்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்வதாக ப்ரஸ₂மம் இதன்மேல் வந்த வ்யுத்பத்தித்₃வயத்தை அருளிச்செய்கிறார் 'ஸ்ரீயதே, ஶ்ரயதே' என்று.

மூ. 124. ஸ்ரீயதே, ஶ்ரயதே.

வ்யா:-அதாவது-"ஶ்ரிஞ் ஸேவாயாம்"என்கிறத₄ாதுவிலே 'ஸ்ரீயத இதி-ஶ்ரீ:, ஶ்ரயத இதி-ஸ்ரீ:'என்று ஸித்₃த₄மான கர்மணி வ்யுத்பத்தியையும் கர்த்தரிவ்யுத்பத்தியையும் சொன்னபடி.

இவ்யுத்பத்தித்₃வயத்துக்கும் அர்த்த₄ம் அருளிச்செய்கிறார் 'இதுக்கு அர்த்த₂ம்' என்று தொடங்கி.

**மூ.125. இதுக்கு அர்த்த₂ம்-'எல்லார்க்கும் இவளைப் பற்றி ஸ்வரூப லாப₄மாய், இவள் தனக்கும் அவனைப்பற்றி ஸ்வரூப லாப₄மாயிருக்கும்' என்று.**

வ்யா:—அதாவது-இவ்வுப₄யவ்யுத்பத்திக்கும் அர்த்த₂ம்-'ஸ்ரீயதே' என்று எல்லாராலும் ஸேவிக்கப்படாநின்றாள் என்கையாலே ஸகல சேதநர்க்கும் இவளைப்பற்றித் தங்களுடைய ஶேஷத்வரூப ஸ்வரூபலாப₄மாய், "ஶ்ரயதே' என்று ஈஶ்வரனை ஸேவியாநின்றாள் என்கையாலே, இவள் தனக்கும் ஈஶ்வரனைப்பற்றித் தன்னுடைய ஸ்வரூபலாப₄மாயிருக்குமென்று—என்கை. இவள் தனக்கு, சேதநவிஷயத்தில் ஶேஷித்வமும் ஈஶ்வர விஷயத்தில் ஶேஷத்வமும் என்றும் உண்டாயிறே யிருப்பது. ஆகையால், இந்த ஸேவ்யத்வ ஸேவகத்வங்கள் இரண்டும் இவளுக்கு நித்யமாய்ச் செல்லாநிற்கும்.

'ஈஶ்வரனுக்கு உபாயத்வமும் உபேயத்வமுமாகிறஆகார த்₃வயம் உண்டானாற்போலே, இவளுக்கும் புருஷகாரத்வமும் ப்ராப்யத்வமுமாகிற ஆகாரத்₃வயமும் உண்டாகையாலே. இதில் எவ்வாகாரத்தை நினைத்து இவனை இப்போதுசொல்லு

கிறது?' என்ன அருளிச்செய்கிறார் 'இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக' என்று.

**மூ. 126. இப்போது இவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக.**

வ்யா:— 'புருஷகாரமாக' என்கையாலே உபாயவஸ்து விலக்ஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு, இவளுக்கும் உபாயத்வத்தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்.

'ஈஶ்வரனுடைய நாரயணத்வ ப்ரயுக்தமான ஸ்வாபாவிக ஸம்பந்தாதி ஜ்ஞானத்தை உடையனாய்க்கொண்டு, அவனை ஆஶ்ரயிக்கிற இச்சேதநனுக்கு இவளைப் புருஷகாரமாக முன்னிடவேண்டுகிறதுதானென்?' என்ன, அருளிச்செய்கிறார் 'நீரிலே' என்று தொடங்கி.

**மூ. 127. நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தால் சீற்றம் பிறந்தால் பொறுப்பது இவளுக்காக.**

வ்யா:-அதாவது-சீதளமான ஜலத்திலே, சென்று அணுக வொண்ணாதபடியான நெருப்புக் கிளருமாபோலே. 107.“सुहृदं सर्वभूतानां” (ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்) 108. “समोऽहं सर्वभूतेषु” (ஸமோऽஹம் ஸர்வபூதேஷு) என்கிறபடியே, ஸர்வபூத ஸுஹ்ருத்த்வம், ஸமாஶ்ரயணீயத்வே ஸமத்வமாகிற ஸ்வபாவ விஶேஷங்களாலே ப்ரஸந்நமாய்க் குளிர்ந்திருக்கிற திருவுள்ளத்திலே109“परिपूर्णागसि जने हितस्रोतोवृत्त्या भवति च कदाचित् कलुषधीः ॥” (பரிபூர்ணாகஸி ஜநே ஹிதஸ்ரோதோ வ்ருத்த்யா பவதி ச கதாசித் கலுஷதீ:) என்கிறபடியே சேதநன் தீரக்கழியப்பண்ணின அபராதமடியாக 110 “क्षिपामि” (க்ஷிபாமி) 110*“न क्षमामि” (ந க்ஷமாமி) என்னும்படியான சீற்றம் பிறந்தால் அவ்வபராதத்தைப் பொறுப்பது. 111“किमेतन्निर्दोषः क इह जगति”(கிமேதந் நிர்த்தோஷ:க இஹ ஜகதி) இத்யாதிப்படியே

தன்னுடைய உடதே₃ஶாதி₃களாலே அச்சிற்றத்தையாற்றி த₃யையை ஜநிப்பிக்கும் இவளுக்காக-என்கை. ஆகையாலே ஸம்ப₃ந்த₄ ஜ்ஞாநம் பிறந்தவனுக்கும் அபராத₄ ப₄யத்தாலே புருஷகார புரஸ்கரணம் அபேக்ஷிதமென்று கருத்து.

'இத்தலையிற் கார்யம் ஏறிட்டுக்கொண்டும் அத்தலையை வஶீகரித்தும் இரண்டு தலையையும் பொருத்துகைக்கு இவள் தான் கண்ணழிவற்ற புருஷகாரமோ?' என்ன, அருளிச் செய்கிறார் 'இவள் தாயாய்' என்று தொடங்கி.

**ஸூ. 128. இவள் தாயாய் இவர்கள் க்லேஶம் பொறுக்கமாட்டாதே, அவனுக்குப் பத்நியாய் இனிய விஷயமாயிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம்.**

வ்யா:—அதாவது- 112. "त्वं माता सर्वलोकानां" (த்வம் மாதா ஸர்வலோகாநாம்)என்றும்,113"अखिलजगन्मातरं"(அகி₂ல ஜக₃ந்மாதரம்) என்றும் சொல்லுகிறபடியே இச்சேதநர்க்கு இவள் மாதாவாய். * "தந்தம் மக்களழுதுசென்றால் தாய்மாராவார் தரிக்ககில்லார்" என்கிறபடியே அந்த ஸம்ப₃ந்த₄ மடியாக இவர்களுடைய க்லேஶங்கண்டால் ஸஹிக்க மாட்டாதே. 114. "विष्णुपत्नी" (விஷ்ணுபத்நீ) என்கிறபடியே அவனுக்குப் பத்நியாய். †"பித்தர் பனிமலர்மேற்பாவைக்கு" என்கிறபடியே அவன் தன் வைலக்ஷண்யத்தைக் கண்டு பிச்சேறித் தன்சொல்வழி நடக்கும்படி அபி₄மதவிஷயமாயிருக்கையாலே, கண்ணழிவற்ற புருஷகாரம்—என்கை.

'எல்லாம்செய்தாலும் நிரங்குஶஸ்வதந்த்ரனான ஈஶ்வரன், சேதநருடைய அபராத₄ங்களை நிறுத்து அறுத்துத் தீர்த்துவன் என்று நிற்குமளவில், இவளாலே பெறுப்பிக்கப் போமோ?' என்ன, அருளிச்செய்கிறார் 'திருவடியை' என்று தொடங்கி.

* பெரியாழ்திரு 2-2-3. † திருநெடு-18.

மூ. 129. திருவடியைப் பொறுப்பிக்குமவள், தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கச் சொல்ல வேண்டாவிறே.

வ்யா:-அதாவது-தன்னைப் பத்துமாஸம் தர்ஜநபர்த்ஸநம் பண்ணின அந்த ராக்ஷஸிகளுடைய அபராதங்களைக் கணக்கிட்டுச் சித்ரவதம் பண்ண உத்யோகித்து நின்ற சொல் மிறுங்களுன திருவடியையுமுட்பட 115"கः குப்யேத்"(க: குப்யேத்) என்றும் 116. "ந கஶ்சிந்நாபராத்யதி" (ந கஶ்சிந்நாபராத்யதி) என்றும் இத்யாதி உபதேஶத்தாலே பொறுப்பிக்குமவள். *"மலராள் தனத்துள்ளான்" என்றும். ||"மாமலர்மங்கை மணநோக்கமுண்டான்" என்றும். ‡"அல்லிமலர்மகள் போக மயக்குக்களாகியும் நிற்கும்" என்றும் சொல்லுகிறபடியே தன் போக்யதையிலே குமிழிநீருண்டு. /"நின்னன் பின் வழி நின்று சிலைபிடித்து எம்பிரானேக" என்கிறபடியே 'மாயாம்ருகத்தின் பின்னே போ' என்னிலும் விளைவது அறியாதே அதன் பின்னே போம்படி தன் சொல்வழி வருமவனைப் பொறுப்பிக்கவல்லளென்னுமிடம் கிம்புநர்ந்யாய ஸித்தமிறே—என்கை. [†"செய்தகவினுக்கில்லை கைம்மாறு" என்னும்படி இரண்டு தலைக்குந் தலைதடுமாருக உபகரித்துத் தன் சொல்வழி போகவேண்டும்படியான திருவடியோடே மறுதலி(லை)க்குமவள் §"தான் முயங்கும்" எனனும்படியான போக்யதைக்குத் தோற்று 'எத்தைச் செய்வோம்' என்று தலைதடுமாறி /"நின்னன்பின் வழிநின்று" f"அதனின்பின்னே படர்ந்தான்" என்னும்படி விளைவதறியாதே புறுவலுக்குத் தோற்றுச் சொல்வழி போமவனைப் பொறுப்பிக்குமென்னுமிடஞ் சொல்லவேண்டாவிறே] என்று இது தன்னை இவர் திருத்தம்பியாரும் அருளிச்செய்தாரிறே.

---

* மூன்-திரு 3. || பெரியதிரு 8-10-1. ‡ திருவாய் 3-10-8. /பெரியாழ்திரு3-10-7. †பெரியதிரு5-8-2. §மூன்-திருவ100. f பெரியதிரு 2-5-6.

ஆக, ஸ்ரீமத்பத₃த்தில் ப்ரக்ருத்யம்ஶத்தை அருளிச்செய்தார் கீழ்; ப்ரத்யயாம்ஶத்தை அருளிச்செய்கிறார் மேல்; 'மதுப்பாலே' என்று தொடங்கி.

மூ. 130. மதுப்பாலே இருவர் சேர்த்தியும் நித்யமென்கிறது.

வ்யா:–அதாவது-இம்மதுப்புத்தான் நித்யயோகே₃மதுப்பாகையாலே, இத்தால் புருஷகார பூ₄தையான பிராட்டியும் ஈஶ்வரனுமான இருவருடைய சேர்த்தியும் எப்போதுமுண்டு என்னுமிடம் சொல்லுகிறது—என்கை.

இந்நித்யயோக₃த்தை உபபாதி₃க்கிறார் 'இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை' என்று.

மூ. 131. இவளோடே கூடியே வஸ்துவினுடைய உண்மை.

வ்யா:–அதாவது–117. "श्रियःपतिर्निखिलहेयप्रत्यनीककल्याणैकतानः स्वेतरसमस्तवस्तुविलक्षणानन्तज्ञानानन्दैकस्वरूपः" (ஶ்ரிய:பதிர் நிகி₂லஹேயப்ரத்யநீக கல்யாணைகதாநஸ் ஸ்வேதர ஸமஸ்த வஸ்து விலக்ஷணாநந்த ஜ்ஞாநாநந்தை₃க ஸ்வரூப:) என்று ஸ்வரூபநிரூபகமான ஜ்ஞாநாநந்தா₃தி₃களுக்கு முன்னே ஶ்ரிய:பதித்வத்தைச் சொல்லும்படி அவன் ஸ்வரூபத்துக்கு ப்ரதா₄ந நிரூபகையாயிருக்கையாலே, இவளோடேகூடியே வஸ்துவினுடைய ஸத்₃பா₄வம் இருப்பது—என்கை.

ஆக, ஸ்வரூபாநுப₃ந்தி₄த்வ ப்ரயுக்தமான நித்யயோக₃த்தை அருளிச்செய்தாராயிற்று.

இனி, இவளுடைய கு₃ணப்ரயுக்தமானநித்யயோக₃த்தை அருளிச்செய்கிறார் "ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தையும்' என்று தொடங்கி.

மூ. 132. ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தையும் சேதநனுடைய அபராத₄த்தையுங்கண்டு அகலமாட்டாள்.

வ்யா:-அதாவது—அபராத₄ங்களைப் பத்தும் பத்தாகக் கணக்கிட்டு, அ(நி)றுத்து அறுத்துத் தீர்க்கும் ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யத்தையும். 118. "यद्ब्रह्मकल्पनियुतानुभवेऽप्यनाश्यं" (யத்₃ ப்₃ரஹ்ம கல்பநியுதாநுப₄வேபயநாஶ்யம்) இத்யாதி₃ப்படியே காலதத்வமுள்ளதனையும் அநுப₄வியாநின்றாலும் சிறிதுவரையிட்டுக் காட்டக் கடவதல்லாதபடி பண்ணிவைத்த இச் சேதநனுடைய அக்ருத்யகரணாத்₃யபராத₄த்தையுங்கண்டு, "என்னாகப்புகுகிறதோ?" என்னும் ப₄யத்தாலே ஈஶ்வரனை விட்டு ஒரு க்ஷணகாலமும் அகலமாட்டாள்—என்கை.

இத்தால், சேதநனுக்குப் ப₂லிக்குமத்தை அருளிச்செய்கிறார் 'சேதநனுக்கு என்று தொடங்கி.

மூ.133. சேதநனுக்கு இவையிரண்டையும் நினைத்து அஞ்சவேண்டா.

வ்யா:-அதாவது-இப்படி இவள் இருந்து நோக்குகையாலே, சேதநனுக்கு ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமும் ஸ்வாபராத₄மும் மாகிற இவை இரண்டையும் நினைத்து 'என்னாய் விளையப் புகுகிறதோ' என்று அஞ்சவேண்டா—என்கை.

இனி. இம்மதுப்பின் தாத்பர்யாம்ஶத்தை அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்றுதொடங்கி.

மூ. 134. இத்தால்,— ஆஶ்ரயிக்கைக்கு ருசியே வேண்டுவது, காலம் பார்க்கவேண்டா என்கிறது.

வ்யா:-அதாவது-இப்படிப் புருஷகாரஉபாயவஸ்துக்களினுடைய நித்யயோக₃த்தை ப்ரதிபாதி₃க்கிற இம்மதுப்பால், இவ்விஷயத்தை ஆஶ்ரயிப்பார்க்கு, ஆஶ்ரயிக்கையில் ருசியே வேண்டுவது. 'இரண்டுதலையும் கூடியிருக்கும் த₃ஶையிலே

ஆஶ்ரயிக்கவேணுமே' என்று ஆஶ்ரயணத்துக்குக் காலம் பார்த்திருக்க வேண்டாவென்கிறது—என்கை.

இனி, இவள் புருஷகாரத்வத்தின் 'அவஶ்யாபேக்ஷித த்வத்தை அறிவிக்கைக்காக இவள் ஸந்நிதி₄க்கும் அஸந்நிதி₄க்குமுண்டான வாசியை அருளிச்செய்கிறார், 'இவள் ஸந்நிதி₄யாலே' என்று தொடங்கி.

**மூ. 135. இவள் ஸந்நிதி₄யாலே காகம் தலை பெற்றது; அது இல்லாமையாலே ராவணன் முடிந்தான்.**

வ்யா:—*119.* "देव्या कारुण्यरूपया" (தே₃வ்யா காருண்ய ரூபயா) என்கிறபடியே க்ருபைதான் ஒருவடிவுகொண்டாற் போலே இருப்பாளாய், ஸ்வதந்த்ரனான ஈஶ்வரனுக்கும் ஸ்வாதந்த்ர்யத்தையமுக்கி க்ருபையைக் கிளப்புமவளான இவள் ஸந்நிதி₄யாலே, அபராத₄த்தைத் தீரக்கழியச் செய்து ப்₃ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காய்த் தலையறுப்புண்ணத் தேடின காகம் *120.* "कृपया पर्यपालयत्" (க்ருபயா பர்யபாலயத்) என்கிறபடியே க்ருபாவிஷயமாய்த் தலைபெற்றுப் போயிற்று; அப்படியிருக்கிற இவள்ஸந்நிதி₄ இல்லாமையாலே போகக் கற்றுச் செயல்மாண்டு நின்றநிலை ஒத்திருக்கச் செய்தேயும், காகத்தோபாதி அபராத₄முமின்றிக்கேயிருக்க, ராம ஶரத்துக்கு இலக்காய் ராவணன் முடிந்துபோனான்-என்கை. ஆகையால் ஆஶ்ரயிப்பார்க்கு இவள்ஸந்நிதி₄யே வேணுமென்று கருத்து. ஆக, ஸ்ரீமத்பத₃ார்த்த₂த்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம், நாராயண பத₃ார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் 'புருஷகார ப₃லத்தாலே' என்று தொடங்கி.

**மூ. 136. புருஷகார ப₃லத்தாலே ஸ்வாதந்த்ர்யம் தலைசாய்ந்தால் தலையெடுக்குங் கு₃ணங்களைச் சொல்லுகிறது நாராயணபத₃ம்.**

வ்யா:—அதாவது—உபதே₃ஶத்தாலும், அழகாலும் கண்ணழிவற வஶீகரித்துக் கார்யங்கொள்ளவல்ல புருஷகார ப₃லத்தாலே ஆஶ்ரயணோன்முகனான சேதநன் அநாதி₃காலம் பண்ணின அபராத₄ங்களைப் பார்த்துச் சீறி "அங்கீகரியேன்" என்று இருக்கும் ஈஶ்வர ஸ்வாதந்த்ர்யம் தலைமடிந்தால் அதன்கீழ் தலையெடுக்கப்பெறாத செறிப்புத் தீர்ந்து தலையெடுக்குங் கு₃ணங்களைச் சொல்லுகிறது நாராயணபத₃ம்—என்கை.

'அவைதாம் எவை?' என்ன. அருளிச்செய்கிறார் 'அவையாவன' என்று தொடங்கி.

மூ. 137. அவையாவன-வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும், ஸௌஶீல்யமும், ஸௌலப்₄யமும், ஜ்ஞாநமும், ஶக்தியும.

வ்யா:— இவற்றில், வாத்ஸல்யமாவது—வத்ஸத்தின் பக்கல் தே₄நு இருக்கும் இருப்பு; அதாவது அதனுடைய தே₃ாஷத்தை போ₄க்₃யமாகக் கொள்ளுகையும். க்ஷீரத்தைக் கொடுத்து வளர்க்கையும். எதிரிட்டவரைக் கொம்பிலும் குளம்பிலுங்கொண்டு நோக்குகையுமிறே; அப்படியே. ஈஶ்வரனும் தே₃ாஷத்தை போ₄க்₃யமாகக்கொண்டு, ||"பாலேபோற் சீர்" என்கிற கு₃ணங்களாலே த₄ரிப்பித்து 121."कथञ्चन-न त्यजेयं" (கத₂ஞ்சந-ந த்யஜேயம்) என்றும், 122. "अभयं सर्वभूतेभ्य:" (அப₄யம் ஸர்வபூ₄தேப்₄ய:)என்றும் சொல்லுகிறபடியே அநுகூலர் நிமித்தமாகவும் ப்ரதிகூலர் நிமித்தமாகவும் நோக்கும். ஸ்வாமித்வமாவது-இவன் விமுக₂னான த₃ஶையிலும் விடாதேநின்று, ஸத்தையை நோக்கிக்கொண்டு போருகைக்கு ஹேதுவான ஒரு ப₃ந்த₄விஶேஷம்; அதாகிறது-உடையவனாயிருக்குமிருப்பு; அத்₃வேஷம் தொடங்கிக் கைங்கர்ய பர்யந்தமாக உண்டான ஸ்வபா₄வ விஶேஷங்களையெல்லாம் உண்டாக்குகிறது இந்த ப₃ந்த₄விஶேஷமடியாக.

|| பெரியதிருவ 58.

ஸௌஶீல்யமாவது- உப₄யவிபூ₄தி யோக₃த்தாலும் பெரிய பிராட்டியாரோட்டைச் சேர்த்தியாலும் நிரங்குஶமாயிருக்கிற ஈஶ்வரனுடையமேன்மையையும் தங்கள் சிறுமையையும் பார்த்து *"அவனெவ்விடத்தான் யானார்" என்று பிற்காலியாதபடி எல்லாரோடும் ஒக்க மேல்விழுந்து புரையறக் கலக்கையும், அது தன்பேறாக இருக்கையும், எதிர்த்தலையில அபேக்ஷையின்றியிலே இருக்கக் கலக்கையும். ஸௌலப்₄யமாவது-கண்ணுக்கு விஷயமின்றிக்கேயிருக்கிற தான் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கலாம்படி எளியனாயிருக்கை. ஜ்ஞாநமாவது — இச்சேதநனுக்குக் கழிக்கவேண்டும் அநிஷ்டங்களையும், கொடுக்கவேண்டும் இஷ்டங்களையும் நேராக அறிகைக்கு ஈடான ஸ்வவ்யதிரிக்த ஸமஸ்தபதா₃ர்த்த₂ங்களையும் ஒருகாலே அபரோக்ஷிக்கவல்ல அறிவு. ஶக்தியாவது-ஹேயரான நித்யஸம்ஸாரிகளை உபாதே₃யதமரான நித்யஸூரிகளோடு ஒருகோவையாக்கவல்ல அக₄டிதக₄டநா ஸாமர்த்₂யம். இவற்றில் வாத்ஸல்யாதி₃கள் நாலும் ஆஶ்ரயண ஸௌகர்யாபாத₃கம்; ஜ்ஞாநாதி₃கள் இரண்டும்ஆஶ்ரித கார்யாபாத₃கம்; ||"நிகரில்புகழாய்" என்று தொடங்கி வாத்ஸல்யாதி₃கள் நாலையுமிறே, ஆஶ்ரயணத்துக்கு உடலாக ஆழ்வார் அருளிச்செய்தது. ஜ்ஞாநஶக்திகள் இரண்டுஞ் சொன்ன இது, ப்ராப்தி பூர்த்திகளுக்கும் உபலக்ஷணம்; கார்யகரத்வத்துக்கு அவையும் அபேக்ஷிதங்களாகையாலே.

'இக்கு₃ணங்களுக்கு இவ்விடத்தில் விநியோக₃ங்கள் எவை?' என்ன, அருளிச்செய்கிறார் 'குற்றங்கண்டு' என்று தொடங்கி.

**மூ.138.** குற்றங்கண்டு வெருவாமைக்கு வாத்ஸல்யம்; கார்யஞ்செய்யுமென்று துணிகைக்கு ஸ்வாமித்வம்; ஸ்வாமித்வங்கண்டு அகலாமைக்கு ஸௌஶீல்யம்;

* திருவாய் 5-1-7. || திருவாய் 6-10-10.

கண்டு பற்றுகைக்கு ஸௌலப்₄யம்; விரோதி₄யைப் போக்கித் தன்னைக் கொடுக்கைக்கு ஜ்ஞாநஶக்திகள்.

வ்யா:—அதாவது-ஆஶ்ரயணோந்முக₂னான இச்சேதநன், தன்தோ₃ஷத்தைப் பார்த்து அஞ்சாமைக்கு உறுப்பு, தோ₃ஷத்தை போ₄க்₃யமாகக் கொள்ளும் வாத்ஸல்யம். 'நங் கார்யம் செய்யுமோ, செய்யானோ?' என்று ஶங்கியாதே கார்யஞ்செய்யுமென்று விஶ்வஸிக்கைக்கு உறுப்பு இழவு பேறு தன்னதாம்படியான ஸ்வாமித்வம். உப₄யவிபூ₄திக்கும் கடவனாயிருக்கும் பெருமைக்கு ப்ரகாஶகமான ஸ்வாமித் வத்தைக்கண்டு ஸ்வநிகர்ஷாநுஸந்த₄ாநத்தாலே அகலா மைக்கு உறுப்பு, தாழநின்றவர்களோடே புரையறக் கலக்கும் ஸ்வப₄ாவமான ஸௌஶீல்யம். அதீந்த்₃ரியனென்று பிற்காலியாமல் கண்ணாலே கண்டு ஆஶ்ரயிக்கைக்கு உறுப்பு தன்வடிவைச் சக்ஷுர்விஷயமாக்குகையாகிற ஸௌலப்₄யம்; 123. "सर्वपापेभ्यो मोक्षयिष्यामि" (ஸர்வபாபேப்₄யோ மோக்ஷயிஷ்யாமி) என்கிறபடியே ப்ராப்திவிரோதி₄யைப்போக்கி ப்ராப்யனான தன்னை உபகரிக்கைக்கு உறுப்பு, ப்ராப்தா வான இவன் கீழ்நின்ற நிலையும், மேல் போக்கடியும் அறி கைக்கும், அறிந்தபடியே செய்து தலைக்கட்டுகைக்கும் ஏகாந் தங்களான ஜ்ஞாநஶக்திகள்—என்கை.

ஸௌகர்யாபாத₃கங்களான கு₃ண சதுஷ்கத்திலும் ஸௌலப்₄யம் ப்ரத₄ாநமாகையாலே, அந்த ஸௌலப்₄ய காஷ்டை₂யை அருளிச்செய்கிறார் 'இங்குச்சொன்ன' என்று தொடங்கி.

மூ. 139. இங்குச்சொன்ன ஸௌலப்₄யத்துக்கு எல்லைநிலம் அர்ச்சாவதாரம்.

வ்யா:—அதாவது-இப்பத₃த்தில் ஆஶ்ரயண உபயோகி₃ யாகச்சொன்ன ஸௌலப்₄யத்துக்கு ஸீமாபூ₄மி /"தமருகந்த

/ முதல்-திருவ-44.

தெவ்வுருவம் அவ்வுருவந்தானே'' என்கிறபடியே ஆஸ்ரிதர் உகந்தது ஒன்றைத் திருமேனியாகக்கொண்டு ஸதா₃ ஸந்நிதி₄ பண்ணியிருக்கும் அர்ச்சாவதாரம்—என்கை.

இதுதன்னை உபபாதி₃க்கிறார் 'இதுதான்' என்று தொடங்கி.

**மூ. 140. இதுதான் பரவ்யூஹ விப₄வங்கள் போலன்றிக்கே கண்ணாலே காணலாம்படி இருக்கும்.**

**வ்யா:**—அதாவது-இவ்வர்ச்சாவதாரந்தான் தே₃ஶவிப்ரக்ருஷ்டதையாலே கண்ணுக்கு விஷயமாகாத பரவ்யூஹங்களும், காலவிப்ரக்ருஷ்டதையாலே கண்ணுக்கு விஷயமாகாதபடிபோன விப₄வமும் போலன்றிக்கே, ஆஸந்நமாய் அநவரதஸந்நிதி₄ பண்ணிக்கொண்டிருக்கையாலே, அநவரதம் கண்ணாலே காணலாம்படி இருக்கும்—என்கை.

'இக்கு₃ணங்களெல்லாம் அர்ச்சாவதாரத்திலே காணலாமோ?' என்ன அருளிச்செய்கிறார் 'இவையெல்லாம் நமக்கு நம் பெருமாள் பக்கலிலே காணலாம்' என்று.

**மூ. 141. இவையெல்லாம் நமக்கு நம் பெருமாள் பக்கலிலே காணலாம்.**

**வ்யா:**— அதாவது–ஸௌகர்யாபாத₃கமாகவும் கார்யாபாத₃கமாகவும் சொன்ன இக்கு₃ணங்கள் எல்லாம், இவை காண்கையிலே அபேக்ஷையுடைய நமக்கு நம்முடைய பெருமாள் பக்கலிலே காணலாம்—என்கை.

பெருமாள்பக்கலிலே இக்கு₃ணங்களுக்குப்ரகாஶகங்களாயுள்ளவற்றைச் சொல்லி, 'இவற்றுடனே நிற்கிற நிலையே நமக்குத் தஞ்சம்'என்கிறார் 'திருக்கையிலே' என்று தொடங்கி.

**மூ. 142. திருக்கையிலே பிடித்த தி₃வ்யாயுத₄ங்களும், வைத்து அஞ்சல் என்ற கையும், கவித்த முடியும்,**

முகமும் முறுவலும், ஆஸநபத்₄மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நிலேயே நமக்குத் தஞ்சம்.

வ்யா:—அதாவது–கார்யகரத்வ உபயோகி₃யான ஜ்ஞாந ஶக்திகளுக்கு ப்ரகாஶகமாம்படி திருக்கைகளிலே த₄ரித்துக் கொண்டிருக்கிற ஶங்க₂சக்ராதி₃ தி₃வ்யாயுத₄ங்களும், வாத்ஸல்ய ப்ரகாஶகமாம்படி வைத்து அஞ்சலென்ற கையும், ஸ்வாமித்வ ப்ரகாஶகமாகக் கவித்த முடியும், ஸௌஶீல்ய ப்ரகாஶகமான முக₂மும் முறுவலும், அனைவர்க்குங்கண்டு பற்றலாம்படியான ஸௌலப்₄ய ப்ரகாஶகமான ஆஸநபத்₃மத்திலே அழுத்தின திருவடிகளுமாய்க்கொண்டு எழுந்தருளி நிற்கிற நிலேயே அநந்யக₃திகளான நமக்கு ரக்ஷகம்–என்கை.

'உபாய உபேய நிஷ்டர்₂க்கு அபேக்ஷிதமான ஆகாரங்கள் இரண்டும் கீழ்ச்சொன்னபடியே நிற்கிற திருமேனியிலே தோற்றும் என்கிறார் 'ரக்ஷகத்வ போ₄க்₃யத்வங்கள் இரண்டுந் திருமேனியிலே தோற்றும்' என்று.

மூ. 143. ரக்ஷகத்வ போ₄க்₃யத்வங்கள் இரண்டும் திருமேனியிலே தோற்றும்.

வ்யா:— அதாவது—ரக்ஷணபரிகரமான தி₃வ்யாயுத₄ங்களோடும் ரக்ஷணத்துக்குக் கவித்த முடியோடுங் கூடியிருக்கையாலே ரக்ஷகத்வம் தோற்றுகையாலும் * "அணியாராழியுஞ் சங்கமுமேந்தும்" || "முடிச்சோதியாயுனது முகச்சோதி மலர்ந்ததுவோ" என்கிறபடியே அவைதானே அழகுக்கு உடலாய், வைத்தஞ்சல் என்ற கையும் முக₂மும் முறுவலும் ஆஸநபத்₃மத்திலே அழுந்தின திருவடிகளும் ஒரொன்றே அழகுக்கு எல்லேநிலமாயிருக்கையாலே போ₄க்₃யத்வம் தோற்றுகையாலும், இரண்டும் திருமேனியிலே ப்ரகாஶிக்கும்—என்கை. ஆக, நாராயண பத₃ார்த்த₂த்தை அருளிச் செய்தாராயிற்று.

* திருவாய் 8-3-6. || திருவாய் 3-1-1.

இனி, 'சரணௌ' என்கிற பத₃த்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார் 'சரணௌ-திருவடிகளை' என்று.

மூ. 144. சரணௌ-திருவடிகளை.

இந்த த்₃விவசனத்தாற் சொல்லுகிற அர்த்த₂த்தை அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்று தொடங்கி.

மூ. 145. இத்தால் சேர்த்தியழகையும், உபாய பூர்த்தியையும் சொல்லுகிறது.

வ்யா:—அதாவது-'சரணௌ' என்று இரண்டு திருவடிகளையும் சொல்லுகிற இத்தால், /"இணைத்தாமரையடி" என்கிறபடியே இரண்டு தாமரைப்பூவை நிரைத்து வைத்தாற் போலேயிருக்கிற சேர்த்தியழகையும், த்₃விவசநம் இரண்டுக்கு மேல் மற்றொன்று புகுர ஸஹியாமையாலே ஸஹாயாந்தர நிரபேக்ஷமான உபாயபூர்த்தியையுஞ் சொல்லுகிறது-என்கை.

இனி. உபாயத்வ ஏகாந்தமான இதன் கு₃ணாதி₄க்யத்தை அருளிச்செய்கிறார் 'பிராட்டியும்' என்று தொடங்கி.

மூ. 146. பிராட்டியும் அவனும் விடிலும் திருவடிகள் விடாது; ‡திண்கழலாயிருக்கும்.

வ்யா:—அதாவது—ஸ்ரீமத்பத₃த்திலே புருஷகாரபூ₄தையாகச்சொன்ன பிராட்டியும், அவள்தானே சிதகுரைக்கிலும் * "என்னடியார் அதுசெய்யார்" என்னும்படி நாராயண பத₃த்திற்சொன்ன கு₃ணவிஶிஷ்டனான அவனும் கைவிடிலும், திருவடிகள் தன் வைலக்ஷண்யத்தாலே துவக்கிக்கொள்ளுகையாலே கைவிடாது; ‡ "வண்புகழ் நாரணன் திண்கழல்" என்கிறபடியே பற்றினாரை நழுவவிடாதே திண்மையை யுடைத்தாயிருக்கும்—என்கை.

---

/பெரியதிரு1-8-3. *பெரியாழ்திரு4-9-2. ‡திருவாய்1-2-10.

இந்த குணநிஷ்கர்ஷத்தைப்பற்றவுமன்றிக்கே. இவன் தன் ஸ்வரூபாநுகுணமும் திருவடிகளிலே இழிகையென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் 'ஶேஷிபக்கல்' என்று தொடங்கி.

**சூ. 147. ஶேஷிபக்கல் ஶேஷபூதன் இழியும்துறை; ப்ரஜை முலையிலே வாய்வைக்குமாபோலே,**

வ்யா:—அதாவது—ஶேஷிபக்கல் ஆஶ்ரயிக்க இழியும் ஶேஷபூதன் தன் ஸ்வரூபாநுகுணமாக இழியுந்துறை திருவடிகள்; ஸ்தநந்தயப்ரஜை தாயினுடைய அவயவமெல்லாங்கிடக்கத் தனக்கு வகுத்ததாயுள்ள முலையிலே வாய் வைக்குமாப்போலே—என்கை.

'திருவடிகளைச்சொன்ன இது திருமேனிக்கு உபலக்ஷணம்' என்கிறார். மேல் 'இத்தால்' என்று தொடங்கி.

**சூ. 148. இத்தால், பிராட்டிக்கு இருப்பிடமாய், குணப்ரகாஶகமுமாய், ஶிஶுபாலனையும் அகப்படத் திருத்திச் சேர்த்துக்கொள்ளுந் திருமேனியை நினைக்கிறது.**

வ்யா:—அதாவது–'சரணௌ' என்று விக்ரஹ ஏகதேஶமான திருவடிகளைச் சொன்ன இத்தால் * "திருவிருந்த மார்வன்" என்னும்படி ஸ்ரீமத்பதத்திற்சொன்ன புருஷகாரபூதையான பிராட்டிக்கு இருப்பிடமாய், நாராயணபதத்திற்சொன்ன குணங்களுக்கு ப்ரகாஶகமாய். || "பலபல நாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்" என்கிறபடியே ப்ரத்வேஷ பரனாய் நிந்தோக்திகளைப் பண்ணித்திரிந்த ஶிஶுபாலனையும் உட்பட || "அலவலைமை தவிர்த்த அழகன்" என்கிறபடியே தன்னழகாலே த்வேஷாதிகள் போம்படி திருத்தி † "திருவடி தாட்பாலடைந்த" என்கிறபடியே சேர்த்துக்கொள்ளும் ஸ்வபாவத்தையுடைத்தான திவ்ய மங்கள விக்ரஹத்தை நினைக்கிறது—என்கை.

* மூன்-திருவ-57. || பெரியாழ்திரு4-3-5. † திருவாய்7-5-3.

அநந்தரம், "ஶரணபத₃ார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் ஶரணம்' என்று தொடங்கி.

**மூ. 149. ஶரணம்-இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக.**

வ்யா:–அதாவது–124 "उपाये गृहरक्षित्रोः शब्दः शरणमित्ययम्। वर्तते सांप्रतं चैष उपायार्थैकवाचकः॥" (உபாயே க்₃ருஹரக்ஷித்ரோஶ் ஶப்₃த₃ஶ்ஶரணமித்யயம்। வர்த்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தை₂க வாசக:॥) என்கிறபடியே ஶரணஶப்₃த₃ம் ரக்ஷிதாவுக்கும் க்₃ருஹத்துக்கும் உபாயத்துக்கும் வாசகமேயாகிலும், இவ்விடத்தில் உபாயத்துக்கே வாசகமாகையாலும், உபாய க்ருத்யம் இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரகரணமாகையாலும், "இஷ்டப்ராப்திக்கும் அநிஷ்ட நிவாரணத்துக்கும் தப்பாத உபாயமாக" என்று இப்பத₃த்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார். இஷ்டாநிஷ்டங்கள் தாம் இன்னவையென்னுமத்தைப் பரந்தபடியிலே விஸ்தரேண அருளிச்செய்தார். ஶ்ரிய:பதிப்படியிலும் "அநிஷ்டமாகிறது-அவித்₃யையும், அவித்₃யா கார்யமான ராக₃த்₃வேஷங்களும், புண்ய பாபரூபமான கர்மங்களும், தே₃வாதி₃ சதுர்வித₄ ஶரீரங்களும், ஆத்₄யாத்மிகாதி₃ து₃:க்க₂பரம்பரைகளும்; இஷ்டமாகிறது—அர்ச்சிராதி₃ மார்க₃க₃மநமும், பரமபத₃ ப்ராப்தியும், பரமாத்மத₃ர்ஶநமும், கு₃ணாநுப₄வகைங்கர்யங்களும்" என்று ஸங்க்₃ரஹேண அருளிச்செய்தார்; ஆகையால், இவ்விடத்திலும் அவை வக்தவ்யங்கள்.

கீழ் நிர்த்₃தே₃ஶித்த வஸ்துவை உபாயமாகச் சொன்னதன் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார் 'இத்தால், ப்ராப்யந்தானே ப்ராபகம் என்கிறது' என்று.

**மூ. 150. இத்தால், ப்ராப்யந் தானே ப்ராபகம் என்கிறது.**

வ்யா:—அதாவது-கீழ்ச்சொன்ன விஷயத்தை உபாய மாகச் சொல்லுகிற இக்கால். ப்ராப்ய வஸ்துதானே ப்ரா பகம் என்னுமிடஞ் சொல்லுகிறது—என்கை.

'கீழ் ப்ராப்யப்ரஸங்க₃ம் உண்டோ?' என்ன அருளிச் செய்கிறார் 'கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே' என்று.

## மூ. 151. கீழ்ச்சொன்ன மூன்றும் ப்ராப்யமிறே.

வ்யா:—அதாவது— ஸமஸ்தபத₃மான பூர்வபத₃த்திற் சொன்ன லக்ஷ்மீவிஶிஷ்டத்வமும்,கல்யாணகு₃ணயோக₃மும், தி₃வ்யமங்க₃ள விக்ரஹோபேதத்வமும் ஆகிற மூன்றும். *125.* "श्रिया सार्धं-आस्ते" (ஶ்ரியா ஸார்த்த₄ம்-ஆஸ்தே) *126.*सर्वान् कामान् अश्नुते" (ஸர்வாந் காமாந் அஶ்நுதே) *127*"सदा पश्यन्ति" (ஸதா₃ பஶ்யந்தி) என்று இவனுக்கு அநுப₄வவிஷயமாகச் சொல்லப்படுகிறவையாகையாலே ப்ராப்யமிறே—என்கை.

'ஆனால். இத்தை உபாயமாக்குகிறதுதானென்?' என்ன, அருளிச்செய்கிறார் 'இவன் செயலறுதியாலே உபாய மாக்குகிறானித்தனை' என்று.

## மூ. 152. இவன் *செயலறுதியாலே உபாயமாக்கு கிறானித்தனை.

வ்யா:—அதாவது-அகிஞ்சநனாய் அநந்யக₃தியாயிருக்கிற இவன். தன் *செயல் மாட்சியாலே போ₄க்₃யமான பாலை மருந்தாக்குவாரைப்போலே, ப்ராப்யமானதுதன்னையே ப்ரா பகமாக்குகிறானித்தனை—என்கை.

இதுதன்னாலே இவ்வுபாயத்துக்கு ஓரதிஶயம் சொல்லு கிறது என்கிறார் 'சரணௌ ஶரணம் என்கையாலே' என்று தொடங்கி.

---

*செயலறுதி—செயலற்றுப்போகை; செயல் மாட்சி-செயல் மாண்டுபோகை.

**மூ. 153. "சரணௌ ஶரணம்" என்கையாலே உபாயாந்தர வ்யாவ்ருத்தமான உபாயம் என்கிறது.**

வ்யா:—அதாவது-"சரணௌ ஶரணம்" என்று ப்ராப்ய வஸ்துதன்னையே ப்ராபகமாகச் சொல்லுகையாலே, ப்ராப்யம் வேறும் தான் வேறுமாயிருக்கும் உபாயாந்தரங்களிற் காட்டில் வ்யாவ்ருத்தமான உபாயம் இது என்னுமிடம் சொல்லுகிறது—என்கை.

அநந்தரம், க்ரியாபத₃த்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார் 'ப்ரபத்₃யே-பற்றுகிறேன்' என்று.

**மூ. 154. ப்ரபத்₃யே-பற்றுகிறேன்.**

வ்யா:—இப்பத₃ம் 'பத₃ க₃தௌ'என்கிற தா₄து ஸித்₃த₄மாகையாலே க₃திவாசியாகையாலும், உத்தமனாகையாலும், 'பற்றுகிறேன்' என்று இதுக்கு அர்த்த₂ம்அருளிச்செய்கிறார்.

'இதுதான் மாநஸ வாசிக காயிக ரூபையான த்ரிவித₄ க₃தியையும் காட்டவற்றாகையாலே, அதில் எந்தக் கரணத்தால் உண்டான பற்றுதலைச் சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார் 'வாசிகமாகவும்' என்றுதொடங்கி.

**மூ.155.வாசிகமாகவும் காயிகமாகவும் பற்றினாலும் பேற்றுக்கு அழிவில்லை (இழவில்லை); 'ஜ்ஞாநாந் மோக்ஷம்' ஆகையாலே, மாநஸமாகக்கடவது.**

வ்யா:-அதாவது-128"भव शरणं"(ப₄வஶரணம்)இத்யாதி₃ப்படியே,ரக்ஷிக்கவேணும்,என்று ப்ரார்த்தி₂க்கையாகிறகேவல வாசிகமாகவும் 129. "अञ्जलिः परमा मुद्रा क्षिप्रं देवप्रसादिनी" (அஞ்ஜலி: பரமா முத்₃ரா க்ஷிப்ரம் தே₃வப்ரஸாதி₃நீ) என்கிற படியே ப₄க₃வத் ப்ரஸாத₃ ஹேதுபூ₄தமான அஞ்ஜலியை ப்ரயோகி₃த்தல் நிஷாத₃ காகாதி₃களைப்போலே ரக்ஷகவஸ்து

இருந்த இடத்தே வருகல் செய்கையாகிற கேவலகாயிகமாக வும் பற்றினுலும் ப₂லஸித்₃தி₄க்கு /அழிவில்லை. 130. "ஜ்ஞாநாந்மோக்ஷ:" (ஜ்ஞாநாந்மோக்ஷ:) என்கிறபடியே. ஜ்ஞாநத்தாலே மோக்ஷம் என்கையாலே. மாநஸமான பற்றுதல் ஆகக்கட வது-என்கை. அதாவது-ஒரு பு₃த்₃தி₄விசேஷம். இந்த பு₃த்₃தி₄ விசேஷந்தன்னைப் பரந்தபடியிலே விஸ்தரேண அருளிச் செய்தார். ஸ்ரீய:பதிப்படியிலும். "இந்த பு₃த்₃தி₄விசேஷ மாகிறது-அநந்யார்ஹசேஷத்வ ஜ்ஞாநகார்யமாய். இதரோ பாயவ்யாவ்ருத்தமாய். ப₄க₃வத்₃ரக்ஷகத்வா நுமதிரூபமாய். ஸக்ருத₃நுஷ்டே₂யமாய். வ்யபி₄சாரவிளம்ப₃விது₄ரமாய், ஸர் வாதி₄காரமாய். நியமசூந்யமாய். அந்திமஸ்ம்ருதி நிரபேக்ஷ மாய், ஸுஸுகமாய். யாச்ஞாக₃ர்ப்ப₄மாய். த்₃ருட₄த்₄யவஸாய ரூபமாய் இருப்பதொரு ஜ்ஞாநவிசேஷம்" என்று அருளிச் செய்தார். ஆகையால். இவ்விடத்தே அதுவும் அநுஸந்தே₄யம்.

இப்படி மாநஸமாத்ரமே அமையுமோ? * "சிந்தை யாலும்" இத்யாதி₃ப்படியே த்ரிவித₄கரணத்தாலும் ஸ்வீ கரிக்கவேண்டாவோ?' என்ன, அருளிச்செய்கிறார் 'உபாயம் அவனுகையாலும்' என்று தொடங்கி.

**மூ.156. உபாயம் அவனுகையாலும், இவை நேரே உபாயம் அல்லாமையாலும், இம்மூன்றும வேணும என்கிற நிர்ப்ப₃ந்த₄ம் இல்லை.**

வ்யா:— அதாவது-ப₂லஸித்₃தி₄க்கு உபாயம்-பற்றப்படு கிற ஈஸ்வரனுகையாலும். கரணத்ரயத்தாலும் உண்டான பற்றுதல்களான இவை ஆபாதப்ரதீதியில் உபாயம்போல் தோற்றிக்கழியுண்டு போமதொழிய. ஸாக்ஷாத் உபாயம் அல்லாமையாலும் ப₂லஸித்₃தி₄க்கு அத்₄யவஸாயாத்மகமான ஸ்வீகாரம் ஒன்றுமேயமையும். இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்ப₃ந்த₄ம் இல்லை—என்கை. அத₂வா. இப்படி

/ (பா) இழவில்லை. * திருவாய் 6-5-11.

ஒரொன்றிலே ஒதுக்கிச்சொல்லுகிறதென்? த்ரிவித₄கரணத்தாலும் பற்றுகலைச் சொன்னதேலோவென்ன. 'உபாயம்' இத்யாதி₃யாலே அருளிச்செய்கிறாராகவுமாம். அப்போதைக்கு ஒரொன்றே அமையும். இம்மூன்றும் வேணும் என்கிற நிர்ப்ப₃ந்த₄ம் இல்லை—என்கை. நிர்ப்ப₃ந்த₄ம் இல்லை என்கையாலே. இந்த ஸ்வீகாரம் த்ரிவித₄கரணத்தாலும் உண்டானாலும் குறையில்லையென்னுமிடம் தோற்றுகிறது. "இப்ரபத₃நம் கரணத்ரயத்தாலும் உண்டாகவுமாம்; ஏககரணத்தாலே உண்டாகவுமாம்; ப₂லஸித்₃தி₄க்குக் குறையில்லை. அதி₄காரிபூர்த்திக்குக் கரணத்ரயமும் வேணும். ப₂லஸித்₃தி₄க்கு ஏககரணமே அமையும்; உபாயபூர்த்திக்கு ஶ்ரிய:பதித்வமும், வாத்ஸல்யாதி₃ குண₃யோக₃மும், தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹமும் அபேக்ஷிதமாயிருக்கிறாப்போலே, அதிகார(ரி)பூர்த்திக்குக் கரணத்ரயமும் அபேக்ஷிதமாயிருக்கும்" என்றிறே பரந்த படியில் இவர்தாம் அருளிச்செய்தது.

131. "**सकृदेव हि शास्त्रार्थः कृतोऽयं तारयेन्नरम्**" (ஸக்ருதே₃வஹி ஶாஸ்த்ரார்த்த₂: க்ருதோயம் தாரயேந்நரம்) 132. "**सकृदेव प्रपन्नाय**" (ஸக்ருதே₃வ ப்ரபந்நாய) இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே ப்ரபத்தி ஸக்ருத்கரணீயையாயிருக்க, வர்த்தமாநமாகச் சொல்லுகிறது ஏதுக்காக?' என்ன, அருளிச்செய்கிறார் 'வர்த்தமாந நிர்த்தே₃ஶம்' என்று தொடங்கி.

**மூ. 157. வர்த்தமான நிர்த்தே₃ஶம்—ஸத்வம் தலையெடுத்து அஞ்சினபோது அநுஸந்தி₄க்கைக்காக.**

வ்யா:— அதாவது— 133. "**लोकविक्रान्तचरणौ शरणं तेऽव्रजं विभो**" (லோகவிக்ராந்த சரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபே₄ா) †"நின்னடியிணை அடைந்தேன்" *"அடிக்கீழமர்ந்து புகுந்தேன்" என்கிறபடியே சொல்லாதே 'ப்ரபத்₃யே' என்று வர்த்தமாநமாகச் சொல்லுகிறது—ப்ரக்ருதியோடேயிருக்கிற

† பெரியதிரு 5-8-1. * திருவாய் 6-10-10.

இவன் ரஜஸ்தமஸ்ஸுக்களாலே கலங்கி உபாயாபாயங்களில் ஏதேனும் ஒன்றிலே அந்வயித்து, பின்னை ஸத்வம் தலையெடுத்து அநுதாபம் பிறந்து பயப்பட்ட காலத்திலே 134. "प्रायश्चित्तिरियं सात्र यत्पुनः शरणं व्रजेत्" (ப்ராயஶ்சித்திரியம் ஸாத்ர யத்புநஶ்ஶரணம் வ்ரஜேத்) என்கிறபடியே ப்ரபத்தியொழிய அதுக்குப் பரிஹாரம் இல்லாமையாலும், அதுதான் ஸக்ருத் க்ருதமானபின்பு புந:கரணம் ஆகாமையாலும், பூர்வப்ரபத்நத்தை அநுஸந்திக்கைக்காகக் கொழுந்துபடக்கிடக்கிறது—என்கை.

இன்னமும் இவ்வர்த்தமாநத்துக்குச் சில ப்ரயோஜநங்களை அருளிச்செய்கிறார் 'உபாயாந்தரங்களில்' என்று தொடங்கி.

**மூ. 158. உபாயாந்தரங்களில் நெஞ்சு செல்லாமைக்கும், காலக்ஷேபத்துக்கும், இனிமையாலே விடவொண்ணாமையாலும் நடக்கும்.**

வ்யா:—அதாவது-பூர்வவாஸனையாலே அவஶமாக உபாயாந்தரங்களிலே மநஸ்ஸு செல்லாமைக்காவும், இவ்வநுஸந்தாநத்தாலொழியப் போதுபோக்க அரிதாகையாலே காலக்ஷேபத்துக்காகவும், இதனுடைய ரஸ்யதையாலே விடமாட்டாமையாலும், இவ்வநுஸந்தாநம் இடைவிடாமல் நடக்கக்கடவதாயிருக்கும்—என்கை.

'இங்ஙனன்றிக்கே, பலஸித்திக்குப் பலகாலம் அநுஸந்திக்கவேணுமென்றாலோ?' என்ன, அருளிச்செய்கிறார் 'பேற்றுக்கு' என்று தொடங்கி.

**மூ. 159. பேற்றுக்குப் பலகாலும் வேணுமென்று நினைக்கில் உபாயம் நழுவும்.**

வ்யா:—அதாவது-கீழ்ச்சொன்ன ப்ரயோஜநங்களுக்காக அன்றிக்கே பேற்றுக்கு உறுப்பாகப் பலகாலும் அநுஸந்

தி₄க்கவேணுமென்று ப்ரதிபத்திபண்ணில், ஸஹாயாந்தர ஸம் ஸர்க்க₃ாஸஹமான ஸித்₃தே₄ாபாயம் சணற்கயிறுகண்ட ப்₃ரஹ்மாஸ்த்ரம்போலே தன்னைக்கொண்டு நழுவும்-என்கை. ஆக, பூர்வவாக்யத்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்தாராயிற்று.

இனி, உத்தர வாக்யத்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்வ தாக உபக்ரமிக்கிறார் 'உத்தர வாக்யத்தாலே ப்ராப்யஞ் சொல்லுகிறது' என்று.

**மூ. 160. உத்தர வாக்யத்தாலே ப்ராப்யம் சொல்லு கிறது.**

வ்யா:—ப்ராப்யமாவது—ஶ்ரிய:பதியாய், ஸர்வஸ்வாமி யாய் இருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிற் பண்ணும் கைங்கர்யம்.

ப்ராபகவரணாநந்தரம் ப்ராப்யம் சொல்லுகிற இதுக்கு அபி₄ப்ராயம் அருளிச்செய்கிறார், 'ப்ராப்யாந்தரத்துக்கு அன் றென்கை' என்று.

**மூ. 161. ப்ராப்யாந்தரத்துக்கு அன்றென்கை.**

வ்யா:—பூர்வவாக்யத்தில் ப்ரதிபாதி₃தமான ஸாத₄நம் ப₂ல சதுஷ்டய ஸாத₄ாரணமாகையாலே, கீழ்ப்பண்ணின ப்ராபகவரணம் ப்ராப்யாந்தரத்துக்கு அன்று என்னுமிடஞ் சொல்லுகை இப்போது ப்ராப்யம் சொல்லுகிற இதுக்கு ப்ரயோஜநம் என்றபடி.

'ப்ராப்யாந்தரங்களை விட்டு இந்த ப்ராப்யத்தை அபேக்ஷிக்கவேண்டுவானென்? என்கிற ஶங்கையிலே, அருளிச் செய்கிறார் 'உபாயாந்தரங்களை விட்டு' என்று தொடங்கி,

**மூ. 162. உபாயாந்தரங்களைவிட்டுச் சரமோபாயத் தைப் பற்றினாற்போலே, உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களைவிட்டு எல்லையான ப்ராப்யத்தை அர்த்தி₂க்கிறது.**

வ்யா:—அதாவது–உபாயவரணம் பண்ணுகிறவளவில் அநந்யஶரணத்வரூபமான ஸ்வரூபத்துக்கு அநுகு₃ணமாகக் கர்மஜ்ஞாநப₄க்திகளாகிற உபாயாந்தரங்களை விட்டுச் சரம மான ஸித்₃தோ₄பாயத்தைப் பற்றினாற்போலே, உபேய ப்ரார்த்₂தநை பண்ணுகிறவளவிலும் அநந்யபோ₄க₃த்வரூப மான ஸ்வரூபத்துக்கு அநுகு₃ணமாக உபேயாந்தரமான ஐஶ்வர்ய கைவல்யங்களைவிட்டுச் சரமமான ப்ராப்யத்தை அர்த்தி₂க்கிறது—என்கை.

நினைவறியும் ஈஶ்வரன் பக்கல் ப்ரார்த்த₂நை மிகையென்றிருப்பார் பண்ணும் ப்ரஶ்நத்தை அநுவதி₃க்கிறார் 'இவன் அர்த்தி₂க்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில்' என்று.

மூ.163. இவன் அர்த்தி₂க்கவேணுமோ? ஸர்வஜ்ஞன் இவன் நினைவறியானோ? என்னில்.

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் 'இவன் பாசுரங் கேட்டவாறே திருவுள்ளமுகக்கும்' என்று.

மூ.164. இவன் பாசுரங்கேட்டவாறே திருவுள்ளம் உகக்கும்.

வ்யா:—அதாவது–ருக்₃ணதையாலே சோற்றில் ஆசை யற்றுக்கிடந்த ப்ரஜை ரோக₃ந்தீர்ந்து பசிவிளைந்து 'சோறு' என்று அபேக்ஷிக்கும் பாசுரங்கேட்டால் பெற்ற தாய் உகக்குமாபோலே, அநாதி₃காலம் ப்ராப்யாந்தரப்ராவண்ய மாகிற நோய்கொண்டு இந்த ப்ராப்யத்தில் நசையற்றுக் கிடந்தவன் இதிலே ருசி பிறந்து தன் பக்கலிலே வந்து இத்தை அபேக்ஷிக்கிற பாசுரங்கேட்டவாறே, ஶேஷியான அவன் திருவுள்ளம் உகக்கும்; அதுக்காக அர்த்தி₂க்கிறானித்தனை–என்கை.

இனி, இவ்வாக்யத்துக்கு ப்ரதிபத₃மும் அர்த்த₂மும் அருளிச் செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப்ரத₂மபத₃த்தை உபாதா₃நம் பண்ணுகிறார் 'ஸ்ரீமதே' என்று.

**மூ. 165. ஸ்ரீமதே—பெரியபிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு.**

வ்யா:—அதுக்கு அர்த்தமும் அருளிச்செய்கிறார். 'பெரிய பிராட்டியாரோடே கூடியிருந்துள்ளவனுக்கு' என்று. இங்கும் ஸ்ரீசப்தத்துக்குப் பூர்வவாக்யத்திற் சொன்ன வ்யுத்பத்தித்வயமும், அதில் அர்த்தமும் மதுபர்த்தமான நித்யயோகமும் அநுஸந்தேயம்.

இரண்டிடத்திலும் நித்யயோகம் ஒத்திருக்கச்செய்தே அவ்வவதசாநுகுணமாக இவளிருக்கும் இருப்பை அருளிச் செய்கிறார் 'அவன் உபாயமாமிடத்தில்' என்று தொடங்கி.

**மூ. 166. அவன் உபாயமாமிடத்தில் தான் புருஷ காரமாயிருக்கும்; அவன் ப்ராப்யனுமிடத்தில் தான் ப்ராப்யையுமாய்க் கைங்கர்யவர்த்தகையுமாயிருக்கும்.**

வ்யா:—அதாவது—அவன் சேதநர்க்கு அநிஷ்டநிவ்ருத்தி இஷ்டப்ராப்திகளுக்கு உபாயமாமிடத்தில் ஸஹாயாந்தர ஸம்ஸர்க்கத்தை ஸஹியாமையாலே தான் உபாயபாவத்தில் அந்வயமின்றிக்கே, ஸாபராத சேதநருடைய அபராதங்களைப் பார்த்து அவன் சீறுமளவில், அத்தை ஸஹித்து அங்கீகரிக்கும்படியாகப் பண்ணும் புருஷகாரமாயிருக்கும்; அவன் சேதநர்க்குக் கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியா ப்ராப்யனுமிடத்தில், அவனோபாதி கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியாய்க்கொண்டு தான் ப்ராப்யையுமாய், இவர்கள் செய்யும் கைங்கர்யத்தை அவன் திருவுள்ளத்திலே ஒன்று பத்தாகப்படுத்தி உகப்பிக்கையாலே, கைங்கர்ய வர்த்தகையுமாயிருக்கும்—என்கை. இது தன்னைப் பரந்தபடியிலே "பூர்வவாக்யத்தில் ஸ்ரீமச்சப்தமும் சேதநருடைய அபராதத்தையும், ஈச்வரனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையுங்கண்டு, 'இவர்கள் அவனுடைய க்ரோதத்துக்கு விஷயபூதராய் நசித்துப்போகாதே, இவனைக்கிட்டி உஜ்ஜீவித்துப்போகவேணும்' என்று ஸாபராதரான சேதநரை

ஈஶ்வரனோடே சேர்க்கைக்காக என்றுமொக்க விடாதேயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது; இங்குத்தை ஸ்ரீமச்ச2ப்3த3ம் கைங்கர்ய ப்ரதிஸம்ப3ந்தி4த்வத்தைப் பற்றவும். இவர்கள் பண்ணும் கைங்கர்யத்தை ஈஶ்வரன் திருவுள்ளத்திலேஒன்று பத்தாகப் படுத்துகைக்காகவும். அநுப4வவிச்சே2த3த்தில் தனக்கு ஸத்தா ஹாநி பிறக்கும்படி இருக்கையாலே. நிரந்தர ஸம்ஶ்லேஷத்துக்காகவும், அவனை க்ஷணகாலமும் பிரியாதே ஸர்வகாலமும் ஸம்ஶ்லிஷ்டையாயிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது'' என்று விஸ்தரேண அருளிச்செய்தார்.

திருமந்த்ரத்தில் உத்தரபத3த்துக்கு இவ்வுத்தரவாக்யம் விவரணமாயிருக்கிறபடியை அருளிச்செய்கிறார் 'இதிலே' என்று தொடங்கி.

**மூ. 167. இதிலே திருமந்த்ரத்தில் சொன்ன ப்ராப்யத்தை விஶத3மாக அநுஸந்தி4க்கிறது.**

**வ்யா:**—அதாவது—கைங்கர்யப்ரதிஸம்ப3ந்தி4 ஒரு மிது2நமென்னுமிடத்தை ஶாப்3த3மாக ப்ரதிபாதி3க்கிற இந்த வாக்யத்திலே. திருமந்த்ரத்தில் 'நாராயணாய' என்று கைங்கர்ய ப்ரதிஸம்ப3ந்தி4 ஒருமிது2நமென்னுமிடம் ஆர்த்த2மாகையாலே அவிஶத3மாகச்சொன்ன ப்ராப்யத்தை விஶத3மாக அநுஸந்தி4க்கிறது-என்கை. அங்கு.'நாராயணனுக்கேஅடிமை செய்யப்பெறுவேனாகவேணும்' என்கிற இவ்வளவொழிய. 'அடிமைகொள்ளுமவன்ஸ்ரீமானாகவேணும்'என்றும்,'அடிமை செய்யுமவன் நிர்மமனாகவேணும்' என்றும் சொல்லாமையாலும். அவை இரண்டும் இங்குச் சொல்லுகையாலுமிறே. அந்தப்பதத்துக்கு இவ்வாக்யம் விவரணமாயிற்று.

'இம்மிது2நத்துக்கே அடிமை செய்யவேணும் என்கிற நிர்ப3ந்த4ந்தானென்?' என்ன, அருளிச்செய்கிறார் 'இளைய பெருமாளைப்போலே' என்று தொடங்கி.

மூ. 168. இளைய பெருமாளைப்போலே இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை முறை.

வ்யா:— அதாவது—135. "भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते। अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ॥" (ப₄வாம்ஸ்து ஸஹ வைதே₃ஹ்யா கி₃ரிஸாநுஷு ரம்ஸ்யதே। அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்₃ரதஸ் ஸ்வபதஶ்ச தே ॥) என்று பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியிலே அடிமைசெய்த இளையபெருமாளைப்போலே, இருவருமான சேர்த்தியிலே அடிமைசெய்கை இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபப்ராப்தம்-என்கை. மிது₂ந ஶேஷத்வம் ஸ்வரூபமானால் மிது₂நகைங்கர்யமிறே ஸ்வரூபப்ராப்தம்.

இன்னமும் அச்சேர்த்தியிலே அடிமைசெய்யுமளவிலுள்ள வாசியை அருளிச்செய்கிறார் 'அடிமை' என்று தொடங்கி.

மூ. 169. அடிமைதான் ஸித்₃தி₄ப்பதும் ரஸிப்பதும் அச்சேர்த்தியிலே.

வ்யா:—அதாவது—ஸ்வதந்த்ரனை ஈஶ்வரன் உபேக்ஷியாமல் கைங்கர்யங் கொண்டருளும்படி பண்ணுமவள் இவளாகையாலே. 136. "सीतामुवाच" (ஸீதாமுவாச) 137. "सीतासमक्षं काकुत्स्थमिदं वचनमब्रवीत्" (ஸீதாஸமக்ஷம் காகுத்ஸ்த₂மித₃ம் வசநம் அப்₃ரவீத்) என்று இவள் முன்னிலையாகத் தம்முடைய ஸ்வரூபாநுரூபமான அடிமையை அபேக்ஷித்துப் பெற்ற இளையபெருமாளைப்போலே, இவன் ப்ரார்த்தி₂க்கிற அடிமைதான் ஸித்₃தி₄ப்பதும், மாதாபிதாக்கள் இருவருமான சேர்த்தியிலே ஶுஶ்ரூஷைபண்ணும் புத்ரனுக்குப்போலே, செய்கிற அடிமைதான் ரஸிப்பதும் பிராட்டியும் அவனுமான சேர்த்தியிலே—என்கை.

இனி. இரண்டாம் பத₃த்தை உபாத₃ாநம் பண்ணுகிறார் 'நாராயணாய' என்று. அதுக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார் 'ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு' என்று.

## மூ.170.நாராயணுய–ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு

வ்யா:— *நாராயணத்வம்–உப₄யவிபூ₄தி நாத₂த்வமாகை யாலே. 'ஸர்வஶேஷியாயுள்ளவனுக்கு' என்கிறுர். கைங்கர்ய ப்ரதிஸம்ப₃ந்தி₄யாவான் ஶேஷியிறே.*

*கைங்கர்யந்தான் அநுப₄வஜநித ப்ரீதிகாரிதமாகை யாலும். அந்த ப்ரீதிதான் அநுப₄ாவ்ய விஷயாதீ₄நையாகை யாலும். அநுப₄ாவ்ய விஷயம் சொல்ல வேண்டுகையாலே அருளிச்செய்கிறுர் 'இதிலே திருமேனியையும் கு₃ணங்களை யும் சொல்லும்' என்று.*

## மூ.171.இதிலே திருமேனியையும் கு₃ணங்களையும் சொல்லும்.

வ்யா:-*அதாவது-கைங்கர்யப்ரதிஸம்ப₃ந்தி₄யைச்சொல்லு கிற இப்பத₃த்திலே. கைங்கர்யத்துக்குப் பூர்வப₄ாவியா யிருக்கும் அநுப₄வத்துக்கு விஷயமான தி₃வ்யமங்க₃ள விக்₃ர ஹத்தையும். கல்யாண கு₃ணங்களையும் சொல்லும்–என்கை. 138.* "**सदा पश्यन्ति**" *(ஸதா₃ பஶ்யந்தி) என்றும். 139.* "**सोऽश्नुते सर्वान् कामान्**" *(ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந்) என்றும் இத்யாதி₃களிற் சொல்லுகிறபடியே தி₃வ்யமங்க₃ள விக்₃ரஹ மும் கல்யாண கு₃ணங்களும். 140.*"**रसं ह्येवायं लब्ध्वानन्दी भवति**" *(ரஸம் ஹ்யேவாயம் லப்₃த்₄வாऽऽநந்தீ₃ ப₄வதி) என்கிற ஸ்வ ரூபத்தோபாதி கைங்கர்ய வர்த்த₄கங்களுமாய். போ₄க்₃யங் களுமாயிறே இருப்பது; 'கு₃ணங்கள்' என்று ஸாமாந்யேந சொல்லுகையாலே ஜ்ஞாநஶக்த்யாதி₃ கு₃ணங்களோடு வாத் ஸல்யாதி₃ கு₃ணங்களோடு ஸௌர்யாதி₃கு₃ணங்களோடுவாசி யற எல்லா கு₃ணங்களும் அநுப₄ாவ்யங்களாயிருக்கையாலே பூர்வவாக்யத்தில் நாராயணபத₃த்தில் உபாயவரணத்துக்கு உபயுக்ததயா அநுஸந்தே₄யங்களான கு₃ணவிஶேஷங்களும் இப்பத₃த்தில் ப்ராப்யதயா அநுஸந்தே₄யங்கள்; ஆஶ்ரயமான ஸ்வரூபத்துக்கு ஆகாரத்₃வயமுண்டாயிருக்கிறுப்போலே,*

ஆஶ்ரயிகளான கு₃ணவிஶேஷங்களுக்கும் ஆகாரத்₃வயமும் உண்டாயிறேயிருப்பது. இவையெல்லாம் பரந்தபடியிலே அருளிச்செய்தார்.

இனி, இப்பத₃த்துக்குத் தாத்பர்யம் இன்னதிலே என்கிறார் 'ஶேஷித்வத்திலே நோக்கு' என்று.

**மூ. 172. சேஷித்வத்திலே நோக்கு.**

வ்யா:—அதாவது—அநுபூ₄ர்வ்யத்வம் அவிஶிஷ்டமாகையாலே ஸகலகு₃ணங்களும் ப்ரதிபாதிதமாயிருந்ததேயாகிலும், சதுர்த்₂யம்ஶத்தில் சொல்லுகிற வ்ருத்திவிஶேஷத்துக்கு மிகவும் அந்தரங்க₃மாயிருப்பது ஶேஷித்வமாகையாலே, அதிலே இப்பத₃த்துக்கு நோக்கு—என்கை.

இந்த ஶேஷித்வ கத₂நத்துக்கு ப்ரயோஜநமருளிச்செய்கிறார்,'ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது'என்று.

**மூ.173.ப்ராப்தவிஷயத்தில் கைங்கர்யமிறே ரஸிப்பது.**

வ்யா:-அதாவது-141. "सर्वं परवशं दुःखं"(ஸர்வம் பரவஶம் து₃:க்க₂ம்) என்றும், 142."सेवा श्ववृत्तिः" (ஸேவா ஶ்வவ்ருத்தி: என்றும் சொல்லுகிறபடியே நிஷித்₃த₄மான அப்ராப்த விஷயத்தில் கைங்கர்யம்போலன்றிக்கே, 143."छाया वा सत्त्वमनुगच्छेत्" (சா₂யா வா ஸத்வ மநுக₃ச்சே₂த்) என்றும், 144. "सा किमर्थं न सेव्यते"(ஸா கிமர்த்த₂ம் ந ஸேவ்யதே)என்றும் சொல்லுகிறபடியே, விஹிதமான ப்ராப்தவிஷயத்தில் பண்ணும் கைங்கர்யமிறே இவனுக்கு ரஸிப்பது—என்கை.

இனி இப்பத₃த்தில் விப₄க்த்யம்ஶத்துக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார், 'இந்தச் சதுர்த்தி₂' என்று தொடங்கி.

**மூ. 174. இந்தச் சதுர்த்தி₂. கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது.**

வ்யா:—அதாவது—ஶேஷத்வ ஜ்ஞாநகார்யமான உபாய பரிக்₃ரஹத்துக்கு அநந்தரம் ப்ராப்தமாயுள்ளதாகையாலே, தாத₃ர்த்₂யப்ரதிபாத₃கமன்றிக்கே. இந்தச் சதுர்த்தி₂ பரிக்₃ரஹித்த உபாயத்தினுடைய ப₂லமான கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது-என்கை. கைங்கர்யத்தை ப்ரகாஶிப்பிக்கையாவது—கைங்கர்ய ப்ரார்த்த₂னையை ப்ரதிபாதி₃க்கை. கைங்கர்யமாவது-ப₄க₃வந் முக₂விகாஸ ஹேதுவான வ்ருத்திவிஶேஷம். இக்கைங்கர்யந்தான் 145. "एतत्साम गायन्नास्ते" (ஏதத் ஸாம கா₃யந்நாஸ்தே) என்றும், 146. "नम इत्येव वादिनः" (நம இத்யேவ வாதி₃ந:) என்றும். 147. "येन येन धाता गच्छति तेन तेन सह गच्छति"(யேந யேந தா₄தா க₃ச்ச₂தி தேந தேந ஸஹ க₃ச்ச₂தி) என்றும் இத்யாதி₃களில் சொல்லுகிறபடியே வாசிககாயிகரூபமாயிருக்கும்.

இக்கைங்கர்யம் ப்ரார்த்த₂நீயமாகில் காத₃ாசித்கமாகாதோ?' என்ன, அருளிச்செய்கிறார் 'கைங்கர்யந்தான் நித்யம்' என்று.

மூ. 175. கைங்கர்யந்தான் நித்யம்.

வ்யா:—அதாவது—ஶேஷத்வமே ஆத்மாவுக்கு ஸ்வரூபமாகையாலும், 148. "अकिञ्चित्करस्य शेषत्वानुपपत्तिः" (அகிஞ்சித்கரஸ்ய ஶேஷத்வாநுபபத்தி:) என்கிறபடியே கிஞ்சித்காராபாவத்தில் அது தான் அநுபபந்நமாகையாலும், கைங்கர்யம் ஆத்மாவுக்கு நித்யம்-என்கை. ஆகையாலிறே, 149."नित्यकिङ्करः प्रहर्षयिष्यामि"(நித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி) என்றும், "नित्यकिङ्करो भवानि" (நித்யகிங்கரோ ப₄வாநி) என்றும் ஆசார்யர்கள் அருளிச்செய்தது.

நித்யமாயிருக்குமாகில் ப்ரார்த்தி₂க்கவேணுமோ?' என்ன அருளிச்செய்கிறார் 'நித்யமாக ப்ரார்த்தி₂த்தே பெறவேணும்' என்று.

மூ. 176. நித்யமாக ப்ரார்த்தி₂த்தே பெறவேணும்.

அதாவது—விஷயம் * உத்துங்க₃மாயிருக்கையாலும், ஆஶ்ரயபூ₄தனான சேதநன் அத்யந்த பரதந்த்ரனாயிருக்கையாலும் ப்ரார்த்த₂நாவிஶேஷம் இல்லாதபோது கைங்கர்யம் ஸித்₃தி₄யாமையாலும், நித்யமாக ப்ரார்த்தி₂த்தே பெற வேணும்—என்கை.

இது நித்யப்ரார்த்த₂நீயமாகைக்கு நித₃ாநத்தை அருளிச்செய்கிறார் 'ஶேஷிக்கு' என்று தொடங்கி.

**மூ. 177. ஶேஷிக்கு அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூ₄தனுக்கு ஸ்வரூபலாப₄மும், ப்ராப்யமும்.**

வ்யா:-அதாவது-151. "नाकिञ्चित्कुर्वतः शेषत्वं" (நாகிஞ்சித் குர்வதஶ்ஶேஷத்வம்) என்கிறபடியே ஶேஷிக்கு அதிஶயகரமல்லாத வஸ்துவுக்கு ஶேஷத்வம் இல்லாமையாலே, ஶேஷியான ஈஶ்வரனுக்குத் தன்னுடைய வ்ருத்தி விஶேஷங்களாலே ப்ரீதிரூபமான அதிஶயத்தை விளைக்கை ஶேஷபூ₄தனானவனுக்குத் தன் ஸ்வரூபலாப₄முமாய் அவனுடைய முகோ₂ல்லாஸாநுப₄வத்துக்குஉறுப்பாயிருக்கையாலே ப்ராப்யமுமாயிருக்கும்-என்கை. ஆகையாலே, நித்யப்ரார்த்த₂நீயமாயிருக்குமென்று கருத்து.

அநந்தரம், சரமபத₃த்தை உபாத₃ாநம் பண்ணுகிறார் 'நம:' என்று. அதுக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார், 'கைங்கர்யத்தில் களையறுக்கிறது' என்று.

**மூ. 178. நம:-கைங்கர்யத்தில் களையறுக்கிறது.**

வ்யா:-அதாவது-நமஶ்ஶப்₃த₃ம் ஸாமாந்யேந அஹங்கார மமகாரங்களைக் கழிக்கையாலே, திருமந்த்ரத்தில் மத்₄யம பத₃மான நமஶ்ஶப்₃த₃ம்போலே ஸ்வரூப உபாய புருஷார்த்த₂ விரோதி₄கள் மூன்றையும் கழிக்கவற்றாயிருந்ததேயாகிலும், இங்கு அங்ஙனன்றிக்கே, கைங்கர்யப்ரார்த்த₂நாநந்தரோக்த

*(பா) உத்துங்க₃ தத்வமாயிருக்கையாலும்.

மாகையாலே, இந்தக் கைங்கர்யத்தில் விரோதி₄யைக் கழிக்கிறது—என்கை.

'கைங்கர்யத்துக்குக் களை எது?' என்ன அருளிச்செய்கிறார் 'களையாவது தனக்கென்னப்பண்ணுமது' என்று.

### மூ.179. களையாவது-தனக்கென்னப் பண்ணுமது.

வ்யா:-தனக்கென்னப்பண்ணுகையாவது-152. "भोक्ताऽहं, मम भोग्यं"(போ₄க்தாஹம், மம போ₄கே₃ாயம்) என்கிறபடியே. இத்தைத் தன்னுடைய ரஸத்துக்கு உறுப்பாக நினைத்துப் பண்ணுகை; ப₄க₃வான் முக₂விகாஸஹேதுவாகையாலே இது நமக்கு ஆத₃ரணீயம் என்கிற ப்ரதிபத்தியொழிய. இதில் போ₄க்த்ருத்வ ப்ரதிபத்தியும், மதீ₃யத்வ ப்ரதிபத்தியும் நடக்குமாகில், அபுருஷார்த்த₂மாயிறே இருப்பது.

இன்னமும் இந்தக் கைங்கர்ய ப்ராப்திக்கு விரோதி₄களானவையும் இதிலே தள்ளுண்ணும் என்கிறார் 'இதிலே அவித்₃யாதி₃களும் கழியுண்ணும்' என்று.

### மூ.180. இதிலே அவித்₃யாதி₃களும் கழியுண்ணும்.

வ்யா:—அதாவது—அஹங்கார மமகார நிவ்ருத்தியை ப்ரார்த்திக்கிற இந்நமஸ்ஸிலே. 153. "अनात्मन्यात्मबुद्धिर्या अस्वे स्वमिति या मतिः। अविद्यातरुसंभूतिबीजमेतत् द्विधा स्थितम्॥" (அநாத்மந்யாத்மபு₃த்₃தி₃ர்யா அஸ்வே ஸ்வமிதி யா மதி:। அவித்₃யா தருஸம்பூ₄திபீ₃ஜமேதத் த்₃விதா₄ ஸ்தி₂தம்) என்கிறபடியே அநாத்மந்யாத்ம பு₃த்₃த்₄யாதி₃களை வடிவாகவுடைத்தாய்க் கர்மோத்பத்தி - காரணமாயிருந்துள்ள அவித்₃யையும், தத்கார்யமானகர்மங்களும், தத்கார்யமாய்வரும் ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மும் எல்லாம் கழியுண்ணும்—என்கை. ஆகையிறே, த்₃வயவிவரணமான க₃த்₃யத்திலே நமஶ்ஶப்₃த₃ார்த்த₂த்தை அநுஸந்தி₄த்தருளுகிறவளவில், 154. "मनोवाक्कायैः" (மநோவாக்காயை:) இத்யாதி₃ சூர்ணையாலே,

அக்ருத்யகரணத்₃யகி₂ல கர்மநிவ்ருத்தியையும், 155. "अनादि-कालप्रवृत्त" (அநாதி₃காலப்ரவ்ருத்த) இத்யாதி₃ சூர்ணையாலே, அவித்₃யா நிவ்ருத்தியையும், 156. "मदीयानादि"(மதீ₃யாநாதி₃) இத்யாதி₃ சூர்ணையாலே, ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄ நிவ்ருத்தியையும் பா₄ஷ்யகாரர் ப்ரார்த்தி₂த்தருளிற்று.

ஆனாலும் இதுக்கு ப்ரதா₄நார்த்த₂ம் கைங்கர்யத்தில் ஸ்வப்ரயோஜநநிவ்ருத்தியாகையாலே, அத்தை உபபாதி₃க்கிறார்மேல். அதில் ப்ரத₂மத்திலே 'கைங்கர்யம் பண்ணும்போது தான் எப்படியாகவேணும்? என்ன, அருளிச்செய்கிறார் *'உனக்கே நாமாட்செய்வோம்' என்னும்படியேயாக வேணும்'' என்று.

மூ. 181. "உனக்கே நாமாட்செய்வோம்" என்னும்படியே ஆகவேணும்.

வ்யா:-அதாவது-கைங்கர்யம் பண்ணுமளவில் *'உனக்கே நாமாட்செய்வோம்' என்று, 'உனக்கும் எங்களுக்குமாயிருக்கும் இருப்புத்தவிர்ந்து, உனக்கேயுகப்பாக நாங்கள் அடிமை செய்யவேணும் என்கிறபடியே, ஶேஷிக்கே உகப்பாகப் பண்ணவேணும்—என்கை. ||"தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்றிறே ஆழ்வாரும் அருளிச்செய்தது.

இனி, இந்தக் கைங்கர்யத்துக்கு விக்₄நங்களை அருளிச்செய்கிறார் 'ஸௌந்த₃ர்யம்' இத்யாதி₃ வாக்யத்₃வயத்தாலே.

மூ. 182. ஸௌந்த₃ர்யம் அந்தராயம்; கீழ்ச்சொன்ன கைங்கர்யமும் அப்படியே.

வ்யா:-அதாவது-அவனுடைய விக்₃ரஹஸௌந்த₃ர்யமும் சித்தாபஹாரியாய்க் கைசோரப்பண்ணுகையாலே, கைங்கர்யத்துக்கு விக₄நம்; இந்நமஸ்ஸுக்குக் கீழே சதுர்த்தி₂யிற் சொன்ன கைங்கர்யமும் அபி₄மதவிஷயபரிசர்யைபோலே

* திருப்பாவை-29. || திருவாய் 2-9-4.

ஸ்வரஸத்துக்கு உடலாயிருக்கையாலே. அவனுடைய முக₂மலர்த்தியே ப்ரயோஜநமாக / இருக்குமதுக்கு அதுவும் விக்₄நம்—என்கை.

இப்படியாகையால், இவ்விரோதி₄நிவ்ருத்தி ப்ரார்த்த₂னை இடைவிடாமல் நடக்கும்படியை அருளிச்செய்கிறார் 'கைங்கர்யப்ரார்த்த₂னைபோலே' என்று தொடங்கி.

**மூ. 183. கைங்கர்ய ப்ரார்த்தனைபோலே, இப்பத₃த்தில் ப்ரார்த்தனையும் என்றுமுண்டு.**

**வ்யா:**—அதாவது-சதுர்த்தி₂யிற் சொல்லுகிற கைங்கர்ய ப்ரார்த்த₂னை காத₃ாசித்கமன்றிக்கே நித்யமாய்ச் செல்லுமா போலே, இப்பத₃த்திற் சொல்லுகிற கைங்கர்யவிரோதி₄ நிவ்ருத்திப்ரார்த்த₂னையும், இங்கிருக்கும் காலத்தோடு ப்ராப்யபூ₄மியிற் போன காலத்தோடு வாசியற எல்லாக் காலமும் நடக்கக்கடவதாயிருக்கும்—என்கை.

'கந்தல் கழிந்த அந்நிலத்திலும் ஸ்வபோ₄க்த்ருத்வ உத₃யம் உண்டாமோ?' என்ன, அருளிச்செய்கிறார் "'மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு' என்னுநின்றதிறே" என்று.

**மூ. 184. "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்னுநின்றதிறே.**

த்₃வயப்ரகரணம் முற்றிற்று.

பிள்ளைலோகாசாரியர் திருவடிகளே சரணம்.

**வ்யா:**-அதாவது-உன்னுடைய அநுப₄வத்தாலே எங்களுக்கு வரும் ஆநந்த₃த்துக்கு ஸ்வபோ₄க்த்ருத்வபு₃த்₃தி₄யை விளைத்து, ஸ்வரூபத்தை அழியாதபடி ஸாத்மிப்பிக்கும் பே₄ஷஜமானவனே! என்று நித்யஸூரிகள் பேசும் பாசுர

/ (பா) உடையவனுக்கு.

மாகச் சொல்லாநின்றதிறே—என்கை. ஆகையால் அவ் விஷய வைலக்ஷண்ய ப்ரயுக்தமாய் வரும் ஸ்வபோ₄க்த்ருத்வ பு₃த்₃தி₄ அங்கும் விளேகையாலே. இப்பத₃த்தில் ப்ரார்த்த₂னை என்றுமுண்டு என்னுமிடம் ஸித்₃த₄மென்றதாயிற்று. ஆகையிறே முக்தர்க்கு லக்ஷணம் சொல்லுகிறவிடத்திலே 157. "नम इत्येव वादिनः" (நம இத்யேவ வாதி₃ந:) என்றது.

ஆக. புருஷகாரத்தையும். தந்நித்யயோக₃த்தையும், தது₃த்₃பா₄விதமான வாத்ஸல்யாதி₃ கு₃ணங்களேயும். அந்த கு₃ணப்ரகாசகமான தி₃வ்யமங்க₂ள விக்₃ரஹத்தையும். கு₃ண விக்₃ரஹ விசிஷ்ட வஸ்துவினுடைய உபாயத்வத்தையும், அவ்வுபாய ஸ்வீகாரத்தையும், தத்ப₂லமான கைங்கர்யத்துக்கு ப்ரதிஸம்ப₃ந்தி₄ ஒருமிது₂நமென்னுமத்தையும், அவ்வஸ்து வினுடைய ஸர்வசேஷித்வத்தையும். தத்₁விஷய கைங்கர் யத்தையும். கைங்கர்யவிரோதி₄ நிவ்ருத்தியையும் சொல்லிற்றாயிற்று.

த்₃வயப்ரகரண வ்யாக்₂யாநம் முற்றிற்று.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

# முமுக்ஷுப்படி—சரமச்லோக ப்ரகரணம்

## வ்யாக்₂யாந அவதாரிகை

மத்₄யமரஹஸ்யமான த்₃வயத்தினுடைய அர்த்த₂த்தை அருளிச்செய்த அநந்தரம் அதில் பூர்வவாக்யத்திற் சொல்லு கிற உபாயவரணம் ஸர்வேச்வரன் தானே விதி₄க்கையாலே தத₃பி₄மதமென்னுமத்தையும்,வரணாங்க₃மான ஸாத₄நாந்தர பரித்யாக₃த்தையும். வரணத்தில் ஸாத₄நத்வபு₃த்₃தி₄ ராஹித் யத்தையும் சாப்₃த₃மாகப் பூர்வார்த்த₄த்தாலே ப்ரதிபாதி₃க் கையாலும். உத்தரவாக்யத்தில் சொல்லுகிற கைங்கர்யத்துக் குப் பூர்வபா₄வியான ப்ராப்திப்ரதிப₃ந்த₄க ஸகலபாபவிமோச

நத்தையும், உத்தரார்த்த₄த்தாலே ஸாப்₃த₃மாக ப்ரதிபாதி₃க்கையாலும், த்₃வயத்துக்கு விவரணமாய், பஞ்சம வேத₃ஸார பூ₄தகீ₃தோபநிஷத்தாத்பர்யமாய், சரமரஹஸ்யமாய் இருந்துள்ள சரமஶ்லோகத்தினுடைய அர்த்த₂த்தை ஸம்ஶய விபர்யயமற அருளிச்செய்கிறார்.

இதில் அர்த்த₂ங்கேட்கைக்காகவிறே—எம்பெருமானார் பதினெட்டுப்பர்யாயம் திருக்கோட்டியூர் நம்பிபக்கல் எழுந்தருளிற்று.

நம்பிதாமும் இதில் அர்த்த₂த்தினுடைய கௌ₃ரவத்தையும் இதுக்கு அதி₄காரிகள் இல்லாமையும் பார்த்திறே—இவருடைய ஆஸ்திக்யஆத₃ர பரீக்ஷார்த்த₂மாகப் பலகால் நடந்து துவளப்பண்ணிச் சூளுரவுகொண்டு மாஸோபவாஸங்கொண்டு அருமைப்படுத்தி அருளிச்செய்தருளிற்று.

நிஷ்க்ருஷ்ட ஸத்வநிஷ்ட₂னாய், பரமாத்மநி ரக்தனாய், அபரமாத்மநி வைராக்₃யமுடையனாய், ப்ரமாண பரதந்த்ரனாய், ப₄க₃வத்₃வைப₄வம் ஶ்ருதமானால் அது உபபந்நமென்னும்படியான விஸ்ரம்ப₄ப₃ாஹுள்யமுடையனாய், ஆஸ்திக அக்₃ரேஸரனாயிருப்பான் ஒருவனுண்டாகில் அவன் இந்த ஶ்லோகார்த்த₂ஶ்ரவண அநுஷ்ட₂ாநத்துக்கு அதி₄காரியாகையாலே, அதி₄காரி து₃ர்லப₄த்வத்தாலும் அர்த்த₂ கௌ₃ரவத்தாலும் இத்தை வெளியிடாதே மறைத்துக்கொண்டு போந்தார்கள் எம்பெருமானாருக்கு முன்புள்ளார்; ஸம்ஸாரிகள் து₃ர்க்க₃தி கண்டு பொறுக்கமாட்டாதபடி க்ருபை கரைபுரண்டிருக்கையாலே, அர்த்த₂த்தின் சீர்மைபாராதே அநர்த்த₂க்கையே பார்த்து வெளியிட்டருளினார் எம்பெருமானார்.

அப்படி உபதேஶித்துவிடுகிறமாத்ரமுமின்றிக்கே, இவ்வர்த்த₂த்தை எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்கவேணுமென்னும் பரமக்ருபையாலேயிறே, இதுதன்னைப் பலப்ரப₃ந்த₄ங்களிலும் ஸங்க்₃ரஹ விஸ்தரரூபேண இவர் அருளிச்

*செய்தது. மற்றுள்ள ப்ரபந்தங்கள் எல்லாவற்றிலும் போலன்றிக்கே ஸ்த்ரீபாலர்களுக்கும் அதிகரிக்கலாம்படி தெளிய அருளிச்செய்தது, இப்ரபந்தத்திலேயிறே.*

அவதாரிகை முற்றிற்று.

*இதில் ப்ரதமத்திலே இந்த ஶ்லோகார்த்தத்தினுடைய கௌரவத்தை எல்லாருடைய நெஞ்சிலும் படுத்துகைக்காக, இது தனக்குச் சரமஶ்லோகமென்று திருநாமமாகைக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் 'கீழே சில உபாயவிஶேஷங்களை' என்று தொடங்கி.*

**மூ. 185.** கீழே சில உபாயவிஶேஷங்களை உபதேஶிக்க, ஆவை துஶ்ஶகங்களென்றும், ஸ்வரூப விரோதிகளென்றும் நினைத்து ஶோகாவிஷ்டனான அர்ஜுநனைக்குறித்து, அவனுடையஶோகநிவ்ருத்த்யர்த்தமாக 'இனி இதுக்குஅவ்வருகில்லை' என்னும்படியான சரமோபாயத்தைஅருளிச்செய்கையாலே, சரமஶ்லோகமென்று இதுக்குப் பேராயிருக்கிறது.

**வ்யா:-** *அதாவது-இந்த ஶ்லோகத்துக்குக் கீழேஅநேகாத்யாயங்களிலே கர்மஜ்ஞாநாதிகளான சில உபாய விஶேஷங்களை ஸ்வப்ராப்திலக்ஷண மோக்ஷஸாதநமாக விஸ்தரேண உபதேஶித்தருளக்கேட்டு, காயக்லேஶ ரூபமாகையாலும், இந்த்ரியஜயம் அரிதாகையாலும், ஸாவதாநமாகச் சிரகாலம் ஸாதிக்கவேண்டியிருக்கையாலும் அவை அநுஷ்டிக்க அஶக்யங்களென்றும், ஸ்வஶரீரத்வ கதநாதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்ட பரதந்த்ரமான ஸ்வரூபத்துக்கு ஸ்வயத்நரூபங்களான இவை விரோதிகளென்றும் புத்திபண்ணி, 'இவற்றாலே எம்பெருமானைப் பெற என்பது ஒன்றில்லை; இனி இழந்தேபோமித்தனையாகாதே' என்கிற ஶோகத்தாலே ஆவிஷ்டனான அர்ஜுநனைக் குறித்து, அவனுடைய அந்த ஶோகம் போகைக்காக, 'ஸுஶகத்வத்தாலும், ஸ்வரூபாநு*

ரூபதையாலும் இனி இதுக்குமேலில்லை' என்னும்படியான சரமமான உபாயத்தை அருளிச்செய்கையாலே, சரமஶ்லோக மென்று இதுக்குத் திருநாமமாயிருக்கிறது—என்கை.

இனி. இஶ்லோகத்துக்கு வாக்யார்த்த₂ம் அருளிச்செய் கிறார் 'இதில் பூர்வார்த்த₄த்தாலே' என்றுதொடங்கி.

**மூ. 186. இதில் பூர்வார்த்த₄த்தாலே அதி₄காரி க்ருத்யத்தை அருளிச்செய்கிறான்; உத்தரார்த்த₄த்தாலே உபாயக்ருத்யத்தை அருளிச்செய்கிறான்.**

வ்யா:—அதாவது—அர்த்த₄த்₃வயாத்மகமான இந்தஶ்லோ கத்தில் பூர்வார்த்த₄த்தாலே இவ்வுபாயத்துக்கு அதி₄காரி யானவன் செய்யும் அம்ஶத்தை அருளிச்செய்கிறான்; உத்த ரார்த்த₄த்தாலே உபாயபூ₄தனான தான் இவனுக்குச்செய்யும் அம்ஶத்தை அருளிச்செய்கிறான்—என்கை.

'அதி₄காரிக்ருத்யமாவது எது?' என்ன அருளிச்செய்கிறார் 'அதி₄காரிக்கு க்ருத்யமாவது—உபாயபரிக்₃ரஹம்' என்று.

**மூ. 187. அதி₄காரிக்கு க்ருத்யமாவது—உபாய பரிக்₃ரஹம்.**

வ்யா:—அதாவது—அதி₄காரியானவனுக்கு இங்குச் செய்யத்தக்கது இவ்வுபாயத்தை ஸ்வீகரிக்கை—என்கை.

'ஆனால், அவ்வளவை விதி₄யாதே உபாயாந்தர பரித் யாக₃ம் சொல்லுவானென்?' என்ன, அருளிச்செய்கிறார், 'அத்தை ஸாங்க₃மாக விதி₄க்கிறான்' என்று.

**மூ. 188. அத்தை ஸாங்க₃மாக விதி₄க்கிறான்.**

வ்யா:—அதாவது—அந்த உபாய ஸ்வீகாரத்தை உபா யாந்தர பரித்யாக₃மாகிற அங்க₃த்தோடேகூட விதி₄க்கிறான்—என்கை. 158. "प्रक्षाल्य पादावाचामेत् स्नात्वा विधिवदर्चयेत्। स्थित्वार्घ्यं भानवे दद्यात् ध्यात्वा देवं जपेन्मनुं॥" (ப்ரக்ஷாள்ய பாத₃ௗ வாசாமேத் ஸ்நாத்வா விதி₄வத₃ர்ச்சயேத்। ஸ்தி₂த்வார்க்₄யம்

ப₄ாநவே த₃த்₃யாத் த்₄யாத்வா தே₃வம் ஜபேந்மநும்||)என்று ஆசமநாதி₃களுக்கு அங்க₃மாகச்சொன்ன பாத₃ப்ரக்ஷாளநாதி₃யொழிய அவை அநுஷ்டி₂க்கவொண்ணுதாற்போலே. இங்கும் ல்யபு₃ந்தபத₃த்தாலே அங்க₃மாகச் சொல்லுகிற உபாயாந்தர த்யாக₃த்தையொழிய ஸ்வீகாரம் அநுபபந்நம் என்னுமிடம் ஸித்₃த₄மிறே. ஆகையால், "ஸர்வத₄ர்மாந் பரித்யஜ்ய ஸ்தி₃தஸ்சேத்' என்று து₃ஷ்கரத்வ பு₃த்₃தி₄யாலே ஸ்வத:ப்ராப்தமான உபாயாந்தரபரித்யாக₃த்தை அநுவதி₃த்து ஸித்₃தே₄பாயஸ்வீகாரத்தை விதி₄க்கிறதென்கிற அநுவாத₃பக்ஷம் அயுக்தம்—என்றதாயிற்று.

'ஆனுல். ஸௌலப₄த்வாதி₃களாலே ராக₃ப்ராப்தமான இதுக்கு விதி₄தான் வேணுமோ?' என்ன. அருளிச்செய்கிறுர் 'ராக₃ப்ராப்தமான' என்றுதொடங்கி.

**மூ. 189. ராக₃ப்ராப்தமான உபாயந்தானே வைத₄மானுல் கடுகப்பரிக்₃ரஹிக்கைக்கு உடலாயிருக்குமிறே.**

வ்யா:- அதாவது—பே₄ாக்₃யதையாலே ராக₃ப்ராப்தமான க்ஷீரத்தைப் பித்தரோக₃த்துக்கு மருந்தாகக் கொடுக்கச் சொல்லி விதி₄த்தால் ஸீக்₄ரமாகக் கைக்கொள்ளுகைக்கு உடலாமாபோலே. உபாயாந்தரங்களிற் காட்டில் இதுக்கு உண்டான வைலக்ஷண்யத்தாலே சேதநனுடைய ராக₃த: ப்ராப்தமாயிருந்துள்ள உபாயந்தானே இத்தை ஸ்வீகரியென்னும் விதி₄ப்ரயுக்தமுமானுல் ஸீக்₄ரமாக ஸ்வீகரிக்கைக்கு உடலாயிருக்குமிறே—என்கை.

இனி, இதுக்கு ப்ரதிபத₃ம் அர்த்த₂ம் அருளிச்செய்வதாக, பூர்வார்த்த₄ பத₃ஸங்க்₂யையை அருளிச்செய்கிறுர் 'இதில் பூர்வார்த்த₄ம் ஆறுபத₃ம்' என்று.

**மூ. 190. இதில் பூர்வார்த்த₄ம் ஆறு பத₃ம்.**

அதில் ப்ரத₂மபத₃த்தை உபாத₃ாநம் பண்ணுகிறுர் 'ஸர்வ த₄ர்மாந்' என்று. அதுக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறுர், 'எல்லா த₄ர்மங்களையும்' என்று.

**மூ. 191. ஸர்வத₄ர்மாந்-எல்லா த₄ர்மங்களையும்.**

*அதுதான் த₄ர்மமும் ப₃ஹுவசநமும் ஸர்வஶப்₃த₃முமாய் த்ரிப்ரகாரமாயிருக்கையாலே இம்மூன்றுக்கும் அர்த்த₂ம் அருளிச்செய்வதாக. ப்ரத₂மம் த₄ர்மலக்ஷணத்தை அருளிச் செய்கிறார் 'த₄ர்மமாவது-ப₂லஸாத₄நமாயிருக்குமது' என்று.*

**மூ. 192. த₄ர்மமாவது-ப₂லஸாத₄நமாயிருக்குமது.**

*த₄ர்ம ஶப்₃த₃ம் த்₃ருஷ்டப₂ல ஸாத₄நத்திலும் வ்யாப்த மாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கிறார் 'இங்குச் சொல்லு கிற த₄ர்ம ஶப்₃த₃ம்' என்றுதொடங்கி.*

**மூ.193. இங்குச் சொல்லுகிற த₄ர்மஶப்₃த₃ம் த்₃ருஷ்ட ப₂லஸாத₄நங்களைச் சொல்லுகையன்றிக்கே, மோக்ஷ ப₂லஸாத₄நங்களைச் சொல்லுகிறது.**

**வ்யா:**–*அதாவது-பூர்வோபாயங்கள்தன்னை உபதே₃ஶிக் கிறபோதே த்₃ருஷ்டப₂ல ஸாத₄நங்கள் வ்யாவ்ருத்தங்க ளாகையாலும், மோக்ஷோபாயங்களை உபதே₃ஶித்து வருகிற ப்ரகரணமாகையாலும், இவ்விடத்திற் சொல்லுகிற த₄ர்ம ஶப்₃த₃ம் புத்ரபஶ்வந்நாதி₃ ஐஹிகமாயும், ஸ்வர்க்கா₃தி₃ ஆமுஷ்மிகமாயும் இருந்துள்ள த்₃ருஷ்டப₂லங்களுக்கு ஸாத₄நங்களானவற்றைச் சொல்லுகையன்றிக்கே, ப₄க₃வத் ப்ராப்திரூபமான மோக்ஷ ப₂லத்துக்கு ஸாத₄நமாயுள்ள வற்றைச் சொல்லுகிறது—என்கை.*

*இனிமேல், ப₃ஹுவசநார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் 'அவைதான்' என்று தொடங்கி.*

**மூ. 194. அவைதான்–ஶ்ருதிஸ்ம்ருதி விஹிதங்க ளாய்ப் பலவாயிருக்கையாலே ப₃ஹுவசநப்ரயோக₃ம் பண்ணுகிறது.**

**வ்யா:**— *அதாவது-அந்த மோக்ஷப₂லஸாத₄னங்கள்தாம் உபப்₃ரும்ஹ்ய உபப்₃ரும்ஹணங்களாயிருந்துள்ள ஶ்ருதி ஸ்ம்ருதிகளாலே விஹிதங்களாய்க்கொண்டு அநேகங்களாய்*

இருக்கையாலே. 'த₄ர்மாந்' என்று, ப₃ஹுவசநப்ரயோக₃ம் பண்ணுகிறது—என்கை.

'அப்படியிருந்துள்ளவைதாம் எவை?' என்ன, அருளிச்செய்கிறார் 'அவையாவன' என்றுதொடங்கி.

மூ.195. அவையாவன-கர்மஜ்ஞாந ப₄க்தியோக₃ங்களும், அவதார ரஹஸ்யஜ்ஞாநம், புருஷோத்தம வித்₃யை, தே₃ஶவாஸம், திருநாமஸங்கீர்த்தநம், திருவிளக்கெரிக்கை, திருமாலையெடுக்கை தொடக்கமான உபாய பு₃த்₃த்₄யா செய்யுமவையும்.

வ்யா:—அதாவது-கீழ் பலவாகச் சொல்லப்பட்ட அவையாவன, 159 'कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः। तस्मादसक्तस्सततं कार्यं कर्म समाचर॥"(கர்மணைவ ஹி ஸம்ஸித்₃தி₄மாஸ்தி₂தா ஜநகாத₃ய:। தஸ்மாத₃ஸக்தஸ்ஸததம் கார்யம் கர்ம ஸமாசர) என்று ஸ்வதந்த்ர ஸாத₄நமாக உக்தமான கர்மயோக₃மும், 160."सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते" (ஸர்வம் கர்மாகி₂லம் பார்த்த₂ ஜ்ஞாநே பரிஸமாப்யதே) 161. "न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते। ज्ञानाग्निस्सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा॥"(ந ஹி ஜ்ஞாநேந ஸத்₃ருஶம் பவித்ரமிஹ வித்₃யதே। ஜ்ஞாநாக்₃நிஸ் ஸர்வகர்மாணி ப₄ஸ்மஸாத் குருதே தத₂ா॥) என்று சொல்லப்பட்ட கர்மஸாத்₄யமான ஜ்ஞாநயோக₃மும், 162."भक्त्या त्वनन्यया शक्यः" (ப₄க்த்யா த்வநந்யயா ஶக்ய:) 163"मन्मना भव मद्भक्तः"(மந்மநா ப₄வ மத்₃ப₄க்த:) இத்யாதி₃களாலே சொல்லப்பட்ட கர்மஜ்ஞாந ஸஹக்ருதமான ப₄க்தியோக₃மும் ஆகிற இவையும், 164. "जन्म कर्म च मे दिव्यं एवं यो वेत्ति तत्त्वतः। त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन॥" (ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:। த்யக்த்வா தே₃ஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந॥)என்று விரோதி₄நிவ்ருத்தி பூர்வகமான ப₄க₃வத்ப்ராப்திக்கு ஸாத₄நமாகச் சொல்லப்பட்ட அவதார ரஹஸ்யஜ்ஞாநம், 165. "एतद्बुद्ध्वा बुद्धिमान् स्यात् कृतकृत्यश्च भारत" (ஏதத்₃ பு₃த்₃த்₄வா பு₃த்₃தி₄மாந் ஸ்யாத் க்ருதக்ருத்யஶ்ச ப₄ாரத) என்று

அபி4மத ப2லலாப4த்தாலே க்ருதக்ருத்யனுக்குமென்கிற புருஷோத்தமவித்3யை. 166. "देशोऽयं सर्वकामधुक्" (தே3ஶோऽயம் ஸர்வகாமது4க்) என்று ஸர்வகாம ப2ல ப்ரத3மாகச் சொல்லுகிற புண்யக்ஷேத்ரவாஸம் 167. "सर्वपापविशुद्धात्मा याति ब्रह्म सनातनम्" (ஸர்வபாப விஶு2த்3தா4த்மா யாதி ப்3ரஹ்ம ஸநாதநம்) என்று ஸர்வபாபவிமோசந பூர்வகமான ப4க3வத் ப்ராப்தியைப் ப2லமாகச் சொல்லுகிற திருநாமஸங்கீர்த்தநம். 168. "घृतेन वाऽथ तैलेन दीपं यो ज्वालयेन्नरः। विष्णवे विधिवद्भक्त्या तस्य पुण्यफलं शृणु॥ विहाय सकलं पापं सहस्रादित्यसन्निभः। ज्योतिष्मता विमानेन विष्णुलोके महीयते॥" (க்4ருதேந வாऽத2 தைலேந தீ3பம் யோ ஜ்வாலயேந்நர:। விஷ்ணவே விதி4வத்3 ப4க்த்யா தஸ்ய புண்ய ப2லம் ஶ்ருணு॥ விஹாய ஸகலம் பாபம் ஸஹஸ்ராதி3த்ய ஸந்நிப4:। ஜ்யோதிஷ்மதா விமாநேந விஷ்ணுலோகே மஹீயதே॥) என்று பாபநிவ்ருத்தி பூர்வகமான ப4க3வத் ப்ராப்திக்கு ஸாத4நமாகச் சொல்லப்படுகிற திருவிளக்கெரிக்கை, அப்படி விரோதி4நிவ்ருத்தி பூர்வக ப4க3வத் ப்ராப்தி ஸாத4நமாகச் சொல்லப்படும் திருமாலையெடுக்கை முதலாக ஸாத4நபு3த்3த்4யா செய்யப்படுமவையும்—என்கை.

இனி, ஸர்வஶப்3த3ார்த்த2த்தை அருளிச்செய்கிறார், 'ஸர்வ ஶப்3த3த்தாலே' என்று தொடங்கி.

**மூ. 196. ஸர்வ ஶப்3த3த்தாலே அவ்வவஸாத4ந விஶேஷங்களை அநுஷ்டி2க்குமிடத்தில் அவற்றுக்கு யோக்3யதாபாத3கங்களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது.**

வ்யா:—அதாவது—த4ர்மவிஶேஷணமான ஸர்வஶப்3த3த்தாலே ப3ஹுவசநோக்தமான அவ்வோ ஸாத4ந விஶேஷங்களை அநுஷ்டி2க்கும் இடத்தில் 169. "सन्ध्याहीनोऽशुचिर्नित्यमनर्हः सर्वकर्मसु" (ஸந்த்4யாஹீநோऽஶுசிர் நித்யம் அநர்ஹஸ் ஸர்வ கர்மஸு) என்கிறபடியே அயோக்3யனாகாமல், தன்னை அநுஷ்டி2க்கையாலே அவற்றுக்கு யோக்3யனாகையை உண்டாக்கிக் கொடுக்கும் ஸந்த்4யாவந்த3ந பஞ்சமஹாயஜ்ஞாதி3களான நித்யகர்மங்களைச் சொல்லுகிறது—என்கை.

உக்தத்தை நிக3மிக்கிறார் 'ஆக' என்றுதொடங்கி.

மூ. 197. ஆக, ஶ்ருதி ஸ்ம்ருதி சோதி₃தங்களாய் நித்யநைமித்திகாதி₃ ரூபங்களான கர்மயோக₃ாத்₃யுபாயங்களை என்றபடி.

வ்யா:—அதாவது-ஆக, கீழ்ச்சொன்ன எல்லாவற்றாலும் *170.* "चोदनालक्षणार्थो धर्मः" (சோத₃நாலக்ஷணோர்த்தோ₂ த₄ர்ம:) என்று சோத₃னையாகிற விதி₄வாக்யத்தை ப்ரமாணமாக வுடைத்தான அர்த்த₂ம் த₄ர்மம் என்கையாலே, ஶ்ருதி ஸ்ம்ருதிகளாகிற ப்ரமாணங்களாலே விதி₄க்கப்பட்டுள்ளவையாய், நித்யம் நைமித்திகம் முதலானவற்றை வடிவாக வுடைத்தான கர்மயோக₃ம் தொடக்கமான உபாயங்களை யென்றபடி—என்கை.

ஸ்வரூபவிருத்₃த₄த்வாத் அத₄ர்மமாகச் சொல்லவேண்டுமவற்றை த₄ர்மம் என்கிறதுக்கு ஹேதுவை அருளிச்செய்கிறார் 'இவற்றை' என்றுதொடங்கி.

மூ. 198. இவற்றை, த₄ர்மம் என்கிறது—ப்₄ரமித்த அர்ஜுநன் கருத்தாலே.

வ்யா:— அதாவது-ப₄க₃வத₃த்யந்த பாரதந்த்ர்யமாகிற உத்₃தே₃ஶ்யத்துக்கு விரோதி₄யாயிருக்கையாலே அத₄ர்மஶப்₃த₃வாச்யங்களாக ப்ராப்தங்களாயிருக்கிற இவற்றை த₄ர்மமென்று சொல்லுகிறது. ஸ்வத₄ர்மமான யுத்₃த₄த்தை அத₄ர்மம் என்றும், இவற்றை த₄ர்மம் என்றும் ப்₄ரமித்த அர்ஜுநனுடைய நினைவாலேயித்தனை—என்கை. ஆக, ப்ரத₂மபத₃ார்த்த₂த்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம், த்₃விதீயபத₃த்தை உபாத₃ாநம் பண்ணுகிறார் 'பரித்யஜ்ய' என்று.

மூ. 199. பரித்யஜ்ய.

*இதுவும், த்யாக₃மும் ல்யப்பும் உபஸர்க்க₃முமாய், த்ரி ப்ரகாரமாயிருக்கையாலே, அதில் த்யாக₃வேஷத்தை முந்துற அருளிச்செய்கிறார் 'த்யாக₃மாவது' என்றுதொடங்கி.*

**மூ. 200. த்யாக₃மாவது-உக்தோபாயங்களை அநுஸந்தி₄த்து, 'ஶுக்திகையிலே ரஜதபு₃த்₃தி₄ பண்ணுவாரைப் போலேயும், விபரீததி₃ஶா க₃மநம் பண்ணுவாரைப் போலேயும் அநுபாயங்களிலே உபாயபு₃த்₃தி₄ பண்ணினோம்' என்கிற பு₃த்₃தி₄விஶேஷத்தோடே த்யஜிக்கை.**

*வ்யா:—அதாவது—இவ்விடத்திற் சொல்லுகிற த்யாக₃மாவது—கேவலம் விடுகை அன்று; கீழ்ச்சொல்லப்பட்ட உபாயங்களின்படியை அநுஸந்தி₄த்து, 'ரஜதமல்லாத ஶுக்திகையிலே ரஜதபு₃த்₃தி₄ பண்ணுவாரைப்போலேயும், ஸ்வகார்யஸித்₃தி₄க்கு உடலான ஒருதி₃க்கிலே போகக்கோலித் தத்₃விபரீதமான தி₃க்கை அதுவாக நினைத்துப் போவாரைப் போலேயும், ப₄க₃வத்ப்ராப்த்யுபாயாபேக்ஷரான நாம் உபாயமல்லாதவற்றிலே உபாயபு₃த்₃தி₄ பண்ணினோம்' என்கிற பு₃த்₃தி₄விஶேஷத்தோடே விடுகை—என்றபடி.*

*இனி, உபஸர்க்க₃ார்த்த₂த்தை அருளிச்செய்கிறார் 'பரி என்கிற' என்று தொடங்கி.*

**மூ.201. 'பரி' என்கிற உபஸர்க்க₃த்தாலே-பாதகாதி₃களை விடுமாபோலே ருசி வாஸனைகளோடும் லஜ்ஜையோடுங்கூட மறுவலிடாதபடி விடவேணுமென்கிறது.**

*வ்யா:— அதாவது- 'பரி ஸாகல்யே' என்று ஸாகல்யபரமாகக் கொள்ளுமளவில், அது ஸர்வஶப்₃த₃த்திலே உக்தமாகையாலே அபேக்ஷித மல்லாமையாலே, மிகுதிக்கு வாசகமான பரியென்கிற இந்த உபஸர்க்க₃த்தாலே—171.* **"ब्रह्महत्या सुरापानं स्तेयं गुर्वङ्गनागमः"** *(ப்₃ரஹ்மஹத்யா ஸுராபாநம் ஸ்தேயம்*

கு₃ர்வங்க₃நாக₃ம:) என்கிற பாதகங்கள் முதலானவற்றை விடுமளவில் அவற்றில் புநரந்வயத்துக்கு உறுப்பான ருசி வாஸனைகளோடேகூட 'நாம் இதைச்செய்வதே!' என்கிற லஜ்ஜாஸஹிதனுய்க்கொண்டு விடுமாபோலே. 172. "अथ पातकभीतस्त्वं" (அத₂ பாதகபீ₄தஸ் த்வம்) என்று த₄ர்மதே₃வதை பாதகமாகச் சொன்ன உபாயாந்தரங்களை விடுமளவில், பு₃த்₃தி₄பூர்வகமாக அவற்றிலே ப்ரவர்த்திக்கைக்கு உறுப்பான ருசியும் அபு₃த்₃தி₄பூர்வகமாக மூளுகைக்கு உறுப்பான வாஸனையும் ஆகிற அவற்ருேடே கூட 'ப₄க₃வதே₃க ஸாத₄நதைகவேஷமான ஸ்வஸ்வரூபத்துக்கு அத்யந்த விருத்₃த₄மானவற்றை நாம் செய்வதே!' என்கிற லஜ்ஜா ஸஹிதனுய்க்கொண்டு மீளவும் அவற்றில் அந்வயம் வாராதபடி விடவேணுமென்று சொல்லுகிறது—என்கை.

இனி, 'ல்யப்' அர்த்த₂த்தை அருளிச்செய்கிருர் 'ல்யப் பாலே' என்றுதொடங்கி.

**மூ. 202. ல்யப்பாலே "ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத" என்னுமாபோலே, உபாயாந்தரங்களைவிட்டே பற்ற வேணும் என்கிறது.**

வ்யா:—அதாவது—'(பரி)த்யஜ்ய' என்கிற ல்யப்பாலே 173. "भुक्त्वा चान्द्रायणं चरेत्" (பு₄க்த்வா சாந்த்₃ராயணம் சரேத்) என்னுமாபோலன்றிக்கே, 174. "स्नात्वा भुञ्जीत" (ஸ்நாத்வா பு₄ஞ்ஜீத) என்கிற விதி₄ 'புஜிக்குமளவில் ஸ்நாநம்பண்ணியே பு₄ஜிக்கவேணும்' என்கிற நியமத்தைச் சொல்லுமாபோலே, ஸித்₃தோ₄பாயத்தைப் பரிக்₃ரஹிக்குமளவில் த்யாஜ்யமான உபாயாந்தரங்களை த்யஜித்தே பரிக்₃ரஹிக்கவேணுமென்கிற நியமத்தைச் சொல்லுகிறது—என்கை.

இப்படி விட்டேபற்றவேணுமென்கிற இதன் கருத்தைத் அருளிச்செய்கிருர் 'சசால' என்றுதொடங்கி.

மூ. 203. "சசால சாபஞ்ச முமோச வீர:" என்கிற படியே இவை அநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால் கட்டு என்கிறது.

வ்யா:— அதாவது— 175. "यो वज्रपाताशनिसन्निपातान्न चुक्षुभे नापि चचाल राजा। स रामबाणाभिहतो भृशार्तश्चचाल चापञ्च मुमोच वीरः॥" (யோ வஜ்ரபாதாஶநிஸந்நிபாதாந் ந சுக்ஷுபே₄ நாபி சசால ராஜா। ஸ ராமபா₃ணாபி₄ஹதோ ப்₄ருஶார்த்த: சசால சாபஞ்ச முமோச வீர:॥) என்கிற ஶ்லோகத்தில்— ராவணன் ராமஶரங்களாலே மிகவும் ஈடுபட்டு, நிலைகலங்கி, போகப் பார்த்தவளவிலும், கையில் வில்லிருக்குமளவும் பெருமாள் போகவொட்டாமையாலே பின்பு போகட்ட வில்லு கையில் இருந்தபோது ப்ரதிபக்ஷ ஜயத்துக்கு ஸாத₄ந மாகாதமாத்ரமன்றிக்கே 176. "गच्छानुजानामि" (க₃ச்ச₂ாநுஜா நாமி) என்று பின்பு பண்ணின அநுமதி பெருமாள் அப் போது பண்ணக்கூறாமையாலே போகவுமொண்ணாதபடி கால்கட்டானமையைச் சொல்லுகிறபடியே, உபாயாந்தரங்க ளான இவற்றிலே ஈஷத₃ந்வயங் கிடக்கிலும் இவை பேற்றுக்கு ஸாத₄நமாகாத மாத்ரமன்றிக்கே பேற்றுக்கு ப்ரதிப₃ந்த₄கமாய்த் தலைக்கட்டும்—என்றபடி.

இன்னமும், இவற்றில் அந்வயம் இழவுக்கு உடலா மென்னுமத்தை ஸத்₃ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் 'சக்ர வர்த்தியைப்போலே இழக்கைக்கு உறுப்பு என்று.

மூ. 204. சக்ரவர்த்தியைப்போலே இழக்கைக்கு உறுப்பு.

வ்யா:—அதாவது-முன்பே வரப்ரதா₃நத்தைப் பண்ணி வைத்து, இப்போதாக மறுக்கவொண்ணாதென்று ஆப₄ாஸ மான ஸத்யத₄ர்மத்தைப்பற்றி நின்று 177. "रामो विग्रहवान् धर्मः" (ராமோ விக்₃ரஹவாந் த₄ர்ம:) என்கிற பெருமாளோடே கூடி வாழ இருந்த பேற்றை இழந்த சக்ரவர்த்தியைப்போலே

ஆபத்₄ரஸமான உபாயாந்தரங்களிலே அந்வயித்து நிற்கை யாகிறது 178. "कृष्णं धर्मं सनातनं" (க்ருஷ்ணம் த₄ர்மம் ஸநா தநம்) என்று ஸநாதநத₄ர்மமான ப₄க₃வத்₃விஷயத்தோடே கூடி வாழுகையாகிற பேற்றை இழக்கைக்கு உறுப்பாய் விடும்—என்கை.

இனி, இங்குச்சொன்ன ஸர்வத₄ர்ம பரித்யாக₃த்தின் கருத்து அறியாதார் சொல்லும் தூ₃ஷணத்தைப் பரிஹரிக் கைக்காக, தத்பக்ஷத்தை உத்க்ஷேபிக்கிறார் 'ஸர்வத₄ர்மங் களையும்' என்று தொடங்கி.

**மூ.205. ஸர்வத₄ர்மங்களையும்விட்டு என்று சொல் லுகையாலே, சிலர் 'அத₄ர்மங்கள் புகுரும்' என்றார்கள்.**

வ்யா:-அதாவது-த்யாஜ்யமான த₄ர்மந்தான் 'இத₃ம் குரு, இத₃ம் மாகார்ஷீ:' என்று விதி₄நிஷேதா₄த்மகமாயிருக்கை யாலே'ஸர்வத₄ர்மங்களையும் விட்டு'என்று சொல்லுகையாலே விஹிதாநுஷ்டா₂நத்தோபாதி நிஷித்₃த₄பரிஹாரமும் ஒக்கத் தள்ளுண்ணுமளவில், அடைத்த கதவைத் திறந்தால் நிஹீந பதா₂ர்த்த₂ங்கள் புகுருமாபோலே அத₄ர்மங்களான நிஷித்₃த₄ ப்ரவ்ருத்திகள் புகுருமென்று சிலர் சொன்னார்கள்—என்கை.

அத்தைப் பரிஹரிக்கிறார் 'அதுகூடாது; அத₄ர்மங்களைச் செய் என்று சொல்லாமையாலே' என்று.

**மூ. 206. அது கூடாது; 'அத₄ர்மங்களைச்செய்' என்று சொல்லாமையாலே.**

வ்யா:—அதாவது—ஸர்வத₄ர்மங்களையும் விடச்சொன்ன இத்தால் அத₄ர்மங்கள் புகுருமென்கிற இது ஸம்ப₄வியாது; த₄ர்மங்களை விடச்சொன்ன மாத்ரமொழிய அத₄ர்மங்களைச் செய்யென்று சொல்லாமையாலே—என்கை.

'அத₄ர்மநிவ்ருத்தியும் த₄ர்மஶப்₃த₃ வாச்யமாகையாலே, அத்தைவிடச்சொன்னால், அத₄ர்மத்தைச் செய்யென்னுமிடம்

அர்த்தாத் உக்தமாகாதோ?' என்கிற ப்ரதிவாத்யுக்தியை அநுவதிக்கிறார் 'தன்னடையே சொல்லிற்றாகாதோவென்னில்' என்று.

**மூ. 207. 'தன்னடையே சொல்லிற்றாகாதோ?' என்னில்,–**

அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் 'ஆகாது; தர்மஶப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டாமையாலே' என்று.

**மூ. 208. ஆகாது; தர்மஶப்தம் அதர்மநிவ்ருத்தியைக் காட்டாமையாலே.**

வ்யா:—அதாவது–தர்மங்களை விடச்சொன்ன இத்தால் 'அதர்மங்களைச் செய்' என்னுமிடம் தன்னடையே சொல்லிற்றாகாது; தர்மஶப்தம் அதர்மநிவ்ருத்த்யாதி அங்க ஸஹிதமாய், ப்ரதாநமாயிருந்துள்ள விஹிதாநுஷ்டாநத்தைக் காட்டுமதொழிய, ஸாமாந்யேந அதர்ம நிவ்ருத்தி மாத்ரத்தைக் காட்டாமையாலே—என்கை.

"அதர்மநிவ்ருத்திக்கு தர்மஶப்தவாச்யத்வம் முக்யமாக இல்லையேயாகிலும், ஸர்வஶப்த ஸாஹித்யத்தாலே தர்மஶப்தம் விஶேஷணபூதமான இதுதன்னையுங் காட்டாதோ?" என்ன, அருளிச்செய்கிறார் 'காட்டினாலும்' என்று தொடங்கி.

**மூ. 209. காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்றாமித்தனை.**

வ்யா:—அதாவது—அப்படிக் காட்டிற்றாகிலும், அது இவ்விடத்தில் விவக்ஷிதமல்லாமையாலே, அத்தையொழிந்த விஹிதாநுஷ்டாநரூப தர்மங்களானவற்றைச் சொல்லிற்றாமித்தனை—என்கை.

'இங்ஙன் ஒதுக்குகிறது என்கொண்டு?' என்ன, அருளிச்செய்கிறார் 'தன்னையும்' என்று தொடங்கி.

**மூ.210. தன்னையும், ஈஶ்வரனையும், ப₂லத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை.**

வ்யா:— அதாவது—அத₄ர்மாநுஷ்டா₂நம் ஶேஷிக்கு அநிஷ்டமாகையாலே, அவனுக்கு அதிஶயகரனுமது ஒழிய அநிஷ்டகரனைகை சேராதபடியான ஸ்வரூபத்தையுடைய தன்னைப் பார்த்தாலும், ஸஹாயாந்தர ஸம்ஸர்க்க₃ாஸஹநதை யாலே இத்தலையில் ஸ்வயத்ந நிவ்ருத்தியொழிய ப்ரவ்ருத்யம் ஶத்தில் ஒன்றையும் பொறாத உபாயபூ₄தனான ஈஶ்வரனைப் பார்த்தாலும், இவனுடைய ப்ரவ்ருத்திக்கு ப₂லம் அவ னுடைய ப்ரீதியாகையாலே தாத்₃ருஶமான ப₂லத்தைப் பார்த்தாலும், இம்மூன்றுக்கும் விருத்₃த₄ங்களான அவை புகுரவழியில்லை-என்கை. ஆகையால் த₄ர்மஶப்₃த₃ம் அத₄ர்ம நிவ்ருத்தியைக் காட்டிற்றாகிலும் அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்றாகக் கொள்ளவேணும் என்று கருத்து.

அநந்தரம் த்ருதீயபத₃த்தை உபாதா₃நம் பண்ணுகிறார் 'மாம்' என்று; அதுக்கு அர்த்த₂ம் அருளிச்செய்கிறார் 'ஸர்வ ரக்ஷகனாய்' என்று தொடங்கி.

**மூ. 211. மாம்—ஸர்வரக்ஷகனாய், உனக்குக் கையா ளாய், உன்னிசைவுபார்த்து, உன் தோ₃ஷத்தை போ₄க்₃யமாகக் கொண்டு, உனக்குப்புகலாய், நீர்சுடுமா போலே சேர்ப்பாரே பிரிக்கும்போதும் விடமாட்டாதே ரக்ஷிக்கிற என்னை.**

வ்யா:— அதாவது— 'நம்முடைய ரக்ஷணம் இவன் பண்ணுமோ? பண்ணானோ?' என்று ஸம்ஶயிக்கவேண்டாதபடி ஸர்வருடையவும் ரக்ஷணத்தில் தீ₃க்ஷிதனாய், 'தன்பெருமை யையும் நம் சிறுமையையும் பார்த்து நம்மோடு கலப்பற்று இருக்குமோ?' என்ன வேண்டாதபடி 179 "सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय" (ஸேநயோருப₄யோர் மத்₄யே ரத₂ம் ஸ்த₂ாபய) என்று ஏவிக்கார்யங்கொள்ளலாம்படி உனக்குக் கையாளாய்,

உன்னை ரக்ஷிக்கையில் உண்டான நசையாலே 180. "रक्ष्यापेक्षां प्रतीक्षते" (ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே) என்கிறபடியே ரக்ஷ்யபூ₄தனுன உன் இசைவுபார்த்து, 'நங்குற்றங்கண்டு இகழுமோ?' என்று அஞ்சவேண்டாதபடி அஸ்தா₂நஸ்நேஹ காருண்ய த₄ர்மாத₄ர்மாதி₄யாகுலனுன உன் தோ₃ஷத்தை போ₄க்₃யமாகக்கொண்டு, அஶரண்யஶரண்யனுகையாலே நீயும் பிறரும் உனக்குத் தஞ்சமல்லாத த₃ஶையில் ஒதுங்கலாம்படியான புகலாய், ஸத்யமேஸ்வபா₄வமான ஜலம் ஔஷ்ண்யத்தைப் பூ₄ஜிக்குமாபோலே அபராத₄க்ஷாமணம் பண்ணி க₄டிப்பிக்கும் புருஷகாரபூ₄தரே /"தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்" என்கிறபடியே குற்றத்தைக்காட்டி அகற்றும் போதும், விடக்ஷமனன்றிக்கே /"என்னடியாரது செய்யார்" என்று மறுதலித்து ஒருதலை நின்று ரக்ஷிக்கும் என்னை— என்கை.

'மாம்' என்று விப₄வரூபத்தைக் காட்டுகையாலே வ்யாவர்த்திக்கப்படுகிறவற்றை அருளிச்செய்கிருர், 'இத்தால்' என்று தொடங்கி.

## மூ.212. இத்தால் பரவ்யூஹங்களையும், தே₃வதாந்தர்யாமித்வத்தையும் தவிர்க்கிறது.

**வ்யா:—** அதாவது— 'என்னை' என்று அவதரித்துக் கண்ணுக்கிலக்காய் அணுகிநிற்கிற தன்னை வரணீயனுகச் சொன்ன இத்தாலே, தே₃ஶவிப்ரக்ருஷ்டதையாலே காணவும் கிட்டவும் ஒண்ணுதபடியிருக்கிற பரவ்யூஹங்களையும், அஸாத₄ரண விக்₃ரஹயுக்தமன்றிக்கே உபாயாந்தர நிஷ்ட₂ர்க்கு உத்₃தே₃ஶ்யமாயிருக்கிறஅக்₃நீந்த்₃ராதி₃ தே₃வதாந்தர்யாமித்வத்தையும் வ்யாவர்த்திக்கிறது—என்கை.

த₄ர்மங்களையெல்லாம் விட்டுத் தன்னைப் பற்றச்சொல்லுகையாலே பூ₂லிதமானதொரு அர்த்த₂ விஶேஷத்தை அருளிச்செய்கிருர் 'த₄ர்ம ஸம்ஸ்தா₂பநம்' என்றுதொடங்கி.

---

/ பெரியாழ்திரு 4-9-2.

**மூ. 213.** த$_4$ர்ம ஸம்ஸ்தா$_2$பநம் பண்ணப்பிறந்தவன்தானே 'ஸர்வ த$_4$ர்மங்களையும் விட்டு என்னைப் பற்று' என்கையாலே ஸாக்ஷாத்$_3$ த$_4$ர்மம் தானேயென்கிறது.

வ்யா:- *அதாவது-181.* "धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे" *(த$_4$ர்ம ஸம்ஸ்தா$_2$பநார்த்தா$_2$ய ஸம்ப$_4$வாமி யுகே$_3$ யுகே$_3$) என்கிறபடியே ஸ்வப்ராப்திக்கு உடலான த$_4$ர்மத்தை ஸ்தா$_2$பிப்பதாகப் பிறந்தவன்தானே-'ஸர்வத$_4$ர்மாந் பரித்யஜ்ய' என்று 'மோக்ஷஸாத$_4$நதயா ஶாஸ்த்ரஸித்$_3$த$_4$ங்களான ஸர்வத$_4$ர்மங்களையும்விட்டு என்னைப்பற்று' என்று சொல்லுகையாலே. அவை ஸாக்ஷாத்$_3$ த$_4$ர்மங்களன்று. ஸ்தா$_2$பநீயமான ஸாக்ஷாத் த$_4$ர்மம் 182.*"कृष्णं धर्मं सनातनं" (க்ருஷ்ணம் த$_4$ர்மம் ஸநாதநம்) *என்று ஸநாதநத$_4$ர்மமான தானேயென்னுமிடம் சொல்லுகிறது—என்கை.*

*'இத்தால் என் சொல்லுகிறது?' என்ன, அருளிச்செய்கிறார் 'இத்தால் விட்ட ஸாத$_4$நங்களில் ஏற்றஞ்சொல்லுகிறது' என்று.*

**மூ. 214.** இத்தால், விட்ட ஸாத$_4$நங்களில் ஏற்றஞ் சொல்லுகிறது.

வ்யா:—*அதாவது—இப்படிச்சொன்ன இத்தால், கீழ் விட்ட ஸாத$_4$நங்களிற் காட்டில் இந்த ஸாத$_4$நத்துக்கு உண்டான ஏற்றஞ்சொல்லுகிறது—என்கை.*

*'அதுதான் எது?' என்ன, அருளிச்செய்கிறார் 'அதாவது' என்று தொடங்கி.*

**மூ. 215.** அதாவது—ஸித்$_3$த$_4$மாய், பரமசேதநமாய், ஸர்வஶக்தியாய், நிரபாயமாய், ப்ராப்தமாய், ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை.

வ்யா:—இத்தால், கீழ்விட்ட ஸாத₄நங்களிற் காட்டில் இதுக்கு ஏற்றமாவது,-சேதநப்ரவ்ருத்தியாலே தன்ஸ்வரூப ஸித்₃தி₄யாம்படி இருக்கையன்றிக்கே ஸநாதந த₄ர்மமாகை யாலே ஸித்₃த₄மாய், *183.* "यस्सर्वज्ञः सर्ववित्" (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) இத்யாதி₃களிற் சொல்லுகிற ஸர்வஜ்ஞ விஷயமாகையாலே பரமசேதநமாய், *184.* "परास्य शक्तिर्विविधैव श्रूयते" (பரா஽ஸ்ய ஶக்திர் விவிதை₄வ ஶ்ரூயதே) என்கிறபடியே ஸர்வஶக்தியாய், சேதநஸாத்₄யமாய் நடுவே அபாயங்கள் புகுருகைக்கு அவகாஶமுண்டாம்படியிருக்கை யன்றிக்கே ஸித்₃த₄வஸ்துவாயிருக்கையாலே நிரபாயமாய், பரதந்த்ரனான இச்சேதநனுடைய ஸ்வரூபத்துக்கு அப்ராப்த மாயிராதே ப்ராப்தமாய், கீழ்ச்சொன்ன பரமசேதநத்வாதி₃ களாலே ஸஹாயாந்தர நிரபேக்ஷமாயிருக்கை—என்றபடி.

இந்த ஸஹாயாந்தர நிரபேக்ஷத்வத்தை ஸஹேதுகமாக ஸ்தா₂பிக்கிறார், 'மற்றை உபாயங்கள்' என்று தொடங்கி மேல் மூன்று வாக்யத்தாலே.

**மூ. 216.** மற்றை உபாயங்கள் ஸாத்₄யங்களாகை யாலே, ஸ்வரூப ஸித்₃தி₄யில் சேதநனை அபேக்ஷித்திருக் கும்; அசேதநங்களுமாய், அஶக்தங்களுமாயிருக்கை யாலே கார்யஸித்₃தி₄யில் ஈஶ்வரனை அபேக்ஷித்திருக்கும். இந்த உபாயம் அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கை யாலே, இதர நிரபேக்ஷமாயிருக்கும்.

வ்யா:—அதாவது—இத்தையொழிந்த உபாயங்கள் சேதந ப்ரவ்ருத்தியாலே ஸாதி₄க்கப்படுமவையாகையாலே தம் முடைய ஸ்வரூபஸித்₃தி₄யில் ப்ரவ்ருத்திகரனான சேதநனை அபேக்ஷித்திருக்கும்; இவனுக்குச் செய்யவேண்டுமவை யறிகைக்கும் அதுதன்னைச் செய்து தலைக்கட்டுகைக்கும் யோக்₃யதையில்லாத அசேதநங்களுமாய் அஶக்தங்களுமா யிருக்கையாலே, சேதநனுடைய இஷ்டாநிஷ்டப்ராப்தி

பரிஹாரரூபமான கார்யத்தினுடைய ஸித்₃தி₄யில் 185. "फलमत उपपत्तेः" (ப₂லமத உபபத்தே:) என்கிறபடியே ப₂லப்ரத₃த்வோபயோகி₃யான ஸர்வஶக்தித்வாதி₃ உபபத்தியுடையனான ஈஶ்வரனை அபேக்ஷித்திருக்கும்; இந்த உபாயம் ஸித்₃த₄த்வ பரமசேதநத்வ ஸர்வஶக்தித்வங்களாலே அவற்றுக்கு எதிர்த்தட்டாயிருக்கையாலே. அந்யநிரபேக்ஷமாயிருக்கும்—என்கை.

இனி. இப்பத₃த்திலே ஆஶ்ரயண ஸௌகார்யாபாத₃கங்களான கு₃ணவிஶேஷங்களெல்லாம் ப்ரகாஶிக்கிறபடியை அருளிச்செய்கிறார். 'இதிலே' என்றுதொடங்கி.

**மூ. 217. இதிலே, வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌஶீல்ய ஸௌலப்₄யங்களாகிற கு₃ணவிஶேஷங்கள் நேராக ப்ரகாஶிக்கிறது.**

வ்யா:— அதாவது— அத₄ர்மபு₃த்₃தி₄யாலே த₄ர்மத்தில் நின்றும் நிவ்ருத்தனான அர்ஜுநனுக்குக் குற்றம்பாராதே அபேக்ஷிதார்த்த₂ங்களை அருளிச்செய்கையாலே, வாத்ஸல்யம் ப்ரகாஶிக்கிறது; தன்னுடைய பரத்வத்தைப் பலகாலும் அருளிச்செய்த அளவன்றிக்கே அர்ஜுநன் ப்ரத்யக்ஷிக்கும்படி பண்ணுகையாலே, ஸ்வாமித்வம் ப்ரகாஶிக்கிறது; 186. "हे कृष्ण हे यादव" (ஹே க்ருஷ்ண ஹே யாத₃வ) என்று அர்ஜுநன்தானே சொல்லும்படி இவனோடே கலந்து பரிமாறுகையாலே. ஸௌஶீல்யம் ப்ரகாஶிக்கிறது; அப்ராக்ருதமான திருமேனியைக் கண்ணுக்கு இலக்காம்படி பண்ணுகையாலே, ஸௌலப்₄யம் ப்ரகாஶிக்கிறது—என்கை. "கு₃ணவிஶேஷங்கள்" என்றது. ஆஶ்ரயணத்துக்கு அபேக்ஷிதங்களானவையென்று தோற்றுகைக்காக. 'நேராக ப்ரகாஶிக்கிறது' என்றது—ஸ்பு₂டமாக ப்ரகாஶிக்கிறது—என்றபடி.

இவை எல்லாவற்றிலும் வைத்துக்கொண்டு. மிகவும் அபேக்ஷிதம் ஸௌலப்₄யமாகையாலே, அவதாரப்ரயுக்தமான ஸௌலப்₄யத்தளவன்றிக்கே ஸாரத்₂யேऽவஸ்தி₂தனாய்

நிற்கிற ஸௌலப்4ய அதிஶயத்தை த3ர்ஶிப்பித்தமையை அருளிச்செய்கிறார் 'கையும் உழவுகோலும்' என்று தொடங்கி.

**மூ.218. கையும் உழவுகோலும், பிடித்த சிறுவாய்க் கயிறும், ஸேநாதூ4ளிதூ4ஸரிதமான திருக்குழலும், தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்2யவேஷத்தை 'மாம்' என்று காட்டுகிறான்.**

வ்யா:—அதாவது-குதிரைகளை ப்ரேரித்து நடத்துகைக்காகத் திருக்கையிலே த4ரித்த உழவுகோலும், அவற்றை இடவாய் வலவாய்த்திருப்புகைக்காகவும், நிறுத்தருள வேண்டும் இடத்திலே தாங்கி நிறுத்துகைக்காகவும் பிடித்த சிறுவாய்க்கயிறும், திருமுடியில் ஒன்று ஆச்ச2ாதி3யாமல் நிற்கையாலே ஸேநாதூ4ளியாலே புழுதிபடைத்த திருக்குழலும், * "தேர்கடவிய பெருமான்கனைகழல்" என்கிறபடியே, சாத்தின சிறுசதங்கையுந் தானுமாகத் தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நிற்கிற ஸாரத்2யவேஷத்தை 'என்னை' என்று காட்டுகிறான்—என்கை. ஆக, த்ருதீய பதா3ர்த்த2த்தை அருளிச்செய்தாராயிற்று.

அநந்தரம், சதுர்த்த2பத3த்தை உபாதா3நம் பண்ணுகிறார் 'ஏகம்' என்று.

**மூ. 219. ஏகம்.**

அதுக்கு அர்த்த2ம் அருளிச்செய்கிறார் 'இந்த ஏகஶப்3த3ம்' என்று தொடங்கி.

**மூ. 220. இந்த ஏகஶப்3த3ம் ஸ்தா2நப்ரமாணத்தாலே அவதா4ரணார்த்த2த்தைக் காட்டுகிறது.**

வ்யா:—அதாவது-இவ்வுபாயவிஶேஷத்தைச் சொல்லும் இடங்களிலே பலவிடங்களிலும் அவதா4ரண ப்ரயோக3ம் உண்டாகையாலே, உகாரம்போலே இந்த ஏகஶப்3த3மும்

* திருவாய் 3-6-10.

ஸ்த₂ாநப்ரமாணத்தாலே அவத₄ாரணமாகிற அர்த்த₂த்தைக் காட்டுகிறது—என்கை.

இவ்வுபாயத்தை நிர்த்தே₃ஶித்த அநந்தரம் அவத₄ாரண ப்ரயோக₃ம் பண்ணின வசநங்கள் பலவற்றையும் இதுக்கு உதா₃ஹரணமாக அருளிச்செய்கிறார். 'மாமேவ' என்று தொடங்கி.

மூ.221. "மாமேவ யே ப்ரபத்₃யந்தே" "தமேவ சாத்₃யம்" "த்வமேவோபாய பூ₄தோ மே ப₄வ" *"ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே.

வ்யா:— அதாவது—187. "मामेव ये प्रपद्यन्ते" (மாமேவ யே ப்ரபத்₃யந்தே) என்று என்னையே யாவர் சிலர் ப்ரபத்தி பண்ணுகிறார்கள் என்றும். 188. "तमेव चाद्यं पुरुषं प्रपद्ये" (தமேவ சாத்₃யம் புருஷம் ப்ரபத்₃யே) என்று ஆத்₃யனான அந்தப் புருஷனையே ப்ரபத்திபண்ணுகிறேன் என்றும். 189. "त्वमेवोपायभूतो मे भव" (த்வமேவோபாய பூ₄தோ மே ப₄வ) என்று நீயே எனக்கு உபாயமாகவேணும் என்றும். * "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று 'எனக்கு உபாயந்தருகிற இடத்தில் உன் திருவடிகளையே உபாயமாகத் தந்தாயென்றுஞ் சொல்லுகிற இவ்விடங்களில். "மாமேவ" "தமேவ" "த்வமேவ" "நின் பாதமே" என்று ஸ்வீகார்யவஸ்து நிர்த்தே₃ஶாநந்தரம் அவத₄ாரணத்தைச் சொல்லுகிற ப்ரகாரத்திலே—என்கை.

'ஏதத்₃வ்யாவர்த்யம் எது' என்ன. அருளிச்செய்கிறார் 'இத்தால்' என்று தொடங்கி.

மூ. 222. இத்தால், 'வ்ரஜ' என்கிற ஸ்வீகாரத்தில் உபாயப₄ாவத்தைத் தவிர்க்கிறது.

* திருவாய் 5-7-10.

வ்யா:— அதாவது—உபாயாந்தரங்கள் வ்யாவர்த்யமாமளவில் பௌநருக்த்யம் ப்ரஸங்கிக்கையாலும், தேவதாந்தரங்கள் வ்யாவர்த்யமாமளவில் 'மாம்' என்று அஸாதாரணாகாரத்தைச் சொல்லுகையாலே அது கீழே ஸித்தமாகையாலும், இந்த அவதாரணத்தால் 'வ்ரஜ' என்று மேல் சொல்லுகிற ஸ்வீகாரத்தில் உபாயத்வத்தைக் கழிக்கிறது—என்கை. இந்த ஸ்வீகாரந்தானும் அந்வய வ்யதிரேகத்தாலே ஸாதநம் என்று நினைக்கலாயிருக்கையாலே, இதன் ஸாதநத்வம் அவஶ்யம் கழிக்கவேணுமிறே.

* 'ஸ்வீகாராநந்தரமொழிய உபாயம் கார்யகரமாகாமையாலே பேற்றுக்கு இது அவஶ்யம் வேண்டியிருக்க, இதில் உபாயத்வத்தைக் கழிக்கிறபடிதான் எங்ஙனே?' என்ன, அருளிச்செய்கிறார் 'ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது' என்று.

## மூ.223. ஸ்வீகாரந்தானும் அவனாலே வந்தது.

வ்யா:—அதாவது-ஸ்வீகாராநந்தரம் இவனுக்கு அநிஷ்டநிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகையாகிற இது அவனாலே ஆனாற்போலே தத்பூர்வபாவியான ஸ்வீகாரந்தானும் அவனாலே உண்டானது—என்கை. இத்தால். ஸ்வீகாரத்துக்கு உபாயகார்யத்வமொழிய உபாயத்வம் இல்லை என்றதாயிற்று.

'அவனாலே வருகையாவது என்?' என்ன, அருளிச்செய்கிறார் 'ஸ்ருஷ்டி' என்று தொடங்கி.

## மூ.224. ஸ்ருஷ்ட்யவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷிபலம்.

வ்யா:— அதாவது—கரணகளேபரவிதுரனாய், போக மோக்ஷஶூந்யனாய், அசித்விஶேஷிதனாய்க் கிடக்கிற தஶையிலே, கரணகளேபர விஶிஷ்டனாய், ஜ்ஞாநவிகாஸயுக்தனும்

